# கண் திறக்குமா?

விந்தன்

அருந்ததி நிலையம்
19 கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை - 600 017.

‘‘தவறுகளை வெளியே நிறுத்திக் கதவைத் தாளிடுவாயானால், உண்மையும் வெளியே நின்றுவிடும்.’’

**– தாகூர்**

# வயிறும் வாழ்வும்

அப்போது 'கல்கி' காரியாலயத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த காலம். பணி என்றால் அன்புப் பணி அல்ல; பணத்துக்காக ஆற்றிக் கொண்டிருந்த பணிதான்!

ஒரு நாள் நண்பர் ஒருவர், "ஸார், உங்களை ஒருவர் தூக்கி யடித்துவிட்டார்!" என்று உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டே என் அறைக்குள் நுழைந்தார்.

அதைக் கேட்டதும் திடுக்கிட்டு என்னை நானே தொட்டுப் பார்த்துக்கொண்டேன். "உங்களை என்றால் உங்களை அல்ல; உங்கள் கதைகளை!" என்றார் நண்பர்.

"ஐயோ பாவம். என்னுடைய கதைகள் அவரை என்ன செய்தனவோ?"

"வேறொன்றும் செய்யவில்லை; உங்களைப் போலவே அவரையும் எழுத வைத்துவிட்டன!"

"ரொம்ப சந்தோஷம். அதை விடப் பெருமை வேறென்ன வேண்டும், ஓர் எழுத்தாளனுக்கு?"

"பெருமையாவது! ஆசிரியர் கல்கி அவர்கள் பார்த்தால் நீங்கள்தான் வேறொரு புனைபெயரில் அந்தக் கதையை எழுதுகிறீர்களாக்கும் என்று எண்ணி உங்களைக் கட்டாயம் வீட்டுக்கு அனுப்பிவிடுவார், ஜாக்கிரதை!" என்று நண்பர் எச்சரித்தார்.

இந்தச் சம்பவத்துக்குப் பின் ஒரு நாள் அமரர் கல்கி அவர்கள் என்னைத் தம் வீட்டுக்கு வருமாறு பணித்தார்கள்; சென்றேன். கையில் திறந்த பத்திரிகையொன்றை வைத்துக்கொண்டு ஏதோ யோசித்த வண்ணம் அப்படியும்

இப்படியுமாகத் தம் அறையில் அவர்கள் நடைபோட்டுக் கொண்டிருந்தார்கள்.

"அழைத்தீர்களாமே?" என்றேன் நான்.

"கல்கி காரியாலத்தில் வேலைபார்க்கும் நீங்கள் வேறெந்தப் பத்திரிகைக்கும் கதையோ கட்டுரையோ எழுதக் கூடாது என்ற விஷயம் உங்களுக்குத் தெரியுமா?" என்று தமக்கே உரித்தான கம்பீரத்துடன் அவர்கள் கேட்டார்கள்.

"தெரியும்!" என்றேன் நான்.

"சரி, இந்தப் பத்திரிகையில் வெளியாகியிருக்கும் தொடர்கதை யாருடைய தொடர்கதை?"

"தெரியாது!"

"உங்களுடைய தொடர்கதை என்று பலர் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்களே, அதற்கு என்ன சொல் கிறீர்கள்?"

"அவர்கள் ஒரு வேளை என்னுடைய விரோதிகளா யிருக்கலாம்!"

"இல்லை; உங்களுடைய அபிமானிகள்தான் அப்படி எழுதியிருக்கிறார்கள். அத்துடன், 'கல்கி'யில் ஏன் அவர் தொடர்கதை எழுதக்கூடாது என்றும் கேட்டிருக் கிறார்கள்."

'அவர்கள் நாசமாய்ப் போகட்டும்!' என்று மனத்துக்குள் சபித்துக்கொண்டே நான் பலிபீடத்தில் நிற்கும் ஆடு போல் நின்றேன்.

அதற்குப் பின் ஆசிரியர் அவர்கள் என்ன நினைத் தார்களோ, என்னமோ, "சரி, போய் வாருங்கள்!" என்று என்னை அனுப்பிவிட்டார்கள்.

*வீட்டுக்கல்ல; காரியாலயத்துக்குத்தான்!*

அதன் விளைவே 'கல்கி'யில் தொடர்ந்து வெளியாகி, உங்கள் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்த 'பாலும் பாவையு'மாகும்.

இத்தகைய புயலுக்கும் பூகம்பத்துக்கும் என்னை உள்ளாக்கி, நண்பர் திரு. முருகு சுப்பிரமணியம் அவர்களை 'பொன்னி' வாசகர்களிடம் திண்டாட வைத்த கதையே 'கண் திறக்குமா?' கதை; அதற்காக நான் எடுத்த அவதாரமே 'நக்கீரன்' அவதாரம்!

ஏன் எடுத்தேன்? காலமெல்லாம் என்னைத் தொழுது, கடைசியில் இரணியன் கையிலோ முதலையின் வாயிலோ சிக்கிக்கொண்ட பக்தனைக் காப்பாற்றவா? இல்லை, என்னை நானே காப்பாற்றிக் கொள்ளத்தான்!

வாழ்வதற்காக வயிறு செய்யத் தூண்டும் எத்தனையோ தவறுகளில் அதையும் ஒன்றாகப்பாவித்து என்னை அன்று மன்னித்துவிட்ட ஆசிரியர் கல்கி அவர்களோ இன்று அமரராகிவிட்டார்; அந்தத் தவறைத் தாம் செய்த தவறாகக் கருதி இன்னல் பலவற்றுக்கு உள்ளான திரு. முருகு சுப்பிரமணியம் அவர்களோ இன்று தமிழ்ப் பெரு மக்களால் நாடு கடத்தப்பட்டு விட்டார்! - ஆம், அவர்களுக்காக அசல் தமிழ்ப்பத்திரிகையொன்றை நடத்தியதே அவர் செய்த குற்றம் - அதற்காகவே இன்று அவர் மலேயாவுக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்!

இந்நிலையில் நீண்ட நாட்களுக்குப் பின் நூல் வடிவம் பெற்று வரும் இக்கதை, என்னை இன்னும் என்ன பாடுபடுத்தப் போகிறதோ, தெரியவில்லை!

அன்பு,
**விந்தன்**

*1.4.1956*
சென்னை

# கண் திறக்குமா?

## கதையின் கதை

பணக்காரனாகட்டும் பரம தரித்திரனாகட்டும், படித்தவனாகட்டும் படியாதவனாகட்டும், இந்த உலகத்தில் உயிர் வாழ்ந்திருக்க வேண்டுமானால் பிறருடைய உதவியை ஏதாவது ஒருவிதத்தில் நாடத்தான் வேண்டியிருக்கிறது. அவ்வாறு நாடவில்லையானால் எமன் வந்து நம் வீட்டுக் கதவைத் தட்டுவதற்குப் பதிலாக நாமே சென்று அவன் வீட்டுக் கதவைத் தட்டும்படி ஆகிவிடுகிறது - தயவு தாட்சண்யமின்றிப் பொதுஜன சேவையில் ஈடுபட்டிருப்பதாகச் சொல்லிக்கொள்ளும் தியாகிகள்கூட உண்மையில் மேற்கூறிய நிலையில் உள்ளவர்களே!

இல்லையென்றால் அவர்கள் 'தியாகிகள்' என்று வெறும் பெயராவது எடுத்திருக்க முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? - அதுதான் இல்லை. ஏனெனில், தினசரி வாழ்க்கையில் எத்தனையோ தியாகிகள் இருக்கும் இடம் தெரியாமல் இருப்பதை நாம் பார்க்கிறோம். காரணம் என்னவென்று நீங்கள் ஆராய்ந்து பார்க்கும் போது - ஒன்று, அவர்கள் பணம் இல்லாதவர்களாயிருப்பார்கள்;

அல்லது, பிறருடைய உதவியை எந்த நிலையிலும் எந்த விதத்திலும் நாட விருப்பமில்லாதவர்களாயிருப்பார்கள்.

இவர்களுடைய சபலம் என்ன தெரியுமா? - பொது ஜனங்களே வலுவில் வந்து, தங்களுடைய தன்னலத் தியாகத்தையும் சேவா உணர்ச்சியையும் போற்றிப் புகழ்ந்து, தங்களுக்கு வேண்டிய அன்பையும் ஆதரவை யும் அளிப்பார்கள் என்பதுதான்! - அதாவது, 'சத்தியம் ஜெயிக்கும்' என்பது இவர்களுடைய அசைக்க முடியாத நம்பிக்கை. இந்த உலகத்தில் தற்சமயம் இல்லாத ஒன்றை நம்பி, இருக்க இடமும், உடுக்க உடையும் தின்ன உணவும் இன்றிப் பிறர் உயர நிற்கும் ஏணிகளாய், ஏகாங்கிகளாய், சமூகத்தில் நடைப் பிணங்களாய்த் திகழ்பவர்கள் இவர்கள்!

பொதுவாகத் தனக்கு உதவி செய்யக்கூடியவர்களிடம் என்னதான் குற்றங்குறைகள் கண்டாலும் மனிதன் கூடியவரை அவற்றை மூடிவைக்கவே முயற்சி செய் கிறான். இவ்வாறு செய்வது, தன் சொந்தத் தேவைகளை அவன் பூர்த்தி செய்து கொள்வதற்கு அத்தியாவசியமாக இருக்கிறது. தன்னலகத்துக்காக மனிதன் சாகும் வரை மேற் கூறிய முறையைக் கைக்கொண்டிருந்துவிட்டுக் கடைசியில் செத்தும் தொலைந்துவிடுகிறான்! - இதனால் எத்தனையோ உண்மைகளை உலகம் கடைசிவரை அறிய முடியாமலே போய்விடுகிறது. ஏய்க்கும் கூட்டம் என்றைக்கும் தன் இஷ்டம்போல் ஏய்த்து வாழ்ந்து கொண்டிருப்பதற்கும், ஏமாந்த கூட்டம் எப்பொழுதும் ஏமாந்து மடிந்து கொண்டிருப்பதற்கும் ஏதுவாகி விடுகிறது. தப்பித்தவறி இதைப்பற்றி யாராவது ஒருவன் துணிந்து பேசவோ, எழுதவோ ஆரம்பித்துவிட்டால் போதும்; உடனே ஒரு சிலரால் பெரியோர்களாக்கப்பட்ட பெரியோர்கள், அவனைப் பெருந்தன்மையில்லாதவன் என்றும், தமிழர் பண்பை அறியாதவன் என்றும், மிகமிக

அழகான தமிழ் வார்த்தைகளாகப் பொறுக்கியெடுத்துத் தாக்க ஆரம்பித்துவிடுகிறார்கள்!

இந்தப் பெரியோர்களின் கட்சிக்குத் தற்கால உலகத்தில் எதுவுமே உவமையாக எடுத்துச் சொல்லக் கிடைப்ப தில்லை. ஏதோ ஒரு காலத்தில் இந்த உலகத்தில் இருந்து, இப்போது அந்த உலகத்தில் இருக்கிறதாமே அன்னப் பறவை, அதுதான் கிடைக்கிறது. அந்த அதிசயப்பட்சிக்குப் பாலில் தண்ணீரைக் கலந்து வைத்தால், அது தண்ணீரை நீக்கிவிட்டுப் பாலை மட்டும் உறிஞ்சிக் குடிக்குமாம். - பாவம் பால்காரர்கள் பிழைத்துப் போகட்டும் என்று பகவான் இப்போது அவற்றைப் பூலோகத்தில் அவதரிக்க வொட்டாமல் தடுத்துவிட்டாரோ, என்னவோ! - அந்தப் பட்சியைப்போல மனிதனும் யாராவது கெட்ட காரியம் செய்தால் அதை ஒதுக்கித் தள்ளிவிட வேண்டுமாம்; நல்ல காரியம் செய்தால் அதைப் போற்றிப் புகழ்ந்து, ஆடிப் பாடி, ஆரவாரம் கரகோஷம் எல்லாம் செய்து வாழ்த்தி வரவேற்க வேண்டுமாம்.

இது பெருந்தன்மைக்கு அழகாயிருக்கலாம்; தமிழர் பண்புக்கு உகந்ததாயிருக்கலாம். ஆனால் மனித வாழ்க் கைக்கு - அதிலும் பணமில்லாத, படிக்காத, படித்தும் பகுத்தறிவில்லாத பாமரர்களின் வாழ்க்கைக்கு - அழகல்ல, உகந்ததல்ல என்பதோடு மட்டுமல்ல; இதை விடக் கேடு விளைப்பது வேறொன்றுமில்லை என்பதை இங்கே சொல்லத்தான் வேண்டும். இந்த விஷயத்தில் மற்றவர்கள் சிரத்தை காட்டாமலிருந்தாலும், பொது ஜனங்களின் உப்பைத் தின்று வயிறு வளர்ப்பதற்கென்றே பிறந் திருக்கும் எழுத்தாளர்கள் சிரத்தை காட்டாமல் இருக்கவே முடியாது.

இன்று இவ்வளவு தூரம் எழுதும் நானும் நேற்று வரை மேற்படி திருக்கூட்டத்தைச் சேர்ந்தவனாய்த்தான் இருந்தேன். ஆனால் முதலிலிருந்தே சேர்ந்துவிடவில்லை;

நடுவில்தான் சேர்ந்தேன் - அதாவது, தேசீயம் என்றால் என்ன? பொதுஜன சேவை என்றால் என்ன? ஜனநாயகம் என்றால் என்ன? என்பதைப் பற்றி எல்லாம் மிகமிக நன்றாகத் தெரிந்து கொண்ட பிறகுதான் சேர்ந்தேன். இல்லையென்றால் இந்த உலகத்தில் நான் இன்பத்தைக் கண்டிருக்க முடியாது; என்னதான் தியாகம் செய்திருந் தாலும் தியாகி என்ற பெயரைக்கூட நான் பெற்றிருக்க முடியாது.

''இங்கே துன்பம் அனுபவித்தால் என்ன, அங்கே இன்பம் அனுபவித்துக் கொள்ளலாம்!'' என்று நானும் உங்களைப்போலச் சும்மா இருந்திருக்கலாம். ஆனால் அதற்கு உங்களுடைய மனம் இடங் கொடுப்பதுபோல என்னுடைய மனம் இடங் கொடுக்கவில்லை. காரணம் அவ்வாறு கூறுவோரின் கூற்றில் நான் துளியாவது உண்மையைக் காண முடியாமற் போனதுதான்!

மேலும், அந்தப் புண்ணியாத்மாக்கள் வாயளவில் தான் அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார்களே தவிர, செயலளவில் இந்த உலகத்திலேயே தாங்கள் விரும்பும் இன்பங்கள் அனைத்தையும் அனுபவிப்பதற்கு வேண்டிய முயற்சிகளில் பெரிதும் ஈடுபட்டிருந்தார்கள். இன்னும் சொல்லப்போனால் இந்த விஷயத்தில் அவர்கள் சட்டத்தை அலட்சியம் செய்தார்கள்; சமூகக் கட்டுப் பாட்டை அலட்சியம் செய்தார்கள். சாஸ்திரத்தை அலட்சியம் செய்தார்கள்; சாட்சாத் கடவுளையே கூட அவசியம் நேரும் போதெல்லாம் அலட்சியம் செய்தார்கள்! - இதில் வேடிக்கை என்னவென்றால், தங்களுடைய முறையையே வேறு யாராவது பின்பற்றும் போது, ''போச்சு, போச்சு, எல்லாம் போச்சு!'' என்று அவர்கள் அர்த்தமில்லாமல் கூச்சல் போட்டார்கள்.

இவர்களுடைய கூச்சலைக் கேட்டு நான் உங்களைப் போல் கலங்கிவிடவில்லை. ''என்ன போச்சு. எங்கே

போச்சு!'' என்று திருப்பிக் கேட்டேன். நான் விழித்துக் கொண்டதை அறிந்து அவர்களும் விழித்துக்கொண் டார்கள் - அப்புறம் கேட்க வேண்டுமா? - என்னையும் அவர்கள் கட்சியில் சேர்த்துக் கொண்டார்கள்; நானும் அவர்களுடைய கட்சியில் சேர்ந்துகொண்டு விட்டேன்.

அடி சக்கை! அப்புறம் கொள்ளையோ கொள்ளை தான்! அதுவும் எப்படிப்பட்ட கொள்ளை? கௌரவமான கொள்ளை! மாலை மரியாதையோடு வரவேற்றுக் கொடுக்கும் கொள்ளை! சட்டம் ஒன்றும் செய்ய முடியாத கொள்ளை! இந்த உலகத்தில் என்னென்ன இன்பங்கள் உண்டோ, அத்தனையையும் என் வாழ்நாளிலேயே நான் அனுபவிப்பதற்கு வேண்டிய வசதியளிக்கக்கூடிய கொள்ளை! தகுதியில்லாமல் கிடைத்துக் காரணமில்லாமல் போய்விடும் பெயரும் புகழும் என்னைத் தேடி வரும் கொள்ளை! தன்னலத் தியாகியென்றும், தர்மகர்த்தா வென்றும், கொடையில் கர்ணனென்றும், இல்லாத பாரத மாதாவின் பிறக்காத அருந்தவப் புதல்வன் என்றும், ஏழைப்பங்காளன் என்றும், இன்னும் எத்தனை எத்தனையோ விதமாக என்னைப் பாராட்டிச் சீராட்டிப் பகிரங்கமாகக் கொடுக்கும் கொள்ளை!

இப்படிப்பட்ட சொர்க்க போகத்துக்கு நடுவே ஏழை மக்களைப் பற்றி, என்னைப்போன்ற நயவஞ்சகச் சிகாமணிகளுக்கு உயிரையும் உடலையும் அர்ப்பணம் செய்வதன் மூலம் கண்கண்ட கடவுள்களாக விளங்கும் உண்மையான தியாகசிகரங்களைப் பற்றி, இதுவரை நான் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை; சொல்ல விரும்பவு மில்லை. ஏனெனில், அப்படி ஏதாவது சொல்லியிருந்தால் நான் விரும்பிய வண்ணம் இந்த உலகத்தில் வாழ்ந்திருக்க முடியாது; மறு உலகத்திலும் நிச்சயமாக வாழ்ந்திருக்க மாட்டேன்!

ஆனால், நேற்றுவரை தான் மேற்கூறிய நிலையில் நான் இருக்கவேண்டியிருந்தது; இன்று அந்த நிலையில் இல்லை. "இன்னும் இரண்டு, மூன்று நாட்களுக்கு மேல் நீங்கள் உயிர் வாழ்ந்திருக்க முடியாது" என்று என்னுடைய வற்புறுத்தலின் பேரில் இத்தனைநாளும் எனக்குச் சிகிச்சை அளித்துவந்த டாக்டர் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டார். எனவே, பொது ஜனங்களிடமிருந்து பறித்த சொத்தை நான் பொது ஜனங்களின் உபயோகத்துக்கென்றே உயில் எழுதி வைத்துவிட்டேன். அதன் பயனாகச் சாகும்பொழுதும் நான் புகழுடனேயே சாகப் போகிறேன் - அதாவது, யாரிடமிருந்து கொள்ளையடித்தேனோ, அந்தப் பணத்தை அவர்களுக்கே திருப்பிக் கொடுத்ததற்காக - போகட்டும்!

நான் சாவதற்கு முன்னால் என்னுடைய கதையை உங்களிடம் சொல்லிவிட வேண்டுமென்று என் உள்ளம் ஏனோ துடிக்கிறது. அப்படிச் சொல்லாவிட்டால், சாவில் கூட நான் அமைதியைக் காணமாட்டேன் என்று என் உள்ளுணர்ச்சிகளில் ஏதோ ஒன்று கூறுகிறது. என்னுடைய கதையைக் கேட்ட பிறகு சிலர் ஆத்திரம் அடையலாம்; சிலர் அனுதாபம் காட்டலாம். ஆனால் தயவு செய்து யாரும் என்னை மன்னித்துவிட்டு, உடனே மனச் சாந்தி யடைந்துவிட வேண்டாம் என்று தலைவணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். அவ்வாறு செய்வது பெருந்தன்மையு மல்ல, தமிழர் பண்புமல்ல - உங்கள் சிந்தையை அடக்கிச் சும்மா இருக்கச் செய்யும் ரகசியம், சுயநலக்காரர்களின் சூழ்ச்சி; ஏய்க்கும் கூட்டத்தாரின் ஏமாற்று வித்தை!

அத்தகைய மனப்பான்மை உங்களை ஒருநாளும் வாழ வைக்காது; சாகத்தான் வைக்கும். அதிலும், என்னைப் போன்ற சாகப்போகிறவர்களை வேண்டுமானால் நீங்கள் மன்னித்து விடலாம்; உயிரோடிருப்பவர்களை ஒருநாளும் மன்னிக்கவே கூடாது.

சரி, என்னவெல்லாமோ சொல்லி உங்களை நெடுநேரம் காக்க வைத்துவிட்டேன். இனி என் கதையைக் கேளுங்கள் - என்ன, கதையென்றா சொன்னேன்? - ஆமாம், உண்மை என்று சொன்னால்தான் நீங்கள் 'நம்ப மாட்டோம்' என்கிறீர்களே?

# 1. காந்தி இட்ட தீ!

அப்பொழுதுதான் காந்தி யுகம் பூத்திருந்தது. ரௌலட் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் ஆரம்பித்ததின் மூலம் மகாத்மா காந்தி தேசமெங்கும் சுதந்திரத் தீயை மூட்டிவிட்டார். அடிமைப்பட்ட மக்களின் ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்தி மகாத்மாவின் அஹிம்சை என்ற வரம்பையும் மீறிவிட்டது. இதனால் ஆத்திரமடைந்த அதிகார வர்க்கம் மனிதத் தன்மையை இழந்து மிருகத்தனமான அடக்கு முறைகளைக் கையாண்டது. ஜாலியன் வாலா பாக், பஞ்சாப் படுகொலை முதலிய சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவங்களெல்லாம் அந்தக் காலத்தில் தான் நடந்தன.

காங்கிரஸ் மகாசபை இன்று மட்டும் கெட்டுப் போய் விடவில்லை; அன்றும் ஓரளவு கெட்டுப்போய்த்தான் இருந்தது. அதற்குக் காரணம், சமாதான முறையில் வெள்ளைக்காரரிடமிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றி, கௌரவம் மிக்க ராஜ்யபாரம் வகிப்பதோடு, தாங்க முடியாத பணபாரம் வகிக்கும் தங்கள் ஏகபோக உரிமையையும் பாதுகாத்துக்கொள்ளலாமென்ற உன்னத நோக்கத்துடன் சில பண மூட்டைகளும், பதவிவேட்டைக் காரர்களும் அப்பொழுதே அதில் சேர்ந்திருந்ததுதான்!

அந்த மகானுபாவர்கள் காந்திஜியின் எதிர்பாராத ஏகாதிபத்திய எதிர்ப்பைக் கண்டு முணுமுணுத்தனர். அதற்கேற்றாற்போல் மகாத்மாவின் மனமும் மேற்கூறிய படுகொலைகளுக்குப் பின் சிறிது கலங்கிவிட்டது. ''நான் பெரும் பிழை செய்துவிட்டேன்!'' என்று சொல்லி அவர் மனம் வருந்தினார். ஆனால் வீறு கொண்ட மக்களின் உள்ளம் அதைக் கேட்டு வீழ்ச்சியடையவில்லை; மகாத்மாவின் பெரும் பிழையை அவர்கள் பெரு மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்; அதன் பயனாகக் காந்தி மகான் காங்கிரஸின் தனிப்பெருந் தலைவரானார்.

அதே வருடத்தில்தான் நானும் சட்டப் பரீட்சையில் தேறிவிட்டுத் தொழில் அனுபவம் பெறுவதற்காகப் பாரிஸ்டர் பரந்தாமனிடம் அடைக்கலம் புகுந்திருந்தேன். நான் தொழில் அனுபவம் பெற்றுப் பின்னால் பெரும் பொருள் ஈட்டப்போவதை என் தாயார் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். தமிழ் நாட்டில் பெண்ணாய்ப் பிறந்த தோஷத்தின் காரணமாக, அவர்கள் பிறந்ததிலிருந்து கல்யாணமாகும்வரை தந்தையின் உதவியை எதிர்பார்க்கவேண்டிய நிலையில் இருந்தார்கள்; கல்யாணமான பின் கணவனின் உதவியை எதிர்பார்க்க வேண்டிய நிலையில் இருந்தார்கள்; கணவனைப் பிரிந்த பின் பிள்ளையின் உதவியை எதிர்பார்க்க வேண்டிய நிலையில் இருந்தார்கள்! - பிள்ளையைப் பிரிந்தால், 'பாற் கடலில் பள்ளிகொண்டிருக்கும் படியளக்கும் பெருமான் இருக்கவே இருக்கிறார்!' என்று இருப்பார்களோ என்னவோ!

நல்லவேளையாக என் தகப்பனார் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பெருமானை நம்பி எங்களையெல்லாம் விட்டுவிட்டுப் போகவில்லை. 'அவனவன் வாழ்வுக்கும் தாழ்வுக்கும் அவனவனே காரணம்' என்னும் கொள்கையைத் தம் கடைசி மூச்சு நிற்கும்வரை

கடைப்பிடித்து வந்தவர் அவர். அதன் பயனாக நிலமும் நீரும், வீடும் வாசலும், நகையும் நட்டுமாக நாலைந்து லட்சத்துக்குக் குறையாமல் சேர்த்து வைத்துச் சோம்பேறித்தனத்திலுள்ள சுகத்தை அவர் எங்களுக்குக் காட்டிவிட்டுப் போயிருந்தார். அதைக் கொண்டுதான் என்னையும் என் தங்கையையும் எனது தாயார் யாதொரு சிரமமுமில்லாமல் இத்தனை நாட்களும் பாதுகாத்து வந்தார்கள். இப்போது அந்தச் சொத்தில் பெரும் பகுதி கரைந்து விட்டது. எஞ்சி இருந்தவை நாங்கள் வசித்து வந்த வீடும், என் தாயார், தங்கை இவர்கள் அணிந்திருந்த கொஞ்சநஞ்சம் நகைநட்டுக்களும்தான்.

இந்த நிலையில் பெற்றவர்களைக் காலாகாலத்தில் பீடிக்கும் கவலை என் தாயாரையும் பீடித்தது. அந்தக் கவலை, எனக்கும் தங்கை சித்ராவுக்கும் தான் கண்ணை மூடுவதற்குள் எப்படியாவது கல்யாணத்தைப் பண்ணி வைத்துவிட வேண்டும் என்பதே!

இதற்காக எங்கள் வீட்டுக்கு வருவோர் போவோரிட மெல்லாம் என் தாயார் எங்களுடைய கல்யாண விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்துக் கொண்டே இருப்பார்கள். ‘‘எங்கேயாவது நல்ல பையனாயிருந்தால் சொல்லுங்களேன்?’’ என்பார்கள் ஒருவரிடம் - ‘‘எங்கேயாவது நல்ல பெண்ணாயிருந்தால் சொல்லுங் களேன்?’’ என்பார்கள் இன்னொருவரிடம். எல்லாம் பேசி முடிந்து, கடைசியாக அவர்களை வழியனுப்பும் போது, ‘‘ஏழையை மறந்துவிடாதீர்கள்; ஞாபகத்தில் வையுங்கள்;’’ என்பார்கள் உருக்கமுடன். அவர்களோ, ‘‘ஆகட்டும் அம்மா, மறக்கமாட்டோம்’’ என்று சொல்லிவிட்டுப் போய், வேண்டுமென்றே மறந்துவிடுவார்கள்!

யாரும் வராமலிருக்கும் போதாவது என் தாயார் எங்கள் கல்யாண விஷயத்தைப் பற்றிக் கொஞ்சமாவது மறந்திருப்பார்கள் என்கிறீர்களா? - அதுதான் கிடையாது -

''எந்தப் புண்ணியவான் வருவானோ, எந்தப் புண்ணிய வதி வருவாளோ?'' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்ட வண்ணம் பெருமூச்சு விட்டுக்கொண்டிருப் பார்கள்.

இதற்கு மத்தியில் ''அவர் இருந்திருந்தால் எனக்கு இந்தக் கவலையே இருந்திருக்காது!'' என்று அக்கம் பக்கத்தில் சொல்லி, நீர் மல்கும் கண்களை அடிக்கடி முந்தானையால் துடைத்துவிட்டுக் கொள்வார்கள்.

இருந்தாற்போலிருந்து என் தாயாரின் கவலை சில சமயம் உச்ச நிலையை அடைந்துவிடும். அம்மாதிரி சமயங்களில் அவர்களுடைய பக்திக்கு எத்தனையோ நாட்களாகப் பாத்திரமாகியிருந்த பகவானின் தலைகூட உருளுவதுண்டு. ''பாழும் தெய்வந்தான் சதி செய்து விட்டதே! உலகத்தில் அவரைவிட வயதானவர்க ளெல்லாம் இன்னும் உயிரோடு இருக்கவில்லையா?'' என்று அங்கலாய்த்துக் கொள்வார்கள்.

ஒருநாள் அவ்வாறு அங்கலாய்த்துக்கொண்டபோது, ''ஆமாம், அம்மா! அப்பா இறந்த பிறகு அவரைவிட வயதானவர்களெல்லாம் இந்த உலகத்தில் ஏன் இன்னும் இருக்கிறார்கள் என்று எனக்குக்கூடத் தெரியவில்லை!'' என்றாள் தங்கை சிரித்துக்கொண்டே.

''அட, பாவமே! அவர்களெல்லாம் அப்பாவைப் பின்பற்றி இருக்கவேண்டுமா, என்ன?'' என்றேன், நான்.

''அதற்குச் சொல்லவில்லை, நான். அவர்களைப்போல உங்கள் அப்பாவும் இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்திருக்கக் கூடாதா, என்றுதான் சொல்கிறேன்!''

''அதை இப்போது சொல்லி என்ன அம்மா பிரயோசனம்? அப்பா இருக்கும்போது சொல்லியிருந்தால் ஒரு வேளை அவர் இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்துவிட்டுப் போயிருக்கலாம்!'' என்றாள் சித்ரா.

''அப்போது ஞாபகம் இருந்திருக்காது!'' என்றேன், நான்.

''உங்களுக்கு எல்லாம் வேடிக்கையாயிருக்கிறது, என் கவலை எனக்கல்லவா தெரியும்?''

''என்ன கவலை, அம்மா? - என்னிடம் சொல்லக் கூடாதா?'' என்றாள் சித்ரா, ஏதும் அறியாதவள்போல.

''இந்த வயதிலே எனக்கு வேறென்ன கவலை யிருக்கும்? நாலு பேரைப்போல உங்களுக்கும் ஒரு கல்யாணத்தைப் பண்ணிவைக்க முடியவில்லையே என்ற கவலைதான்!''

''அதாவது, உங்களைப் பிடித்திருக்கும் கவலை எங்களைப் பிடிக்கவேண்டும் என்று சொல்கிறீர்கள் - அப்படித்தானே?'' என்றேன், நான்.

''இல்லை, செல்வம்! காலாகாலத்தில் கல்யாணம் பண்ணிக்கொண்டு நீங்கள் இருவரும் கவலையில்லாமல் இருக்கவேண்டுமென்று சொல்கிறேன்!''

''அதற்கு நான் ஒரு யோசனை சொல்லட்டுமா, அம்மா?''

''என்ன யோசனை?''

''எங்கள் இருவருக்கும் கல்யாணம் பண்ணாம லிருங்கள்; கவலையே இருக்காது!'' என்றேன், நான்.

''நல்ல யோசனைதான், போ!'' என்று முகத்தைச் சுளித்த தாயார், திடீரென்று எதையோ கண்டுபிடித்து விட்டவர்களைப்போல, ''உங்கள் எண்ணமும் எனக்குத் தெரியும்'' என்றார்கள் புன்னகையுடன்.

''என்ன தெரியும், அம்மா?'' என்று இருவரும் ஏக காலத்தில் கேட்டோம். ''காலம் கெட்டுப்போச்சோ இல்லையோ, நமக்குப் பெரியோர்களாகப் பார்த்துக்

கல்யாணம் பண்ணி வைக்க வேண்டாம் என்பது உங்கள் எண்ணமாயிருக்கும்!''

''காலம் ஒருநாளும் கெட்டுப் போகாது, அம்மா! கெட்டுப் போவதாயிருந்தால் நாம்தான் கெட்டுப் போக வேண்டும்!'' என்றேன், நான்.

''பின்னே யார் கல்யாணம் பண்ணி வைக்க வேண்டுமாம்?'' என்றாள் சித்ரா, என்னைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டிக்கொண்டே.

''போடி, போ! எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்துக்கொண்டு நீ கற்ற வித்தைகளையெல்லாம் என்னிடம் காட்டுகிறாயா? - என்னமோ, உன்னைப்போல நான் அவ்வளவு தூரம் படித்திராவிட்டாலும், உனக்குத் தெரிந்திருப்பதில் பாதியாவது எனக்குத் தெரிந்திருக்காதா?''

''தெரிந்ததைச் சொல்லுங்களேன்!''

''அசாத்தியத் துணிச்சலும், எதையும் ஆற அமர யோசித்துப் பார்ப்பதற்கு வேண்டிய பொறுமையும் இல்லாத நாளிலே - வாழ்க்கையின் கஷ்டநஷ்டங்களைப் பற்றி அறியாத வாலிபப் பருவத்திலே - இன்பம் ஒன்றையே நாடும் இளமையிலே - ஆணுக்குப் பெண்ணைக் கண்டதும், பெண்ணுக்கு ஆணைக் கண்டதும் ஈனத்தனமான ஓர் இனக்கவர்ச்சி ஏற்படுவதுண்டுதான்! அதற்குக் காரணம், அநேகமாக அவரவர்களுடைய அழகாய்த்தானிருக்கும். அந்த அழகு எப்படி நிலையற்றதோ, அதேமாதிரி அகத்தைத் தொடாத அவர்கள் அன்பும் நிலையற்றது என்பதை அறியாமல் அதைக் காதலென்றும் கீதலென்றும் சொல்லிக்கொண்டு, 'எங்களுக்கு யாரும் கல்யாணம் பண்ணிவைக்க வேண்டாம். நாங்களே பண்ணிக்கொண்டு விடுகிறோம்!' என்று இந்தக் காலத்து ஆண்களும் பெண்களும் சொல்கிறார்கள். அப்படிப் பண்ணிக்கொண்டு விட்டால்

தங்கள் வாழ்க்கை ஒரே ஆனந்த சாகரமாயிருக்குமென்றும் அவர்கள் கனவு காண்கிறார்கள் - அந்த மாதிரி நீங்களும் கனவு காண்கிறீர்களாக்கும்?''

''இந்தக் காலத்து ஆண்களும் பெண்களும் மட்டும் என்ன, அம்மா? அந்தக் காலத்து ஆண்களும் பெண்களும் கூட அப்படித்தானே இருந்திருக்கிறார்கள்! - ராமனும் சீதையும், சத்தியவானும் சாவித்திரியும், நளனும் தமயந்தியும், துஷ்யந்தனும் சகுந்தலையும், ஒருவரைப் பார்த்து ஒருவர் காதல் கொள்ளவில்லையா?''

''ஆமாம், அவர்களுடைய வாழ்க்கையெல்லாம் ஒரே ஆனந்த சாகரமாயிருந்ததாக்கும்! - நான் சொல்கிறேன் - காதல் கல்யாணமாகட்டும், காதல் இல்லாத கல்யாணமா கட்டும் - வாழ்க்கை யென்பது எப்போதுமே கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப் பாதைதான்; கதைகளில் வேண்டுமானால் அது தார் போட்ட நாட்டுப் பாதையாய் இருக்கலாம் - ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவுமா?''

''அந்தக் காட்டுப் பாதையில் பிரயாணம் செய்யும் பாதசாரிகள், தங்கள் சிரமத்தை ஒன்றுபட்டுச் சகித்துக் கொள்வதற்காகவாவது அவர்களுக்குள் ஒருவிதமான அன்னியோன்னிய பாவம் இருக்க வேண்டாமா? - அதைத் தான் நாங்கள் காதல் என்கிறோம் - அதில் என்ன தப்பு?'' என்று கேட்டுவிட்டுச் சித்ரா என் பக்கம் திரும்பி, ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள், அண்ணா?'' என்று கேட்டாள்.

''நான் என்ன சொல்லக் கிடக்கிறது? - எனக்கென்னமோ இந்தக் காதல், கல்யாணம் என்பதெல்லாம் வெறும் 'பிரஜாபிவிருத்திக் கைங்கரியம்' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது! அந்தக் கைங்கரியத்தில்தான் எத்தனையோ பேர் ஈடுபட்டிருக்கிறார்களே, நாமாவது தேசாபிவிருத்திக் கைங்கரியத்தில் இறங்கினால் என்ன?'' என்று சொல்லிக்

கொண்டே கோட்டை எடுத்து மாட்டிக்கொண்டு பாரிஸ்டர் பரந்தாமன் வீட்டுக்குக் கிளம்பினேன், நான்.

"ரொம்ப அழகுதான்!" என்று தாயார் சொன்னது, மாடிப்படிகளில் இறங்கிக்கொண்டிருந்த என் காதில் விழுந்தது.



என்றுமில்லாத திருநாளாய் அன்று பாரிஸ்டர் பரந்தாமன் ஒரே உற்சாகமாயிருந்தார். அவருடைய உற்சாகத்துக்குக் காரணம் என்னவென்று விளங்காமல் நான் தயக்கத்துடன் அவரை நெருங்கினேன். என்னைக் கண்டதும் "வா, தம்பி, வா! உனக்குச் சமாசாரம் தெரியுமா?" என்று ஆரம்பித்தார் அவர்.

"என்ன சமாசாரம்?" என்றேன் நான், ஒன்றும் புரியாமல்,

"எல்லாம் நல்ல சமாசாரந்தான்! இன்று அந்த கலகக்காரனைப் பிடித்துச் சிறையில் போட்டுவிட்டார்களாம்!"

"எந்தக் கலகக்காரனை...?"

"அவன்தான், மிஸ்டர் காந்தி! ரௌலட் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகமோ, சண்டித்தனமோ செய்து பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையே கவிழ்த்துவிடப் போகிறேன் என்றானே, அவனை! - அந்தப் பைத்தியக்காரனின் பேச்சையும் பாழாய்ப்போன ஜனங்கள் கேட்டுத் தொலைக்கிறார்களே, அதுதான் எனக்கு வேடிக்கையாயிருக்கிறது. இந்த நாட்டை ஆள வெள்ளைக்காரன் மட்டும் வந்திராவிட்டால் இவர்கள் அவரவர்களுடைய பெண்டாட்டியையாவது காப்பாற்றிக் கொண்டிருக்க முடியுமா? - இல்லை, கேட்கிறேன்."

எனக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. அந்த மனிதரின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை விட்டால் என்ன என்றுகூடத் தோன்றிற்று. ஆனால் எந்த காந்தியை அவர் திட்டினாரோ, அந்தக் காந்தியின் தத்துவம் அதற்கு விரோதமாயிருக்கவே, பேசாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டு என் அதிருப்தியைத் தெரிவித்தேன். அதே சமயத்தில் ஆயிரமாயிரம் குரல்களிலிருந்து எழும்பிய "வந்தே மாதரம்!" என்னும் வானளாவிய ஓசை என் கவனத்தைக் கவர்ந்தது; விழுந்தடித்துக்கொண்டு மாடி வராந்தாவை நோக்கி ஓடினேன். தெருவில் மாபெரும் ஊர்வலம் ஒன்று சென்று கொண்டிருந்தது. கையில் புத்தகங்களுடன் கலாசாலை மாணவர்களும் மாணவிகளும் பெருவாரியாக அந்த ஊர்வலத்தில் கலந்துகொண்டிருந் தனர். அவர்கள் ஒவ்வொருவருடைய முகத்திலும் வீரா வேச உணர்ச்சி பொங்கி வழிந்து கொண்டிருந்தது. கூட்டத் துக்கு முன்னால் நிமிர்ந்த நடையுடனும் நேர் கொண்ட பார்வையுடனும் ஓர் இளைஞன் சென்று கொண்டிருந் தான். அவன் கையில் இந்த மூவர்ணக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது. அவனுக்குப் பின்னால் சென்ற இருவர், "மகாத்மா காந்தியை உடனே விடுதலை செய்!" என்று அதிகாரத் தோரணையில் பொறிக்கப்பட்டி ருந்த விளம்பரத்தைத் தாங்கிச் சென்றுக் கொண்டிருந்தனர்.

நடுநடுவே, "மகாத்மா காந்திக்கு ஜே!" என்றும், "பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வீழ்க!" என்றும், "நமதே ராஜ்யம், அடைந்தே தீருவோம்!" என்றும் உச்சஸ்தாயி யில் எழுந்த கோஷங்கள் செத்த பிணத்தையும் உயிர்ப்பிக்கக் கூடியவையாயிருந்தன - அவ்வளவுதான்; அந்த நிமிஷமே இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவிதப் பரவச நிலையை நான் அடைந்துவிட்டேன். என்னுடைய உடலில் ஓடிக்கொண்டிருந்த ஒவ்வொரு நரம்பும் புடைத்து எழுந்து, ரோமங்கள் குத்திட்டு நின்றன.

ஏதோ ஒரு தினுசான உணர்ச்சி என் உள்ளத்தில் ஊடுரு விப் பாய்ந்து, மின்னல் வேகத்தில் தேகம் முழுவதும் பரவிப் புல்லரிப்பை உண்டாக்கிற்று.

இந்தச் சமயத்தில் கோர்ட்டுக்குக் கிளம்பிய பரந்தாமன், "ஏன் செல்வம், அந்த 'நியூஸன்'ஸைப் பார்க்க உனக்கு அருவருப்பாயில்லையா? - மகாத்மாவுக்கு ஜேயாவது, மண்ணாங்கட்டியாவது! அவன் மகாத்மாவாயிருந்தால் சர்க்காருக்கும் பொது ஜனங்களுக்குமிடையே கலகத்தை மூட்டிவிடும் துராத்மாவின் காரியங்களையெல்லாம் செய்துகொண்டிருப்பானா? - பார்க்கப்போனால் இந்தப் பயல்கள் இவ்வளவு சீக்கிரத்தில் அந்தக் காந்தி கைதான விஷயத்தைத் தெரிந்து கொண்டு கூச்சல் போடுவதற்குக் கூட அந்த வெள்ளைக்காரன் தானே காரணம்? அவன் வந்திராவிட்டால் தந்தியையாவது, பத்திரிகையையாவது இவர்கள் கனவிலும் கண்டிருக்க முடியுமா? - என்ன நன்றி கெட்டத்தனம், இந்தப் பயல்களுக்கு! இவர்களுக்குத்தான் சுயராஜ்யம் வேண்டுமாம், சுயராஜ்யம்!" என்று மேலும் மேலும் ஏதேதோ அடுக்கிக் கொண்டே போனார்.

என்னால் பொறுக்க முடியவில்லை. "நிறுத்துங்கள்! அந்த வெள்ளைக்காரன் இந்த நாட்டில் பொதுஜன சௌகரியத்துக்கென்று செய்திருக்கும் ஒவ்வொரு காரியமும் உண்மையில் அவனுடைய ஏகாதிபத்தியத்தைக் காத்துக்கொள்வதற்காகச் செய்தவை என்பதை நான் அறிவேன். நீங்கள் சொல்வதுபோல அவை பொதுஜன நன்மைக்கென்றே ஏற்பட்டவை யென்றாலும், அவற்றுக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கும் என்ன சம்பந்தம்? அந்தச் சாதனங்களை அமைத்தவன் யாரா யிருந்தாலும் அவனை 'வெள்ளைக்காரன்' என்ற கண் கொண்டுதான் பார்க்க வேண்டுமா? நாளுக்கு நாள் வளர்ச்சி யடையும் மனித சமுதாயம் தன் சௌகரியத்துக்கென்று சாதித்திக் கொண்ட காரியங்கள் அவை என்று ஏன்

நினைக்கக் கூடாது? தங்கச் சங்கிலி என்பதற்காகக் கைகளில் விலங்கு போட்டுக் கொள்ள நான் தயாரா யில்லை; உங்கள் வேலையைப் பாருங்கள்!'' என்று படபடப்புடன் கூறிவிட்டு, மடமடவென்று கீழே இறங்கினேன்.

அதே சமயத்தில் அந்த ஊர்வலத்தை நோக்கி ஒரு போலீஸ் லாரி விரைந்து வந்து நின்றது. அதிலிருந்து அதிகாரி ஒருவர் கீழே இறங்கினார். அவரைப் பின் தொடர்ந்து இருபது முப்பது போலீஸ்காரர்கள் குண்டாந் தடிகள் சகிதம் இறங்கினர். கூட்டத்துக்கு முன்னால் கொடி தாங்கிய வண்ணம் தலைமை தாங்கிச் சென்ற இளைஞனை நெருங்கி, அந்தப் போலீஸ் அதிகாரி ஏதோ சொன்னார் - அவர் அந்த ஊர்வலத்தைக் கலைத்து விடும்படி அவனிடம் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும் - அந்த இளைஞன் அதற்கு இசைந்ததாகத் தெரியவில்லை. உடனே தனக்குப் பின்னாலிருந்த போலீஸாரை நோக்கி, 'உம்' என்று உறுமினார் - அவ்வளவுதான்; 'படார், படார்!' என்ற சத்தம் என் காதைத் துளைத்தது.

அடுத்த நிமிஷம், அப்பப்பா! அந்தக் காட்சியை என்னால் சகிக்க முடியவில்லை; எங்கு நோக்கினும் இரத்தம், இரத்தம்! - 'பெரிய மனிதன் தோரணை'யில் ஒரு கணம் கண்ணை மூடிக்கொண்டிருந்து விட்டுத் திறந்தேன் - அந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்துச் சென்ற இளைஞன் இரத்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தான்; அவன் கையிலிருந்த மூவர்ணக்கொடி ஒரே சிவப்பு வர்ணக் கொடியாக மாறியிருந்தது!

ஆனால், என்ன ஆச்சரியம்! அந்த நிலையிலும் அவன் வாய் வழியாக வந்த ''வந்தே மாதரம், வந்தே மாதரம்'' என்ற மெல்லிய ஒலி, அவனுடைய உயிரைப் போலவே அணுஅணுவாகத் தேய்ந்துகொண்டே சென்று மறைந்தது.

நான் மனிதனானேன். என்னையறியாமலே என் வாய், "வந்தே மாதரம்" என்று கோஷமிட்டது; என்னையறியா மலே என் கைகள் அந்த இளைஞன் விட்டுச் சென்ற தாயின் மணிக்கொடியைத் தாங்கின!

அவ்வளவுதான்; போலீஸார் ஓடோடியும் வந்து என்னைச் சூழ்ந்துகொண்டனர். மனிதனுக்காகச் சட்டம் என்பதை மறந்து, சட்டத்துக்காக மனிதனை வதைக்கும் அவர்களைக் கண்டதும் என்னுடைய எரிச்சல் எரிமலையா யிற்று. "அன்னியன் உங்களை என்றும் ஆள வேண்டு மென்றோ நீங்கள் சொந்த நாட்டுச் சகோதரர்களை இப்படி அடித்து நொறுக்குகிறீர்கள்? அவர்கள் கேட்கும் விடுதலை உங்களுக்கும் வேண்டாமா? கேவலம், இருபது முப்பது ரூபாய்ச் சம்பளத்துக்காக உங்களை, உங்கள் உயிரை, உங்கள் உரிமையை நீங்கள் விலைக்கு விற்றுவிடுவதா? - வெட்கக்கேடு! - எட்டிச் செல்லுங்கள்; எங்களை அடித்து நொறுக்குவதற்குப்பதிலாக அந்த வெள்ளைக்காரப் பயல்களை அடித்து நொறுக்குங்கள்!" என்று மேலே ஏதோ சொல்வதற்குள் என் தலையில் ஏக காலத்தில் பல அடிகள் விழுந்தன - நான் வெறியனானேன்! - அஹிம்சை என்னைக் கைவிட்டு விட்டதோ, நான் அதைக் கைவிட்டு விட்டேனோ, அது எனக்குத் தெரியாது, - அடிக்குப் பதில் அடி; இரத்தத்திற்குப் பதில் இரத்தம்!

ஆனால் அதன் பலன்? - மற்றவர்களைவிட வெகு சீக்கிரத்திலேயே நான் உணர்விழந்து கீழே விழுந்தேன்.

என் கண்கள் இருண்டன; அதற்குப் பின் என்ன நடந்தது என்று கேட்கிறீர்களா? - யாருக்குத் தெரியும்?

# 2. ''சாந்தினி நீயா!''

இழந்த ஒளியை என் கண்கள் மீண்டும் பெற்றபோது நான் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். என் உடல் முழுவதும் ஒரே 'பாண்டேஜ்' மயமாக இருந்தது; சுற்றுமுற்றும் பார்த்தேன். என்னுடைய கோலத்தில் இன்னும் பலர் அங்கே அனுமதிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் அனைவரும் தங்கள் வேதனையின் அளவை விதம் விதமாக முனகி வெளியிட்டுக் கொண்டிருந்தனர். ''ஐயய்யோ!'' என்று அலறுவான் ஒருவன்; ''அம்மம்மா'' என்று துடிப்பான் ஒருவன்; ''அப்பப்பா!'' என்று பதைப்பான் ஒருவன்; 'ஆ, ஊ!' என்று அப்படியும் இப்படியுமாகப் புரண்டு புரண்டு படுத்துத் தவிப்பான் ஒருவன்; வாய்விட்டு ஏதும் முனகாமல், ''ஊம்... ஊம்'' என்று 'ஊங்' கொட்டுவதோடு நிற்பவர்களும் அங்கே இல்லாமற் போகவில்லை. ஆனால் அவர்களுக்கெல்லாம் அவ்வளவாக வேதனையில்லை என்று சொல்லிவிட முடியாது, இயற்கையான சங்கோசம் அதற்குக் காரணமாயிருந்தாலும் இருக்கலாமல்லவா?

அங்குமிங்குமாக நடமாடிக்கொண்டிருந்த நர்சுகளோ, எங்கள் வேதனையைக் கொஞ்சமாவது உணரவில்லை. அவர்களுக்கு இயற்கையிலேயே இதயமில்லையோ - இல்லை, அதைக் கழற்றி வீட்டில் வைத்துவிட்டுத்தான் வேலைக்கு வருகிறார்களோ - தெரியாது. அவர்கள் பாட்டுக்கு ஆடி அசைந்து நடப்பதும், அடிக்கடி தங்களுக்குள் ஏதோ பேசிச் சிரிப்பதுமாகக் காலத்தைக் கழித்துக்கொண்டிருந்தனர். இடையிடையே எங்கள் முனகல் சத்தம் அவர்களுடைய பேச்சுக்கு இடையூறாக

இருந்திருக்க வேண்டும். அதற்காகத்தானோ என்னவோ, ''உஸ்... ஸைலன்ஸ்!'' என்றுவேறு அவர்கள் அடிக்கடி உதட்டின்மேல் விரலை வைத்துக் கூறிக்கொண்டிருந்தனர்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது அந்தப் 'பெண் தெய்வங்க'ளின்மேல் எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. அவர்கள் அத்தனை பேரையும் நையப் புடைத்து, அவர்களையும் எங்களைப்போலவே அலறவைத்து, ''உஸ், ஸைலன்ஸ்!'' என்று நாமும் உதட்டின்மேல் விரலை வைத்துச் சொன்னால் என்ன என்று கூடத் தோன்றிற்று!

ஏனெனில் தங்களுக்குமேல் உயர்ந்த பதவி வகிக்கும் டாக்டர்களுக்குக்கூட அவர்கள் கொஞ்சமாவது அஞ்சியதாகத் தெரியவில்லை. அந்த டாக்டர்களும் தங்கள் கடமையை அவ்வளவு தூரம் உணர்ந்தவர்களாகத் தெரியவில்லை. பரஸ்பரம் பல்லை இளிப்பதன் மூலம் அவர்களில் பலர் தாங்கள் இருப்பது ஆஸ்பத்திரி என்பதையே அடியோடு மறந்துவிட்டிருந்தனர். தங்களுடைய நேரத்தில் ஒரு நோயாளிக்காகச் செலவழிப்பது ஒரு நிமிஷம் என்றால், ஒரு நர்சுடன் பேசுவதற்கு அவர்கள் ஒரு மணி நேரம் வேண்டுமானாலும் செலவழிக்கத் தயாராயிருந்தனர்!

இவை மட்டுமல்ல; இன்னொரு காட்சியும் என்னைத் திகைக்க வைத்தது. எத்தனையோ பேருடைய வேதனையைக் கொஞ்சங்கூடக் கவனிக்காமலிருந்த டாக்டர்களும் நர்சுகளும், ஒரு சிலரை மட்டும் விழுந்து விழுந்து கவனித்துக் கொண்டிருந்தனர். அவர்களில் யாராவது ஒருவர் 'உம்' என்றால் போதும், ஓடோடியும் வருவார்கள். அந்த மனிதரோ அவர்களை ஆச்சரியத்துடன் பார்ப்பார். ''என்னவேணும், உங்களுக்கு?'' என்று அவர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கேட்பார்கள். அந்த மனிதருக்கு என்ன சொல்வதென்றே புரியாது; ''ஒன்றுமில்லையே!'' என்று திரும்பிப் படுத்துக்

கொள்வார். - வந்தவர்கள் அத்தனை பேரும் ஏமாந்து திரும்புவார்கள்.!

ஒருமுறை இருமுறையல்ல, இப்படி எத்தனையோ முறை - இதைப்பற்றிப் பின்னால் விசாரித்தபோது, அந்த ஒரு சிலர் பெரும் பணக்காரர்களாகவும், பெரிய பெரிய மில் முதலாளிகளாகவும், 'கிருஷ்ண லீலை'யின் காரணமாக ஆஸ்பத்திரிக்கு வந்தவர்களாகவும் இருந்தார்கள்.

பணம் நுழையாத இடமோ, அதனால் சாதிக்க முடியாத காரியமோ உலகில் என்னதான் இருக்கிறது?

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது, "என்ன, மிஸ்டர் செல்வம்!" என்று ஒரு பழகிய குரல் - ஏற்கெனவே பரிச்சயமான குரல் - என் காதில் விழுந்தது; திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். கையில் பத்திரிகையுடன் என் பள்ளிக்கூடத்து நண்பனான பாலு நின்றுகொண்டிருந்தான்.

நின்றவன் சும்மா நிற்கவில்லை; என் கட்டிலை ஆதாரமாகப் பிடித்துக்கொண்டு நின்றான் - அவன் தலையிலும் காலிலும் கூடப் பலமான அடி!

"என்ன பாலு, நீயும்..."

"ஆமாம், உனக்கு எதிர்த்தாற்போல் தான் நானும் இத்தனை நேரம் படுத்துக்கொண்டிருந்தேன்!"

"அப்படியா? நான் பார்க்கவேயில்லையே!"

"எப்படிப் பார்க்கமுடியும்? இன்றுதானே நீ இந்த உலகத்துக்கு வந்திருக்கிறாய்?"

"ஓஹோ! அதற்குள் நீ படுக்கையை விட்டு எழுந்து விட்டாயே? டாக்டர்கள் பார்த்தால்..."

"ம்... நம்மையெல்லாம் பார்க்க அவர்களுக்கு எங்கே நேரமிருக்கிறது? நீ இந்தப் பத்திரிகையைப் பார்த்தாயா?"

"என்ன விசேஷம்?"

''சர்க்கார் அறிக்கை விட்டிருக்கிறார்கள்!''

''என்னவாம்!''

''ஊரெல்லாம் என்னவோ பிரமாதப்படுகிறதே, சர்க்கார் என்ன சொல்கிறார்கள். தெரியுமா? பொதுஜன நன்மைக் காகச் சட்டத்தையும் அமைதியையும் காப்பது தங்கள் கடமையென்றுக் கருதி, முதலில் நம்மைக் கலைந்து போகும்படி அவர்கள் கேட்டுக்கொண்டார்களாம். கலைய மறுக்கவே, துரதிர்ஷ்டவசமாய் லேசாகத் தடியடிப் பிரயோகம் செய்து கலைக்க நேர்ந்துவிட்டதாம்; அதற்காக அவர்கள் மிகமிக வருந்துகிறார்களாம்!''

''அட, பாவிகளா! லேசாகத் தடியடிப் பிரயோகம் செய்ததின் பலன்தானா, நீ நிற்க முடியாமல் தவிப்பதும், நான் எழுந்திருக்க முடியாமல் விழிப்பதும்?''

''நாமாவது தேவலையே! சம்பவம் நடந்து இன்றுடன் மூன்று நாட்களாகிவிட்டன - இன்னும் எத்தனையோ பேர் இந்த உலகத்தை எட்டிக்கூடப் பார்க்காமல் இருக்கின்றனர். மற்றும் சிலர், 'இந்த உலகமே வேண்டாம், என்று மறு உலகத்திற்குப் போய்விட்டனர். தப்பித் தவறி, இதுவரை உயிருடன் இருப்பவர்களுக்கும் மொத்தம் எத்தனை இடங்களில் எலும்புகள் முறிந்திருக்கின்றனவாம், தெரியுமா? ஐம்பது இடங்களில், அறுபது இடங்களில்!''

''இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்!''

''நான் சொல்லவில்லை; டாக்டர்களின் 'ரிப்போர்ட்' சொல்கிறது.!''

''ம்... இதற்குத்தான் சர்க்கார் பாஷையில் 'லேசான தடியடிப் பிரயோகம்' என்று பெயர்போலும்!''

''ஆமாம், எப்படியிருக்கிறது கதை?''

''ரொம்ப நன்றாய்த்தான் இருக்கிறது; நீ போய்ப் படுத்துக்கொள்!'' என்று சொல்லிவிட்டு, நான் கால்களை நீட்டிப் படுத்தேன்.

''என் கண்ணே! இப்படிக்கூட என் தலையில் கல்லைத் தூக்கிப் போடலாமா?'' என்று கதறிக் கொண்டே என் தாயார் வந்தார்கள்.

அவர்களைத் தொடர்ந்து என் தங்கை சித்ராவும் வந்து கொண்டிருந்தாள்.

''நேற்றுக்கூட இவர்களை நான் இங்கே பார்த்தேன்; நர்சுகள் உன்னைப் பார்க்கவிடாமல் இவர்களை விரட்டி விட்டார்கள்!'' என்று சொல்லிக்கொண்டே, பாலு தன் படுக்கைக்குச் சென்றுவிட்டான்.

அம்மாவுடன் சேர்ந்து அழ எனக்கு விருப்பமில்லை. எனவே, வழக்கமான தோரணையிலேயே ஆரம்பித்தேன்.

''நான் என்ன செய்வேன் அம்மா? வெள்ளைக்காரன் தலையில் கல்லைத் தூக்கிப் போடவேண்டுமென்பதுதான் என் ஆசை. அந்தப் பாழுங்கல் தவறி உன் தலையிலே விழுந்துவிட்டதாக்கும்?''

''இது என்ன, அண்ணா? எந்தச் சமயத்தில் யாரிடம் எப்படிப் பேசவேண்டும் என்றுகூட உங்களுக்குத் தெரியாதா?'' என்று குறுக்கிட்டுக் கேட்டாள் சித்ரா.

''சரி, எப்படிப் பேசவேண்டும்?''

''நாசமாய்ப் போச்சு! உங்களைப் பற்றிக் கேள்விப் பட்டவுடனே அம்மா பேச்சு மூச்சு இல்லாமல் கீழே விழுந்து விட்டார்கள். டாக்டரைக் கூட்டிக் கொண்டு வந்து காட்டும் வரை அவர்கள் பிழைத்து எழுந்திருப்பார்கள் என்ற நம்பிக்கையே எனக்கு இல்லாமற் போய் விட்டது. அதிலும் அம்மாவுக்குத் தன் குடும்பமும் அதன் கௌரவமுந்தான் பெரிது. அதற்கான வழியில்தான் அவர்கள் உங்களை வளர்த்து வந்தார்கள். வெள்ளைக் காரன் தலையில் கல்லைத் தூக்கிப் போடவா வளர்த்தார்கள்?''

''அம்மாவைப்போலவே எல்லாரும் அவரவர்கள் குடும்ப கௌரவத்தையே பெரிதாகக் கருதுவது என்று ஆரம்பித்துவிட்டால் தேசத்தின் கதி என்ன? நாற்பது கோடி மக்கள் எப்போதும் வறுமையிலேயே வாடிக் கொண் டிருக்க வேண்டியதுதானா?''

''சுத்தப் பொய்! நாற்பது கோடி மக்களும் எங்கே வறுமையால் வாடிக் கொண்டிருக்கிறார்கள்? வடநாட்டி லுள்ள ஜி.டி. பிர்லா கோஷ்டியும், தென்னாட்டிலுள்ள வடபாதி மங்கலம் கோஷ்டியும் கூடவா வறுமையால் வாடிக்கொண்டிருக்கின்றன? உயர்தர உத்தியோக வர்க்கமும் நடுத்தர உத்தியோக வர்க்கமும் கூடவா பசியால் துடித்துக் கொண்டிருக்கின்றன?''

''அவர்கள் சிறுபான்மையோர்தானே? பெரும் பான்மையோரைப் பற்றித்தானே இப்பொழுது பேச்சு?''

''அந்தப் பெரும்பான்மையோருக்காக நீங்கள் என்ன செய்துவிட முடியும்?''

''அவர்களைப் பீடித்த வறுமை ஒழிய வேண்டு மானால் தேசத்தைப் பீடித்த அன்னிய ஆதிக்கம் முதலில் ஒழிய வேண்டாமா? அதற்காகத்தான் நாங்கள் பாடு படுகிறோம்.''

''இப்படித்தான் எத்தனையோ பேர் சொல்கிறார்கள், ஆனால் எனக்கென்னவோ இதெல்லாம் வெறும் ஏமாற்று வித்தை என்று படுகிறது!''

''இதென்ன, சித்ரா? நாலுந் தெரிந்த நீயே இப்படிப் பேச ஆரம்பித்து விட்டாயே!''

''பின் என்ன, அண்ணா? தேசத்தைப் பீடித்த அன்னிய ஆதிக்கம் ஒழிந்தால் மக்களைப் பீடித்த வறுமை எப்படி ஒழியும்?''

''அவர்களுடைய நலத்தை தங்கள் நலமாகக் கருதும் தேசத்தலைவர்களின் கைக்கு அரசாங்க அதிகாரம் மாறும்;

அவர்கள் மக்களைப் பீடித்த வறுமையை ஒழித்து விடுவார்கள்!''

''இந்த இடத்தில்தான் எனக்குச் சந்தேகம். இப்பொழு திருக்கும் தேசத் தலைவர்களெல்லாம் உண்மையிலேயே மக்களின் நலத்தைத் தங்கள் நலமாகக் கொண்டவர்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

''இல்லாமல் என்ன?''

''எனக்கு நம்பிக்கையில்லை; மக்களின் ஆதரவைப் பெற்றுத்தான் அவர்கள் தலைவர்கள் ஆனார்கள் என்று கூட என்னால் நம்ப முடியவில்லை. வெறும் பிரசார பலன் அவர்களை ஏன் தலைவர்களாக்கியிருக்கக் கூடாது?''

''இதென்ன கூத்து...!''

''நீங்கள் வேண்டுமானால் மக்களைக் கவனித்துப் பாருங்கள் - 'வெள்ளைக்காரன் இந்த நாட்டை விட்டுப் போனாலன்றி நாம் சுக வாழ்வைக் காணமுடியாது. ஆகவே, அவனை முதலில் விரட்டுங்கள்!' என்று சொல்பவருக்கும் அவர்கள் 'ஜே' போடுகிறார்கள்; 'வெள்ளைக்காரன் வருவதற்கு முன்னால் இந்த நாடு எப்படியிருந்தது? எங்கே பார்த்தாலும் கொலை, கொள்ளை, கற்பழித்தல், தீ வைத்தல் - மீண்டும் அதே கதிக்கு நாம் ஆளாக வேண்டுமா? ஆகவே காங்கிரஸ் காரனை முதலில் விரட்டுங்கள்!'' என்று சொல்பவருக்கும் அவர்கள் 'ஜே' போடுகிறார்கள். இந்த லட்சணத்தில் வெறும் பிரசார பலத்தைக் கொண்டு ஒரு சிலர் அவர்களை மாற்றிவிடுவது சுலபமாக இருக்கிறது. இதன் பலன் கடைசியில் என்ன ஆகும். தெரியுமா? வெள்ளைக்காரன் இந்த நாட்டை விட்டுப் போனாலும் அரசாங்க அதிகாரம் உண்மையான மக்கள் தலைவர்களின் கைக்கு வராது. பணத்தாலும் பக்க பலத்தாலும் தலைவர்களானவர்களின் கைக்கே போய்ச் சேரும். எனவே, தேசத்தைப் பிடித்த

அன்னிய ஆதிக்கம் ஒழிந்தாலும் ஏழைகளைப் பீடித்த பணக்கார ஆதிக்கம் ஒழியாது!''

''நாங்களெல்லாம் அதைப் பார்த்துக் கொண்டு சும்மாவா இருப்போம்?''

சித்ராவுக்குச் சிரிப்பு வந்தது, ''நீங்கள் அவர்களை என்ன செய்ய முடியும்? மாடிக்குச் செல்பவர்களுக்கு உபயோகமாயிருக்கும் படிகளைப்போல் வேண்டுமானால் இருக்கலாம்! மக்களோ, நீங்கள் என்னதான் உண்மையை எடுத்துச் சொன்னாலும் உங்களை நம்ப மாட்டார்கள். பணக்காரன் சிறைக்குப் போனால், 'ஆஹா, என்ன தியாகம், என்ன தியாகம்! ஏழைகளுக்காக அவன் தன் சுக போகங்கள் அனைத்தையும் எப்படி உதறித் தள்ளி விட்டான், பார்த்தீர்களா?' என்று அவர்கள் புகழ்வார்கள். ஏழை சிறைக்குப் போனாலோ, 'பாவம்' வெளியே இருந்துகொண்டு வயிற்றுக்கு என்ன செய்வான்? அதனால்தான் சிறைக்குப் போய்விட்டான்!'' என்பார்கள். பத்திரிகைகளைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை; பணக்காரர்களை ஆதரிக்காவிட்டால் அவற்றின் கதி அதோகதிதான்! நேற்றைக்கு முன் தினம் நடந்த சம்பவத்தைத்தான் எடுத்துக் கொள்வோமே? உங்களைப் பற்றி எந்தப் பத்திரிகையிலாவது ஒரு வார்த்தை உண்டா, மொத்தத்தில் ஊர்வலம் ஒன்று கலைக்கப்பட்டது என்பதைத் தவிர! அதே பத்திரிகைகள் வீட்டுக்குள் இருந்தபடி காந்திஜி கைது செய்யப்பட்டதைக் கண்டித்துப் பணத்தாலும் பட்டம் பதவிகளாலும் அந்தஸ்து வாய்ந்தவர்கள் என்று ஒரு சிலரால் கருதப்படுபவர்களின் அறிக்கைகளை மட்டும் பிரமாதப்படுத்திப் பிரசுரித்திருந்தன; அந்த அறிக்கைகளோடு அவர்களுடைய படங்களையும் சேர்த்து வெளியிட்டிருந்தன. சில பத்திரிகாசிரியர்கள் அவர்களுடைய அறிக்கையை வர வேற்றுத் தலையங்கங்கள் கூட எழுதியிருந்தார்கள். இந்த லட்சணத்தில் மக்களுக்கு உங்களிடம் மதிப்பிருக்குமா, அவர்களிடம் மதிப்பிருக்குமா?'' என்றாள்.

''மதிப்பும் மரியாதையும், அவற்றால் ஏற்படும் பெயரும் புகழும் எனக்கென்னத்துக்கு, சித்ரா? யார் ஒருவன் அவற்றையெல்லாம் விரும்பாமல் இருக்கிறானோ, அவன்தான் உண்மையான தேசத்தொண்டனாயிருக்க முடியும்'' என்றேன் நான்.

''இருக்கலாம், அண்ணா! ஆனால் அவனால் யாருக்கு என்ன பிரயோசனம்? அவனுக்கும் பிரயோசனமில்லை; அவன் குடும்பத்துக்கும் பிரயோசனமில்லை; மக்களுக்காவது அவனால் ஏதாவது பிரயோசனம் உண்டா, என்றால் அதுவும் கிடையாது. அவன் என்னவோ அவர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்று நினைக்கலாம்; ஆனால் முடியாது. அவனுக்குத்தான் மக்கள் ஏதாவது உதவி செய்யவேண்டியிருக்கும். இந்த நிலையில் அவன் தொண்டனாயிருப்பதைவிட, இல்லாமல் இருப்பதே மேலல்லவா?''

''இதென்ன அதிகப்பிரசங்கித் தனம்? வர வர நீ ரொம்பப் பொல்லாதவளாகப் போய்விட்டாயே!''

''நான் ஒன்றும் பொல்லாதவளாகப் போகவில்லை; உலகம் அவ்வளவு பொல்லாத உலகமாகப் போய் விட்டது. அமெரிக்கா, பிரிட்டன் போன்ற ஜனநாயக நாடுகளைத்தான் பாருங்களேன். அங்கெல்லாம் உண்மையிலேயே மக்களின் ஆட்சியா நடக்கிறது? பணக்காரர்களின் ஆட்சிதான் நடக்கிறது; பட்டம் பதவி பெற்றவர்களின் ஆட்சிதான் நடக்கிறது; ராஜதந்திரம் என்று சொல்லிக் கொண்டு மறந்தும் உண்மை பேசாத பொய்யர்களின் ஆட்சிதான் நடக்கிறது; பொதுஜனத் துரோகிகளின், சுயநலப் புலிகளின், பணப் பேய்களின் ஆட்சிதான் நடக்கிறது. ஏழைகளின் விமோசனம் வெறும் எழுத்தளவில், பேச்சளவில்தான் இன்னும் அங்கெல்லாம் இருந்து கொண்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாதா, என்ன?''

''அதற்காகத்தான் யார் எப்படிப் போனாலும் என் உயிரை ஏழைகளின் நன்மைக்காக அர்ப்பணம் செய்து விடுவதென்று நான் தீர்மானித்து விட்டேன்?''

''ஏழைகளுக்கு வேண்டியது உங்கள் உயிரா, அண்ணா? அதனால் அவர்களுக்கு ஏதாவது பிரயோசனம் உண்டா? இதெல்லாம் வீண் நம்பிக்கை; வேண்டாம். கடைசி காலத்தில் அம்மாவைக் கவலைக்கு உள்ளாக்க வேண்டாம்.''

''அம்மாவுக்குக் குறுகிய மனப்பான்மை கூடாது; பரந்த மனம் வேண்டும். என்னை மட்டும் அவர்கள் புத்திரனாகப் பாவிக்கக்கூடாது; நாற்பது கோடி மக்களையும் புத்திரர்களாகப் பாவிக்க வேண்டும்.''

''உங்களைப்போல அம்மாவுக்கு இன்னும் பைத்தியம் பிடிக்கவில்லை. நீங்கள் சொல்வதுபோல அவர்கள் நாற்பது கோடி மக்களையும் தம் புத்திரர்களாகப் பாவித்தாலும் அந்த நாற்பதுகோடி மக்களும் அவர்களைத் தங்கள் அம்மாவாகப் பாவிக்கத் தயாராயிருக்க மாட்டார்கள்!''

''நீ என்ன சொன்னாலும் நான் கேட்கப்போவதில்லை. வீணாக என்னை ஏன் தொந்தரவு செய்கிறாய்?'' என்று எரிந்து விழுந்தேன் நான்.

''ஒரே ஒரு வரி அண்ணா, 'என்னை மன்னித்து விடுங்கள்' என்று சர்க்காருக்கு எழுதிக் கொடுத்துவிட்டு வந்து விடுங்கள்; அம்மாவின் கவலை தீர்ந்து போகும்.'' என்று கெஞ்சினாள். சித்ரா.

''இந்த உடம்பில் உயிர் இருக்கும் வரை ஒருநாளும் அப்படி எழுதிக் கொடுக்க மாட்டேன்!'' என்று சொல்லி விட்டு நான் குப்புறப் படுத்துக்கொண்டேன்.

''செல்வம், சொல்வதைக் கேள்: பிடிவாதம் பிடிக்காதே! எனக்கு இருப்பது நீ ஒருத்தன்; உன்னையும்

சிறைக்கு அனுப்பிவிட்டு நான் எப்படி உயிரை வைத்துக் கொண்டிருப்பேன்?'' என்று கண்ணீரும் கம்பலையுமாக என்னைத் தடவிக் கொடுத்தார்கள் என் தாயார்.

அதே சமயத்தில் பார்வையாளரின் நேரம் முடிந்து விட்டதை அறிவிக்கும் ஆஸ்பத்திரியின் மணி அடித்தது. சித்ராவும், தாயாரும் என்னைப் பிரிய மனமின்றிப் பிரிந்தார்கள்.

அவர்கள் மறைந்ததுதான் தாமதம்; நாகரீக யுவதி ஒருத்தி, கவலை நிறைந்த கண்களுடன் என் படுக்கை யருகே வந்து, என்னைத் தன் மலர்க் கரங்களினால் மெல்லத் தீண்டினாள்.

நான் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன்; அவளு டைய அகன்ற விழிகள் என்னை அனுதாபத்துடன் நோக்கின.

அடுத்த நிமிஷம் என் புருவங்கள் சற்றே உயர்ந்து தாழ்ந்தன. இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவித உணர்ச்சியும் வியப்பும் ஒருங்கே அடைந்தவனாய் அவளை ஏறிட்டுப் பார்த்தேன்.

அவள் கண்கள் கலங்கின; அதற்குமேல் என்னால் மௌனம் சாதிக்க முடியவில்லை. ''சாந்தினி, நீயா!'' என்றேன், கனவுலகில் சஞ்சரிப்பவனைப்போல.

# 3. அரும்பு மலர்ந்தது!

பாரிஸ்டர் பரந்தாமனாரின் செல்வப் பெண் சாந்தினி. வாழ்க்கையில் வேண்டுமானால் பெண் இனத்தில் நாம் எத்தனையோ விதமான அழகிகளைப் பார்க்கலாம். சிலரைப் பார்த்தால் கண்ணை மூடிக் கொள்ளலாம்போல் தோன்றும்; வேறு சிலரைப் பார்த்தால் கண்ணை மூடிக் கொள்ள வேண்டாம்போல் தோன்றும். ஆனால் கதைகளில் வரும் கதாநாயகிகள் மட்டும் பெரும்பாலும் அழகிகளா? இல்லை; மிக மிகப் பொல்லாத அழகிகள்!

பார்த்த மாத்திரத்தில் கதாநாயகனின் உடல், பொருள், ஆவி மூன்றையும் அவர்கள் அபகரித்துக் கொண்டு, அவனை அசரீரியாக்கி விடுவார்கள். இதில் ஆச்சரியம் என்னவென்றால் அதற்குப் பிறகும் அந்த அப்பாவிக் கதாநாயகன் உயிரோடு இருந்து, கதாநாயகியையும் காதலித்து, கடைசியில் அவளைக் கல்யாணமும் செய்து கொண்டு, கதையையும் சுபமாக முடித்து வைப்பான்!

நல்ல வேளையாகச் சாந்தினி அவ்வளவு பொல்லாத அழகியாயில்லை; சாதாரண அழகியாய்த் தானிருந்தாள். ஆனால் ஒருமுறை பார்த்தால் இன்னொரு முறையும் பார்க்க வேண்டும்போல் இருக்கும் அவள் தோற்றம். குரலின் இனிமையோ கேட்கக் கேட்க அலுக்காது; குணத்திலும் அப்படியொன்றும் குற்றம் சொல்வதற் கில்லை.

எனினும்; பரந்தாமனார் தம் பெண்ணிடம் உயிரையே வைத்துக்கொண்டிருந்தார் என்று சொல்லிவிட முடியாது. ஏனெனில், அவர் வீட்டிலும் வெளியிலுமாக உயிரோடு நடமாடிக் கொண்டிருந்தார்!

அவருடைய வீட்டில் சாந்தினிக்கு நேர் இளையவள் என்று சொல்லக்கூடிய இன்னொரு ஜீவனும் நடமாடிக்

கொண்டிருந்தது. அந்த ஜீவனின் முகத்தில் எப்பொழுதும் ஏதோ ஒரு விவரிக்க முடியாத ஏக்க பாவம் குடிகொண்டிருக்கும். அதற்குக் காரணம் என்னவாயிருக்கும் என்று நான் அவளைப் பார்க்கும்போதெல்லாம் ஆராய முற்படுவதுண்டு. ஆனால் நீண்ட நாட்கள் வரை அது எனக்கு விளங்காத புதிராகவே இருந்து வந்தது.

மேலும், அத்தகைய ஆராய்ச்சிகளில் இறங்குவதற்காகவா நான் அங்கு போயிருந்தேன்? தொழிலில் அனுபவம் பெறுவதற்காகவல்லவா?

பரந்தாமனார் பாரிஸ்டராயிருந்தாலும் மற்றவர்களைப் போல அவர் சட்டத்துக்கு அடிமையாகிவிடவில்லை; சட்டந்தான் அவருக்கு அடிமையாகவும், வசதி மிக்க வாழ்க்கைக்கு வழி கோலும் தொண்டனாகவும் இருந்து வந்தது. ஆகவே அவர் வெறும் சட்ட இயந்திரமாகி விடவில்லை; உயிரும் உணர்ச்சியுமுள்ள மனிதராகவே இருந்து வந்தார். சமூகப் புணருத்தாரணத்தில் அவருக்கிருந்த ஆர்வம் பிரசித்தமானது. பாரத சமுதாயத்திலுள்ள அநீதிகளையும் அக்கிரமங்களையும் பற்றி ஆவேசமாகப் பேசும்போது அவருடைய கண்களில் தீப்பொறி பறக்கும், கேட்பவர்களுக்கோ அந்தக் கணமே கையில் தீப்பந்தத்துடன் ஓடோடியும் சென்று அத்தகைய சமுதாயத்தை அடியோடு கொளுத்திச் சாம்பலாக்கி விட்டு வந்து விடுவோமா என்று தோன்றும். அதிலும் கைம் பெண்களின் துக்ககரமான வாழ்க்கையைப் பற்றி அவர் விவரிக்கும்போது, ஒரே கண்ணீர் மாரிதான்! ‘முதல் தாரத்தை இழந்த ஒவ்வொரு மடையனும் ஏன் இரண்டாந் தரமாக ஒவ்வொரு கைம்பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு சமூகத்தின் ஊழலை ஒழிக்கக் கூடாது?’ என்று உச்சஸ்தாயியில் இரைந்து கேட்கும்போது? அவர் தொண்டையிலுள்ள ஈரம் அவ்வளவும் வற்றிப்போகும். உடனே அருகிலிருப்பவர்கள் அத்தனை பேரும் ஆளுக்

கொரு சோடாக் குப்பியைத் திறந்து எடுத்துக் கொண்டு அவரை நோக்கிப் பாய்ந்து வருவார்கள் - வற்றிப்போன தொண்டையில் ஈரம் பாய்ச்சத்தான்!

அப்படிப்பட்டவர் காந்திஜியையும் காங்கிரஸ் மகா சபையையும் மட்டும் வெறுத்துப் பேசி வந்ததற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. சமுதாயத்திலுள்ள ஊழலை ஒழிப்பதற்கு முதலில் வழி தேடாமல் நாட்டுக்கு விடுதலை கோருவது, அஸ்திவாரம் இல்லாமல் கட்டிடம் கட்டுவது போலாகும் என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. அத்தகைய விடுதலை நீண்ட நாட்கள் நீடித்து நிற்க முடியாது என்பதும் அவருடைய அபிப்பிராயமாகும்.

இவ்வளவு தூரம் தீவிரவாதியாயிருந்த பரந்தாமனார், வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைக்கும் விந்தை மனிதராயிருக்க முடியுமா? ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழக்கூடிய வகையில் தம் பெண்ணை வளர்த்து வந்தார். அதன் பயனாக சாந்தினி வைத்தியப் பரீட்சைக்குப் படித்து வந்தாள். கலாசாலைக்குப் போகும் நேரம் தவிர, பாக்கி நேரங்களில் கூட அவளைப் பார்ப்பது அரிது. ஆனால் அவளுக்கு நேர் இளையவளாகத் தோன்றும் அந்தப் பெண் மட்டும் ஏன் எப்பொழுது பார்த்தாலும் வீட்டிலேயே அடைந்து கிடக்கிறாள்? அவளுடைய முகத்தில் மட்டும் ஏன் அத்தகைய ஏக்க பாவம் எப்பொழுதும் குடிகொண்டிருக்கிறது?

இந்தக் கேள்விகள் எப்பொழுதும் என் உள்ளத்தில் எழுந்தவண்ணமாக இருந்தன. பாரிஸ்டரின் கருத்துப்படி, அந்தப்பெண் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாகப் பழகக் கூடியவளாயிருந்தாலும் அதற்குக் காரணம் என்னவென்று அவளையே கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கலாம். அவளோ என்னைக் கண்ட மாத்திரத்தில் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் தலையை

உள்ளே இழுத்துக் கொள்பவளாயிருந்தாள்.

அந்தப் பெண்ணைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கும் பரந்தாமனாரிடம் மிக்க அனுதாபம் உண்டாகும். 'பாவம், அவர் எவ்வளவோ முற்போக்குடையவரா யிருக்கிறார்; இந்தப்பெண் அவருக்கு நேர் விரோதமாக யிருக்கிறாளே!' என்று எண்ணி வருந்துவேன்.

சில சமயம், கையில் அதிகாரம் இல்லாமலே சமூகத் தைச் சீர்திருத்திவிட முடியும் என்று சொல்லும் அவரால் தம் வீட்டிலுள்ளவர்களையே அவ்வாறு சீர்திருத்த முடிய வில்லையே!' என்று நினைக்கும் போது எனக்குச் சிரிப்பும் வருவதுண்டு.

இதைப்பற்றி அவரையே கேட்டுத் தெரிந்துகொண்டு விடலாமென்றாலும் அதற்கு வேண்டிய தைரியம் அப்போது என்னிடம் இல்லை. 'அதெல்லாம் என் சொந்த விஷயம்' என்று அவர் முகத்தில் அடித்தாற்போல் பதில் சொல்லிவிட்டால் என்ன செய்வது?

இப்படியெல்லாம் நான் மனத்தைப் போட்டு உழற்றிக்கொண்டிருந்த சமயத்தில்தான் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

. வழக்கம்போல் ஒருநாள் பாரிஸ்டர் வீட்டுக்குச் சென்றபோது அவர் வீட்டில் இல்லை. வாசலில் அந்தப் பெண் மட்டும் நின்று கொண்டிருந்தாள். அவள் என்னைக் கண்டதும் உள்ளே சென்றுவிட்டாள்!

சாந்தினியும் அப்போது கலாசாலைக்குப் போயிருந் தாள் போலிருக்கிறது. நான் மெள்ள உள்ளே சென்று ஒரு முறை அங்குமிங்குமாகச் சுற்றிப் பார்த்த பிறகு வீட்டுக்குத் திரும்பிவிட்டேன்.

மறுநாள் சென்றபோது, "நேற்று எங்கே உன்னைக்

காணோம்?'' என்று கேட்டார் பரந்தாமன்.

''வந்திருந்தேனே, உங்களைத்தான் காணவில்லை!'' என்றேன் நான்.

''எப்போது வந்திருந்தாய்?''

''காலையில்தான் வந்திருந்தேன்; வாசலில் நின்று கொண்டிருந்த உங்கள் பெண்ணைக் கூடப் பார்த்தேன்...''

''நிஜமாகவா! நான் அவளைக் கல்லூரிக்கு அனுப்பி விட்டுத்தானே வெளியே போனேன்?''

''மூத்த பெண்ணைப் பார்க்கவில்லை; இளைய பெண்ணைப் பார்த்தேன்!''

இதைக் கேட்டதும் பரந்தாமனாரின் முகத்தில் ஏனோ அசடு வழிந்தது. அவர் மெல்லவும் முடியாமல், விழுங் கவும் முடியாமல் தவியாய்த் தவித்தார்.

எனக்குத் தர்ம சங்கடமாகப் போய்விட்டது. ''என்ன, உங்களிடம் ஒன்றும் சொல்லவில்லையா?'' என்று சம்பந்தமில்லாமல் கேட்டு வைத்தேன்.

பாவம், அவர் தம் எண் சாண் உடம்பையும் ஒருசாணாகக் குறுக்கிக்கொண்டு, ''அவள்... அவள்...'' என்று இழுத்தார்.

நான் ஏதோ ஒரு பெரிய ஆபத்தில் சிக்கிக்கொண்ட வனைப் போல அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''... அவள் என்... அவள் என் இளைய பெண் இல்லை... இ...ளை... யாள்...!'' என்று ஒருவாறு அவர் கூறி முடித்தார்.

''அப்பாடி!'' என்று நான் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன்.

அந்த ஒரு நிமிடத்தில் ஒரு வருடம் சிறை வாசம் செய்து விடுதலையடைந்த உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது.

என்னுடைய நிலைமை கொஞ்சம் சீரடைந்ததும் அவருடைய நிலைமையைச் சீர்படுத்த எண்ணி, "அதனா லென்ன, ஈவிரக்கமற்ற சமுதாயத்திற்குப் புத்தி கற்பிப்பதற் காக நீங்களே ஒரு பால்ய விதவையை இரண்டாந்தாரமாகக் கொண்டு வழி காட்டினீர்கள் போலிருக்கிறதே!'' என்றேன்.

அவ்வளவுதான்; 'கலீர்' என்ற சிரிப்பொலி என் காதில் விழுந்தது. திரும்பிப் பார்த்தேன்; சாந்தினி எங்கள் பார்வையிலிருந்து நழுவிக் கொண்டிருந்தாள்.

அது மட்டுமா? நான் எதிர்ப்பார்த்ததற்கு விரோதமாகப் பரந்தாமனாரின் நிலைவேறு இன்னும் மோசமாயிற்று; "இல்லை, அப்படியெல்லாம் நான் ஒன்றும் செய்ய வில்லை!'' என்று தடுமாறினார்.

நிலைமையை எப்படியாவது சமாளித்தே தீருவது என்ற உறுதியுடன்; "ஓஹோ, அப்படியே இருந்தாலும் அதில் ஒன்றும் குற்றம் இல்லையே! உங்களுக்கோ வெள்ளத்தோடு போகும் சமுதாயத்தை எப்படியாவது கரைசேர்க்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. ஆனால் அதற்கேற்றாற்போல் எல்லாம் அமைய வேண் டாமா? சாந்தினி மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் முதல் தாரம் தவறிய நீங்கள், உங்களுடைய கொள்கைப்படி இரண்டாந்தரமாக ஒரு பால்ய விதவையைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கலாம்; ஜாதிப் பிரஷ்டத்தையும், சமூக பகிஷ்காரத்தையும், துச்சமாகக் கருதியிருக்கலாம்; தனிப்பட்ட முறையில் அவற்றை எதிர்த்து நின்று போராடி வெற்றியோ, தோல்வியோ அடைந்திருக்கலாம். அதன் பலாபலனும் உங்களோடு போய்விடும்; வேறு யாரையும் பாதிக்காது. ஆனால் உங்கள் நிலைமைதான் வேறாக இருக்கிறதே! சாந்தினியின் பிற்கால வாழ்க்கையைப் பற்றி

நீங்கள் சிந்தித்தாக வேண்டுமே! குடும்பத்தில் எவ்விதச் சொத்தையும், சொள்ளையும் இல்லாமல் இருந்தால்தானே அவளைப் 'பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள்' கல்யாணம் செய்துகொள்ள முன் வருவார்கள்? என்னதான் இருந்தாலும் பெற்ற பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்க எந்தத் தகப்பனின் மனமாவது துணியுமா? மேலும் சொந்த விஷயம், பாருங்கள்!... அதனால்தான் உங்கள் கொள்கைக்கு விரோதமாக நீங்கள் ஓர் இளம் பெண்ணையே இரண்டாந் தாரமாகக் கொண்டீர்கள் போலிருக்கிறது! - இதெல்லாம் என்னைப் போன்றவர்களுக்குத் தெரியாதா, என்ன? - விட்டுத் தள்ளுங்கள்!'' என்று ஒரு போடு போட்டு வைத்தேன்.

என்னுடைய யுக்தி பலித்தது; அவருடைய முகமும் மலர்ந்தது. ''என்ன இருந்தாலும் நீ புத்திசாலி! எப்படியோ என் உள்ளத்தில் இருந்தவற்றை யெல்லாம் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டாயே!'' என்று என் முதுகில் தட்டிக் கொடுக்க வந்தார்.

அதிலிருந்து தப்பிப் பிழைத்து நான் வீடு வந்து சேர்ந்தேன்.



இந்தச் சம்பவத்திற்குப் பிறகு சாந்தினி என்னைப் பார்க்க நேரும்போதெல்லாம் ஒரு தினுசாகப் பார்ப்பதும் உள்ளூறச் சிரித்துக்கொள்ளுவதுமாக இருந்தாள். அவளிடம் காணப்பட்ட இந்த மாறுதல் என்னை என்னவோ செய்தது. இத்தனைக்கும் அன்று நான் ஏதோ அசட்டுத்தனமாகச் சொல்லி வைத்ததும், அதற்கு அவள் 'கலீர்' என்று சிரித்ததும் தவிர, எங்களுக்கிடையே அதற்கு முன் எந்த விதமான பேச்சு வார்த்தையும் கிடையாது.

பின் ஏன் இப்படி?

இந்தச் சந்தேகத்தை தீர்த்துக் கொள்வதற்காகவோ என்னவோ, அன்று ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது.

சாந்தினி மட்டும் வீட்டில் இருந்த சமயம் அது. "அவர் இருக்கிறாரா?" என்று நான் கேட்டேன்.

"எவர்?" என்று திருப்பிக் கேட்டாள் அவள். நான் சளைக்கவில்லை; "அவர்தான்!" என்றேன்.

"எவர்தான்?" என்றாள் அவளும் சளைக்காமல்.

"உங்கள் அப்பா!"

அவள் குறும்புத் தனத்துடன் தன்னைச் சுற்றி ஒரு முறை பார்த்துவிட்டு, "உங்கள் என்ன உங்கள்? இங்கே நான் ஒருத்தி மட்டுந்தானே இருக்கிறேன்?" என்றாள்.

"நீங்கள் மட்டுந்தான் இருக்கிறீர்களா? - சரி. நான் போய் வருகிறேன்!" என்று திரும்பினேன்.

"என் அப்பா வரும் வரை இங்கே நீங்கள் இருந்தால் என்னவாம்?"

"ஒரு பெண் தனிமையில் இருக்கும்போது..."

"ஆண் மகன் வந்தால் அப்படியே தழுவிக் கொண்டு விடுவாளாக்கும்!"

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. "இல்லை..." என்று தயங்கினேன்.

"இல்லை என்ன இல்லை? இந்தப் பெண்களைப் பற்றி ஆண்கள் ஏன்தான் இம்படிக் கற்பனை செய்து கொண்டு விடுகிறார்களோ, எனக்குத் தெரியவில்லை. அவ்வளவு பலவீனர்களா; நாங்கள்? எங்களுக்கென்று மானம் மரியாதை, உயர்ந்த எண்ணங்கள், ஒழுக்கம் ஒன்றுமே கிடையாதா? இப்படியெல்லாம் நடந்துகொள்வதன் மூலம் அவற்றையெல்லாம் நீங்கள்தான் எங்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டுமா? அதிலும் உங்களைப் போன்ற புதுயுகத்தை ஸ்தாபிக்கப் போகிறவர்கள், சமூகத்தைச் சீர்திருத்திப் புரட்டப் போகிறவர்கள், பெண்களுக்குப்

பரிபூரண விடுதலையளிக்கப் போகிறவர்களே இப்படி நடந்துகொண்டால், நாங்களெல்லாம் என்றைக்குத்தான் ஆண்களோடு சரிநிகர் சமானமாகப்பழகுவது?''

''அப்படியெல்லாம் நான் ஒன்றும் சொல்ல வில்லையே; உங்கள் அப்பாதானே சொல்கிறார்!''

''அவர் கைக்கு அதிகாரம் வருவதற்கு முன்பே புரட்டப் போகிறார்; நீங்கள் கைக்கு அதிகாரம் வந்தபிறகு புரட்டப் போகிறீர்கள்! - இவ்வளவுதானே உங்களுக்கும் அவருக் கும் உள்ள வித்தியாசம்? - தமது உள்ளத்தில் இருந்த வற்றையெல்லாம் நீங்கள் எப்படியோ கண்டுபிடித்துச் சொல்லிவிட்டதாக அவர் பீற்றிக்கொண்டாரே, அன் றைக்கே உங்களுடைய லட்சணமும், அவருடைய லட்சணமும் இவ்வளவுதான் என்று தெரிந்துவிட்டதே!''

''என்ன தெரிந்துவிட்டது?''

''உண்மையிலேயே அவர் தம் கொள்கைப்படி ஒரு பால்ய விதவையை இரண்டாந்தாரமாகக் கொள்வதற்கு நானா தடையாய் இருந்தேன்? அவர் அவ்வாறு செய்து கொண்டிருந்தால் நீங்கள் நினைக்கிறபடி என்னுடைய வாழ்க்கை அஸ்தமித்தா போய்விடும்? எனக்கென்று முற்போக்குடைய வாலிபன் ஒருவன் இந்தப் பரந்த உலகத்தில் கிடைக்காமலா போயிருப்பான்? உங்களு டைய சுயநலத்திற்காக நீங்கள் செய்வதையெல்லாம் செய்துவிட்டுப் பழியைப் பிறர்மீது சுமத்தி விடுகிறீர்களே?''

''இதென்ன கூத்து! நானா உங்கள்மீது பழி சுமத்தினேன்?''

''சந்தேகமில்லாமல்! இல்லையென்றால், வயது வந்த பெண் ஒருத்தி உங்களுக்கு இருக்கும்போது நீங்கள் இரண்டாந்தாரம் கொள்ளாமலே இருந்திருக்கலாம் என்று நீங்கள் ஏன் அன்று அடித்துச் சொல்லியிருக்கக்கூடாது?''

''நான் என்ன செய்வேன்? அன்றைய நிலைமை அப்படியிருந்தது...''

''அதெல்லாம் ஒன்றும் இல்லை; உங்கள் உபதேசம் ஊருக்கு மட்டும் என்று சொல்லுங்கள்!'' என்றாள் அவள்.

இந்தச் சமயத்தில் மோட்டார் 'ஹாரன்' சத்தம் கேட்டது. வருவது பரந்தாமன்தான் என்று அறிந்ததும் என் உள்ளத்தில் ஏதோ ஒருவிதமான அச்சம் உதித்தது 'வீட்டில் யாரும் இல்லாத வேளையில் இவனுக்கு இங்கே என்ன வேலை?' என்று அவர் நினைத்துக்கொண்டு விட்டால்? - நான் மடமடவென்று மாடிப் படிகளில் ஏறினேன்; சாந்தினி கலகலவென்று சிரித்தாள்.

மேற்கூறிய சம்பவம் நிகழ்ந்து ஆறு மாதங்களுக்கு மேலிருக்கும். அதற்குப்பிறகு நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டதைத் தவிர ஒருவார்த்தைகூடப் பேசி அறியோம். இந்த நிலையில்தான் அவள் என்னைப் பார்க்க ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தாள். அன்றும் என்னுடன் பேசுவதற்கு ஆஸ்பத்திரியின் சட்ட திட்டங்கள் அவளை அனுமதிக்கவில்லை. பார்வையாளரின் நேரம் முடிந்ததும் 'டக், டக்' என்ற டாக்டர்களின் பூட்ஸ் ஒலியும், 'களுக், களுக்' என்ற நர்சுகளின் சிரிப்பொலியும் கலந்து ஒலிக்க ஆரம்பித்துவிட்டன. ஆகவே, ''சாந்தினி, நீயா!'' என்று நான் கேட்டதற்குப் பதிலாக, என்மேல் இரண்டு சொட்டுக் கண்ணீரைத்தான் அவளால் அன்று உதிர்க்க முடிந்தது!

அதற்குப் பின் மட்டும் என்ன? - அவள் வரும் போதெல்லாம் என் தாயாரும், தங்கையும் வந்து விடுவார்கள்; குறிப்பிட்ட நேரம் வரை அவர்களே என்னுடன் பேசிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் போன பிறகு அவள் வருவாள்; ஆவல் நிறைந்த கண்களுடன் என்னைப்பார்ப்பாள் - அதற்குள் மணி அடித்து விடும் - ஏமாற்றம், அதே ஏமாற்றம்! - திரும்பிச் சென்று விடுவாள்.

இப்படியாகப் பத்துப் பதினைந்து நாட்கள் ஓடி மறைந்தன. நானும் கோர்ட்டுக் கூண்டில் நின்று கணம் நீதிபதி அவர்கள் நான் செய்யாத குற்றத்துக்கு அளிக்கப் போகும் தண்டனையை ஏற்றுக் கொள்ளும் அளவுக்குக் குணமானேன்!

அதற்கு முதல் நாள் அவள் வழக்கம்போல் வந்தாள். அவளிடம் விடை பெற்றுக்கொள்ளும் நோக்கத்துடன், ''போய் வருகிறேன்!'' என்றேன் நான். ''என்னை மறவாதீர்!'' என்று சொல்லிவிட்டுச் சென்றாள் அவள்.

# 4. தண்டனை

இந்த உலகத்தில் 'நியாயம்' என்று ஒன்று இருக் கிறதே, அதற்கும் பிரிட்டிஷாருக்கும் நெடு நாட்களாகவே நெருங்கிய சம்பந்தம் உண்டு. அந்த நியாயத்துக்கு உலகத்தில் எந்த மூலையிலாவது கொஞ்சம் பங்கம் நேர்ந்தாலும் சரி, பிரிட்டிஷாரை அங்கே காணலாம். அந்த விஷயத்தில் தங்களுக்குச் சம்பந்தம் இருக்கிறதோ இல் லையோ, அங்கிருக்கும் நியாயத்தைக் கோருபவர்களின் தலையில் ஓயாமல் ஒழியாமல் குண்டுகளைப் போட்டுத் தீர்த்துக் கட்டும் வரை அவர்கள் சும்மா இருக்க மாட்டார்கள்!

இப்படியாக, பிரிட்டிஷாரை நம்பி நியாயமும், நியாயத்தை நம்பி பிரிட்டிஷாரும் உயிர் வாழவேண்டிய நிலைமை உலகத்தில் எப்படியோ ஏற்பட்டுவிட்டது. இதனால் அவர்கள் அக்கிரமம் செய்தாலும், அதை நியாயத்தின் பேராலேயே நாளது வரை செய்ய வேண்டியிருக்கிறது.

இந்தத் தர்மத்திலிருந்து எங்களைப் போன்றவர்களுக்கு மட்டும் விதிவிலக்கு அளிக்க முடியுமா, என்ன? அதிலும் நாங்கள் செய்த குற்றம் சாதாரணமானதா? 'சுதந்திரம் எங்கள் பிறப்புரிமை' என்று சொல்லிக்கொண்டு, அதற்காகக் கிளர்ச்சி செய்த மகத்தான குற்றத்தையல்லவா நாங்கள் செய்திருக்கிறோம்? ஆகவே, சம்பந்தப்பட்ட வர்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு போய், மறுநாள் கோர்ட்டில் நிறுத்தி வைத்தார்கள். சத்தியத்தை யன்றி வேறொன்றும் அறியாத போலீஸாரை எதிர்த்து எங்களில் யாரும் எதிர்வழக்காட விரும்பவில்லை; காங்கிரஸ் தலைவர்களும் எங்களை அதற்கு அனுமதிக்க வில்லை.

அடியேன்மீது அப்போது எத்தனை குற்றங்கள் சுமத்தப்பட்டன என்று இப்போது எனக்கு ஞாபகமில்லை. ஆனால் மூன்று வருடங்கள் கடுங்காவல் தண்டனை பெற்றது மட்டும் இன்னும் என் ஞாபகத்தில் இருக்கிறது.

மூன்று வருடங்கள், மொத்தம் ஆயிரத்துத் தொண் ணூற்றைந்து நாட்கள்!

அதுவரை அம்மாவைப் பார்க்க முடியாது; அருமைத் தங்கையையும் காண முடியாது. உற்ற நண்பர்கள், ஊரோடு பழகியவர்கள், இனி நம்மைச் சந்திக்க மாட் டார்கள்; அளவளாவ மாட்டார்கள். நம்மை நம்பியிருந்த தாயார், நமக்காக எத்தனையோ தியாகங்களைச் செய்த தாயார்; நம்முடைய எதிர்கால வாழ்க்கையைப் பற்றி என்னவெல்லாமோ கனவு கண்டுகொண்டிருந்த தாயார், நம்முடைய பேச்சிலும் சிரிப்பிலும், அன்புக்குகந்த அப்பாவின் பிரிவை மறந்திருந்த தாயார் - இனி என்ன செய்வார்கள்? - நாம் திரும்பி வரும் வரை உயிரோடு இருப்பார்களா? - சித்ரா! பாவம்; பெண்ணாய்ப் பிறந்த வள்; தந்தையற்றவள்; தன்னந்தனியாக வாழ்வதற்குத் தைரியமிருந்தாலும் நாக்கில் நரம்பின்றித் தூற்றும்

சமூகத்துக்கு முன்னால் அவ்வாறு வாழ வகையில்லா தவள்; கூனோ குருடோ, செவிடோ ஊமையோ, தனக்குப் பிடித்தவனோ பிடிக்காதவனோ - யாரோ ஓர் அனாம தேயத்தின் சுயநலத்துக்காகத் தன்னை அர்ப்பணம் செய்வதற்கென இந்தப் பாழும் உலகத்தில் பிறந்தவள். அதிலும் குறிப்பிட்ட வயதிற்குள் அந்தக் கதிக்கு ஆளாகி விட வேண்டுமென்று சமூகத்தினரால் நிர்ப்பந்திக்கப் படுகிறவள்; தன் வாழ்க்கைத் துணையைத் தானே தேடிக் கொள்வதற்குச் சுதந்திரமில்லாதவள்; தன்னுடைய நல்வாழ்வுக்குத் தன் அண்ணன் ஒருவனையே நம்பி இருந்தவள் - இனி என்ன செய்வாள்?

நாம் திரும்பி வரும் வரை அவள் தன்னந் தனியாக வாழ்வதற்குச் சமூகம் அனுமதிக்குமா? - இல்லை, ஓய்வு கிடைத்தபோதெல்லாம் அவளைப் பற்றி ஏதாவது விதவித மான கதை கட்டி விடுவதையே தன் பொழுதுபோக்காகக் கொண்டிருக்குமா?

சாந்தினி - ஆம், சாந்தினி! - அந்தப் பெயரில் தான் எவ் வளவு அமைதி நிலவுகிறது! அந்த அமைதி, இனி அவளை நினைக்கும்போது நம் உள்ளத்தில் நிலவுமா? இல்லை, நம்மை நினைக்கும்போது அவள் உள்ளத்தில்தான் அத்தகைய அமைதியை எதிர்பார்க்க முடியுமா?

இப்படியெல்லாம் என் மனம் என்னவெல்லாமோ எண்ணியெண்ணி அலைபாய்ந்தது. இத்தனைக்கும் பொது வாழ்வில் ஈடுபட்டுப் பல பயங்கரமான கொடுமைகளுக்கு ஆளான எத்தனையோ தேச பக்தர்களைப் பற்றி நானும் உங்களைப்போலப் படித்துத்தான் இருந்தேன். அம்மாதிரி கொடுமைகளுக்கு ஆளாகும் போது கூட அவர்களுடைய முகம் மலர்ந்தே இருக்குமாம்!

இந்த இடத்தில் தயவு செய்து நீங்கள் என்னை மன்னித்துவிட வேண்டும். ஏனெனில், அடியேன் முகம் அவ்வாறு மலரவில்லை. காரணம், இயற்கை மனிதனான நான், செயற்கைத் தேவனாக முடியாமல் இருந்ததே!

அடிமை நாட்டு விடுதலையில் எனக்கு ஆர்வம் இருந்தாலும், அதில் வாழும் நாற்பது கோடி மக்களும் நல்வாழ்வு பெறவேண்டுமென்பதில் எனக்கு அக்கறை இருந்தாலும், அதற்காக என்னை ஈன்ற தாயையும், உடன் பிறந்த தங்கையையும், நடுவில் வந்து என் இதயத்தில் இடம் பெற்றுவிட்ட அந்த இன்முகத்தையும் என்னால் அறவே மறந்துவிட முடியவில்லை.

ஆனால் அவர்களுக்காக முன்னால் வைத்த காலைப் பின்னால் வைக்கவில்லை நான்; சென்றே விட்டேன் சிறைக்கு!

அங்கே எத்தனையோ விதவிதமான கைதிகளை என்னால் பார்க்க முடிந்தது. பேரும் புகழும் பெறுவதற்காக வேறு வழியின்றிச் சிறைக்கு வந்தவர்கள்; சிறைக்குள் இருந்தாலும் சொந்த பண பலத்தைக் கொண்டு சுக வாழ்வு வாழமுடியும் என்ற நம்பிக்கையுடன் வந்தவர்கள்; தங்கள் சொந்த நலனை உத்தேசித்துப் பிறரால் கழுத்தைப் பிடித்து உள்ளே தள்ளப்பட்டவர்கள்; தேர்தலின் போது வோட்டர்களின் கண்களில் மண்ணைத் தூவுவதற்காக வந்தவர்கள்; தாங்கள் அதுவரை செய்து வந்த அயோக்கியத்தனங்கள் அத்தனையும் மறைந்து போவதற்காக வந்தவர்கள்; சிறை சென்ற தேசத் தொண்டர் என்ற நற்சாட்சி பெறுவதற்காக வந்தவர்கள்; மத்தியில், சர்க்காருக்கும், காங்கிரசுக்குமிடையே ஏதாவது சமரசம் ஏற்பட்டு, அதன் பயனாகச் சீக்கிரமே விடுதலையடைந்து விடலாம் என்ற சபலத்துடன் வந்தவர்கள் - இவர்களுக்கு மத்தியிலே உண்மையாகத் தேச விடுதலையில் ஆர்வங்கொண்டு வந்திருந்த சில அப்பாவிகளும் அங்கங்கே இருக்கத்தான் செய்தார்கள்!

அவர்களில் யாரையும் எனக்கு முதலில் தெரியவில்லை; என்னையும் அவர்களில் யாருக்கும் தெரியவில்லை.

ஆஸ்பத்திரியில் சந்தித்த பாலுவையாவது அங்கே பார்க்க முடியுமென்று நான் எண்ணியிருந்தேன்; அவனையும் காணவில்லை.

எனவே தன்னந்தனியாகச் சிறைக்குள் நுழைந்த நான் கடைசிவரை தன்னந்தனியாகவே இருக்க நேரிடுமோ என்ற அச்சம் என்னைப் பிடுங்கித் தின்றது. ஆனால், அடுத்த நிமிஷமே அந்த அச்சத்திற்கு அர்த்தமில்லாமற் போய்விட்டது. காரணம், அதற்குள் எத்தனையோ பேர் வலுவில் வந்து என்னை அறிமுகம் செய்து கொண்டது தான்!

அதுமட்டுமல்ல; என்னதான் தலைகீழாக நின்றாலும் சிறைக்கு வெளியே அறிந்துகொள்ள முடியாத ஒருவருடைய மனோபாவத்தைச் சிறைக்குள்ளே வெகு எளிதில் அறிந்து கொள்ள முடிந்தது. அவரவர்களுடைய அந்தரங்க நோக்கங்கள், ஆசாபாசங்கள் எல்லாம் சிறை வாசத்தின் போது உள்ளது உள்ளபடியே வெளிப்பட்டன. அவற்றையெல்லாம் கேட்டபோது எனக்கு ஒரு பக்கம் அதிசயமாகவும், இன்னொருபக்கம் ஆச்சரியமாகவும் இருந்தது, ஏனெனில், சிறைக்கு வெளியே இருந்தபோது தேச பக்தர்கள் அனைவரையும் தெய்வப் பிறவிகள் என்று நானும் உங்களைப்போல் எண்ணிக்கொண்டிருந்தேன்!

ஒருநாள் ஒரு தேசபக்தருக்கு விபரீதமான சந்தேகம் ஒன்று ஏற்பட்டுவிட்டது. "ஏன் ஸார், இப்படி அடிக்கடி ஏதாவது ரகளை செய்து நாம் சிறைக்கு வருவதால் சுயராஜ்யம் வந்துவிடுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா!"

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "ஏன், நீங்கள் அப்படி நினைத்துத் தானே சிறைக்கு வந்திருக்கிறீர்கள்?" என்றேன்.

"அதெல்லாம் வேறு விஷயம் - இந்த விஷயத்தில் உங்கள் அபிப்பிராயம் எப்படி?"

எனக்குத் தர்ம சங்கடமாகப் போய்விட்டது. ஏனெனில் அன்று வரை எனக்கென்று ஒரு அபிப்பிராயமும் இருக்கவில்லை!

இந்த நிலைமை எனக்கு மட்டும் அல்ல; இன்னும் எத்தனையோ பேருக்கு உண்டு என்பது பின்னால்தான் எனக்குத் தெரிந்தது. ஆகவே, அந்தச் சமயம் மென்று விழுங்கிக்கொண்டு, ''எனக்கென்று ஒரு அபிப்பிராயமும் இல்லை, ஸார்! இப்படிக் கிளர்ச்சி செய்வதால் இந்த நாட்டுக்கு விடுதலை கிடைக்கக்கூடும் என்று தலைவர்கள் நம்புகிறார்கள். அவர்களை நம்பியும், என்னையும் அறியாமல் என் உள்ளத்தில் எழுந்த ஏதோ ஒரு விதமான உணர்ச்சியின் வேகத்தைக் கட்டுப்படுத்த முடியாமலுந் தான் சிறைக்கு வந்திருக்கிறேன்!'' என்றேன்.

''இதனால் உங்களுக்கு ஏதாவது நன்மையுண்டா?''

''எனக்கு நன்மையுண்டோ இல்லையோ? தேசத்துக்கு நன்மையுண்டு என்று நான் நினைக்கிறேன்.''

''தேசத்துக்கு நன்மையுண்டானால் உங்களுக்கு நன்மை உண்டாகிவிடுமா?''

''எனக்கு மட்டுமென்ன, எல்லோருக்குந்தான் நன்மை யுண்டாகும்.''

அவர் ஏளனமாகச் சிரித்துக்கொண்டே, ''உலகம் தெரியாத மனிதராயிருக்கிறீர்களே? தேசத்துக்கு நன்மை யுண்டானால் தேசத் தலைவர்களுக்குத்தான் நன்மையுண் டாகும்; நீங்களும் நானும் எப்பொழுதும் இருப்பதுபோல் இருக்க வேண்டியதுதான்!'' என்றார்.

''அப்படியிருக்கும்போது நீங்கள் ஏன் சிறைக்கு வந்திருக்கிறீர்கள்!''

''எல்லாம் காரியத்தோடுதான்! துரதிர்ஷ்டவசமாக என் அப்பா தலைவராயிருக்கவில்லை. அப்படியிருந்திருந்தால்

நானும் பிறக்கும்போதே தலைவராகப் பிறந்திருப்பேன். இந்த நிலையில் எனக்கோ தலைவராக வேண்டுமென்று ஆசை. அதை நிறைவேற்றிக் கொள்வது எப்படி - இப்படி ஏதாவது செய்தால்தானே?''

''பைத்தியந்தான்! மக்களுக்குச் சேவை செய்யாமல் யாராவது தலைவராகிவிட முடியுமா?''

''எனக்கா பைத்தியம்? நன்றாய்ச் சொன்னீர்கள்; உங்களுக்குத்தான் பைத்தியம் பிடித்திருக்கிறது! கையில் பணமில்லாமல் என்ன சேவை வேண்டுமானாலும் செய்து பாருங்கள்; மக்கள் உங்களைக் கவனிக்கவே மாட்டார்கள். முதலில் அவர்களுக்கென்று ஏதோ சொந்த அபிப்பிராயம் உண்டென்று நீங்கள் நம்புவதே அறியாமையாகும். நான் சொல்கிறேன், அவர்களுக்குச் சொந்தமாக ஒன்றுமே கிடையாது. நாம் தான் நம்முடைய சௌகரியத்திற்கேற்ற படி அவர்களை உபயோகித்துக் கொள்ள வேண்டும். எல்லாவற்றிற்கும் பணந்தான் பிரதானம். அதில்லா விட்டால் இந்தமாதிரிக் காரியங்களில் நான் பிரவேசித் திருக்கவே மாட்டேன்!''

''ஆமாம், பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வதாம்!''

''அதனால் ஆகாத காரியங்கூட ஒன்று உண்டோ! பணம் இருந்தால் ஏற்கெனவே தலைவர்களாயிருக்கும் இரண்டு பேரை 'டீ, டின்னர்' என்று சொல்லிச் சுலபமாகச் சிநேகம் செய்து கொண்டுவிடலாம்; அவர்களுடைய வாலைப் பிடித்துக்கொண்டு பின்னாலேயே சுற்றிக் கொண்டிருக்கலாம்; சமயம் நேரும்போதெல்லாம் அவர்களை வானளாவப் புகழ்ந்து கொண்டிருக்கலாம்; அந்தப் புகழுக்கு அடிமையாகி அவர்களும் நம்மை நாளடைவில் புகழ ஆரம்பித்து விடுவார்கள் - எல்லாம் பரஸ்பர உதவிதானே? - இந்த விஷயத்தில் இன்னொரு ரகசியமும் இருக்கிறது. 'அவருக்குப் புகழில் விருப்பம்

கிடையாது; அதை அவர் அறவே வெறுப்பவர்' என்று அவர்கள் நம்மைப் பற்றிச் சொன்னாலும் பாதகமில்லை - அதிலும் புகழ் அந்தரங்கமாகப் பரவித்தானே கிடக்கிறது? - அப்புறம் நாலு பத்திரிகைக்காரர்களின் தயவை நாடவேண்டியது. சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் அவர்கள் நமக்கு 'இந்திரன்' 'சந்திரன்' என்ற புகழ் மாலைகளைச் சூட்டிக் கொண்டே இருக்க வேண்டியது - அப்படி அவர்கள் செய்யாமற் போனாலும் பாதகமில்லை; நாமே நாலு பத்திரிகைகளை ஆரம்பித்து நடத்தலாம்...''

''பொதுமக்கள் அவற்றை ஆதரிக்க வேண்டாமா?''

''ஆதரிக்காமல் என்ன ஐயா! நான்தான் சொல்லி விட்டேனே. அவர்கள் எப்படி வேண்டுமானாலும் வளைந்து கொடுக்கக் கூடியவர்கள் என்று. ஆனால் ஒன்று. உண்மையை மட்டும் அவர்களுக்கு எடுத்துச் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னால் நம்மை அவர்கள் கொஞ்சங்கூட நம்பமாட்டார்கள். அவர்கள் போகிற போக்கிலேயே நாமும் போய்க் கொண்டிருந்தால் நமக்கு ஒரு கஷ்டமும் இல்லை; அதிலிருந்து அவர்களைத் திருப்ப முயன்றால்தான் ஆபத்து, ஏதோ இருக்கிறவரை விரும்பிய விதமே வாழ்ந்து, செத்துப் போனாலும் அமரனாயிருக்க வேண்டுமென்றால் அதற்கு நான் சொல்வதுதான் சிறந்த வழி!''

''உங்களைப் போன்றவர்கள் இருந்தால் தேசம் உருப்பட்ட மாதிரிதான்!''

இவ்வாறு சொன்னதும் அவர் என்னை அனுதாபத்துடன் பார்த்தார்; நான் அவரை ஆத்திரத்துடன் பார்த்தேன்.

அதற்குள் மாலை மணி ஆறு அடித்து விடவே, என்னை வழக்கம்போல் தனி கொட்டடியில் தள்ளிப் பூட்டிவிட்டார்கள். அவ்வளவுதான்; சகோதர தேசபக்தர்களுடன் அன்றைய தினம் நடத்திய காரசாரமான பேச்சு வார்த்தைகளெல்லாம் என் மனத்தை விட்டு அகன்றன.

அதற்குப் பதிலாக அம்மாவும் தங்கையும், அவர்களுடன் சாந்தினியும் சேர்ந்து வந்து என் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டார்கள்.

# 5. பிள்ளை மனம்

எதிர்பார்த்து நிகழும் எந்தச் சம்பவத்தையும் கண்டு மனிதன் திடுக்கிடுவதில்லை; எதிர்பாராமல் நிகழும் சம்பவத்தைக் கண்டுதான் திடுக்கிடுகிறான். இந்த இயற்கை நியதிக்கு விரோதமாக உலகம் தோன்றிய நாளிலிருந்து ஒரு காரியம் நடந்து வருகிறது. பிறக்கும் மனிதன் எவனும் என்றைக்காவது ஒரு நாள் இறந்தே தீருவான் என்பது யாரும் எதிர்பார்க்கக் கூடியதுதானே? அப்படியிருந்தும் அது மனிதனை என்ன பாடு படுத்திவிடுகிறது?

அந்தச் சம்பவத்தை நான் இதுவரை எத்தனையோ ஆயிரமாயிரம் முறை நினைத்துக் கொண்டிருப்பேன். ஆனாலும் நினைக்கும் ஒவ்வொரு முறையும் என் மனம் அமைதியை இழந்து தவிக்க ஆரம்பித்துவிடுகிறது. நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துவிடும் சுபாவம் அந்தச் சம்பவத்துக்குமட்டும் ஏனோ இன்றுவரை இல்லாமலே போய்விட்டது.

பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் எத்தனையோ விஷயங்களில் வித்தியாசம் இருக்கலாம். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் அவர்களுக்குள் வித்தியாசம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை - மக்கட்பேறைப் பற்றியதுதான் அது. வேறு எதிலும் போட்டியிடாத அவர்கள் பிள்ளை வரம் கேட்பதில் மட்டும் போட்டி யிடுகிறார்கள். பாக்கப்போனால் குழந்தையில்லையே என்று பணக்காரன் கவலை கொள்வதில் ஆச்சரியம்

ஒன்றுமில்லை. உலக இன்பங்கள் அனைத்தையும் அனு பவிக்கும் அவன் குழந்தையின் மழலை இன்பத்தையும் அனுபவிக்க ஆசை கொள்கிறான், அத்துடன் தனக்குப் பின்னால் தன் சொத்து சுதந்திரங்களை அனுபவிக்க வாரிசு வேறு அவனுக்கு வேண்டியிருக்கிறது.

அந்த வாரிசு இல்லாவிட்டாலோ கேட்கவே வேண்டாம். பாவம், பகவான் பழிக்கு ஆளாகிறார்! பசியும் ருசியும் அறியாத அவருக்கு எல்லாச் சொத்துக்களும் போய்ச் சேருகின்றன. அந்தப் பரமாத்மாவைப் பாதுகாப்பதற்கென்றே பிறந்திருக்கும் ஒரு சிறு கூட்டம் - நம்மைப்போல் பசியும் ருசியும் அறிந்த கூட்டம் - மேற்படி சொத்துக்களை அனுபவிக்கிறது. அதைப் பகவானும் பார்த்துக்கொண்டு தான் இருக்கிறார், நாமும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். கடவுளுக்குப் பிரதிநிதிகளான ராஜாக்களும், ராஜாக்களுக்குப் பிரதிநிதிகளான ராஜப் பிரதிநிதிகளும், அவர்களுக்கெல்லாம் மேலானவர்கள் என்று தங்களைப் பற்றிச் சொல்லிக்கொள்ளும் மக்களின் பிரதிநிதிகளுங்கூட அதைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்!

மக்கட்பேறு இல்லாதவர்களுக்கு இன்னொரு மகத்தான கஷ்டமும் இருக்கிறது. இம்மையோடு அவர்களுடைய இன்னல்கள் தீர்ந்து விடுவதில்லையாம்; மறுமையிலும் அந்தப் பாழும் இன்னல்கள் அவர்களைத் தொடர்ந்து வருமாம். அங்கே - அதாவது, உங்களுக்கும் எனக்கும் தெரியாத - ஏன், அந்தப் பரம பக்த சிகாமணிகளுக்கே தெரியாத, தேவலோகத்திலே 'புத்' என்று ஒரு நரகம் பிரத்தியேகமாக இருக்கிறதாம். புத்திர பாக்கியம் கிடைக்கப் பெறாதவர்களையெல்லாம் அந்த நரகத்துக்கு அனுப்பி வைத்துவிடுவார்களாம் - என்ன கொடூரமான தண்டனை! கேவலம், குற்றங்கள் நிறைந்த நாமாவது இங்கே கோர்ட்கீர்ட் என்று வைத்துக் கொண்டு, விசாரணை

கிசாரணை என்று நடத்துகிறோமே! அங்கே அது கூடக் கிடையாதா? அப்படியிருந்தால் விசாரணை என்று ஒன்று நடக்காதா? அதன் பயனாக, 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் அழியாமொழிக்குப் பாத்திரமான ஆண்டவன் தான் அந்த அப்பாவிகள் புத்திர பாக்கியம் பெறாததற்குக் காரணம்; அவன்தான் குற்றவாளி, என்று ஏற்படாதா? தண்டனையும் அவனுக்கே கிடைக்காதா?

ஒருவேளை இங்கே நாஜிஸம், பாஸிஸம், இம்பீரிய லிஸம் என்றெல்லாம் இருக்கிறதே. அப்படி அங்கேயும் ஏதாவது இருக்குமோ, என்னமோ!

எது இருந்தாலும் எது இல்லாமற் போனாலும் மேற்கூறியவற்றுக்கெல்லாம் பணக்காரர்கள் பயப்பட வேண்டியதுதான். இகலோகத்தில் சகல செளகரியங் களோடு வாழும் அவர்கள், பரலோகத்திலும் அவ்வாறு வாழ முயற்சி செய்ய வேண்டியதுதான்! - ஆனால் இந்த ஏழைகளுக்கு என்ன வந்தது? இவர்கள் வாழும் பூலோக நரகத்தைவிடவா 'புத்' என்னும் நரகம் மோசமாயிருக்கும்?

அட கடவுளே! அத்தகைய புத்திர பாக்கியம் பெற் றிருக்கும் ஏழைகள் வீட்டில் தான் எத்தகைய காட்சிகள்!

வயிற்றுக்கின்றி ஒட்டி உலர்ந்து போயிருக்கும் தன் தாயின் ஸ்தானத்தைப் பசியால் வாடும் குழந்தை பற்றி இழுக்கும்; தாயாருக்கோ வலி தாங்கமுடியாமற் போகும். குழந்தையோ பசிக்கு ஒரு துளிப் பாலைக்கூடக் காணாமல் முக்கி முனகும் - தாயார் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்துப் பொறுத்துப் பார்ப்பாள்; அவளுக்கு ஆத்திரம் மேலிட்டு விடும் - 'சீ! இதென்ன பேயோ, பிசாசோ தெரியவில்லையே? என்னமாய்ப் பிடுங்கித் தொலைக் கிறது!' என்று குழந்தையைத் தூக்கிக் கீழே தொப்பென்று போடுவாள். அது 'அம்மம்மா,ங்கங்கா' என்று தாயாரைத் தாஜா செய்யப் பார்க்கும். 'அம்மாவுமாச்சு, ஆட்டுக்

குட்டியுமாச்சு' என்று அவள் வாசலைப் பார்த்து நடையைக் கட்டிவிடுவாள்!

அப்பா வருவார்; அழுது கொண்டிருக்கும் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வெளியே போவார்; ஏதாவது தின்பண்டம் வாங்கிக் கொடுத்துச் சமாதானம் செய்வதற்காக மடியைத் தடவிப் பார்ப்பார் - செல்லாத காசுக்கூட இராது; தான் ஏமாற்றமடைவதோடு, குழந்தையையும் ஏமாற்றமடையச் செய்வார் - அது 'குவா' குவா, என்று கத்தும், பசியால்; அந்தச் சமயம் அதற்கு வேண்டியது பால் என்று அறிந்தோ அறியாமலோ, ''நாயைப் பார்த்தியா, பூனையைப் பார்த்தியா!'' என்று வேடிக்கை காட்டிக்கொண்டே வீடு திரும்புவார்; அதன் கத்தல் உச்ச நிலையை அடையும் - கடைசியில் என்ன? அப்பாவும் பொறுமையிழந்து விடுவார். வீட்டுக்கு வந்ததும் வராததுமாக அதைக் கீழே உட்கார வைத்து, ''கத்தாதே, கத்தாதே!'' என்று கன்னத்தில் அறைவார்; அதுவோ பின்னும் 'வீல், வீல்' என்று கத்தித் தொலைக்கும்.

இரவு எப்படியாவது ஓரணாவுக்கு அபின் வாங்கி அந்தக் குழந்தைக்குக் கொடுத்துத் தூங்க வைத்த பிறகுதான், தம்பதிகள் இருவரும் சற்று நேரம் இந்த அழகான உலகத்தை மறந்திருக்கச் சிறிது நேரமாவது தூங்குவார்கள்.

இந்த நிலையிலும் அந்தப் பரிதாபத்துக்குரியவர்கள், 'குழந்தை இல்லை' என்று சந்தோஷப்படுகிறார்களா? - இல்லை; வருத்தப்படுகிறார்கள். பணக்காரர்களைப்போல் தீர்த்த யாத்திரை செய்யாவிட்டாலும், வீட்டருகே இருக்கும் வேப்பமரத்தையாவது சுற்றிச் சுற்றி வருகிறார்கள்!

தாயுள்ளமும் பிள்ளைப் பாசமும் உலகத்தில் அவ்வாறு ஒன்றோடொன்று பிணைந்து கிடக்கின்றன.

நானும் என் தாயாரும் மட்டும் அதற்கு மாறுபட்டிருக்க முடியுமா? பிரிவின் துன்பத்தைப் 'பிள்ளை மனம்'

ஒருவாறு சகித்துக்கொள்ளும்; 'பெற்ற மனம்' சகித்துக் கொள்ளுமா?

இந்த எண்ணத்துக்கேற்றாற்போல் என் தங்கை சித்ரா எனக்கு எழுதிய ஓரிரண்டு கடிதங்களிலும் நான் எத்தகைய ஆறுதலையும் காணவில்லை. அந்தக் கடிதங்களெல்லாம் ஒரே அழுகைதான்! - அம்மா படுத்த படுக்கையாகி விட்டார்களென்றும், தம்முணர்வை இழந்து தவியாய்த் தவிக்கிறார்களென்றும், அவர்களுடைய வாய் மட்டும் அடிக்கடி 'செல்வம், செல்வம்' என்று முனகிக் கொண்டிருக்கிறதென்றும், அந்த நிலையிலே அவர்களை விட்டுவிட்டுத் தன்னால் அப்படி இப்படி ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியவில்லையென்றும், அதனால்தான் ஆறு மாதங்களாகியும் என்னை ஒரு முறைகூட வந்து பார்க்க முடியவில்லையென்றும் அவள் எழுதியிருந்தாள். இன்னும் அம்மாவை வந்து பார்க்கும் டாக்டர்கள் நம்பிக்கையிழந்த முகத்துடன் காண்கிறார்கள் என்றும் அவள் தெரிவித்திருந்தாள்.

அவளால்தான் நம்மை வந்து பார்க்க முடியவில் லையே, நாமாவது பரோலில் சென்று அவளையும் அம்மாவையும் பார்த்து வருவோமே என்று எண்ணி, அதற்கு வேண்டிய முயற்சி செய்து பார்த்தேன்; அதிகாரிகள் அசையவில்லை!



அன்றிரவு சிறைக்கென்றே உண்டான ஒரு பிரத்தியேக வாசனை என் மூக்கைத் துளைத்துக்கொண் டிருந்தது. அதை நான் அனுபவித்த வண்ணம் படுத்துக் கொண்டிருந்தேன். என்னதான் புரண்டு புரண்டு படுத் தாலும் எனக்கு வெகுநேரம் வரை தூக்கமே வரவில்லை. அதற்கு எத்தனையோ காரணங்கள் - மனமோ ஒரு நிலையில் இல்லாமலிருந்தது: தலையோ தலையணை

யில்லாமல் அதலபாதாளத்தில் விழுந்து கிடப்பது போலி ருந்தது. அதிகாரிகளான அரக்கர்கள் அந்தத் தலைக்கு ஒரு செங்கல்லைக்கூடக் கொண்டுவந்து வைத்துக்கொள்ள என்னை அனுமதிக்கவில்லை - ஏன் தெரியுமா? கல்லைக் கொண்டு கைதி தற்கொலை செய்துகொண்டு விடுவானாம் - என்னக் கவலை, என்னக் கவலை! - அந்தக் கவலையில் அவர்களுக்குத் தூக்கம் பிடித்ததோ என்னவோ, எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை!

பொழுது புலரும் சமயம்; சிறிது கண்ணயர்ந்தேன். என்னுடைய கவலையை அதிகமாக்கக்கூடிய ஒரு கனவு:

அம்மா அசைவற்றுக் கட்டிலில் படுத்துக்கொண்டிருக் கிறார்கள். மூச்சு மட்டும் லேசாக உள்ளே செல்வதும், வெளியே வருவதுமாக இருக்கிறது. நானும், சித்ராவும் கண்ணீர் வழியும் கண்களுடன் கட்டிலின் அருகே நின்று கொண்டிருக்கிறோம். அம்மாவின் கண்கள் அடிக்கடி இப்படியும் அப்படியுமாகச் சுழன்று கொண்டிருக்கின்றன. அந்த நிலையில் அடிக்கொரு தரம் அவர்கள் வாசலை நோக்கி யாரையோ ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறார்கள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு யாரோ வரும் காலடி ஓசை கேட்கிறது. அம்மா கண் விழித்துப் பார்க்கிறார்கள். வருபவர் டாக்டர் என்று அறிந்ததும், அவர்கள் முகத்தில் ஏமாற்றத்தின் சாயை படர்கிறது. அவர் வந்து அம்மாவைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டுப் பேசாமல் போகிறார். சித்ரா ஓடோடியும் சென்று அவரை ஏதோ விசாரிக்கிறாள். அப்பொழுதும் அவர் பேசாமல் கையை விரித்துவிட்டுச் செல்கிறார்.

டாக்டரைப் போல் சித்ராவால் எந்த விதமான உணர்ச்சியையும் வெளியே காட்டிக்கொள்ளாமல் இருக்க முடியவில்லை. அவள் 'கோ'வென்று கதறிக்கொண்டே அம்மாவின் அருகே வருகிறாள். அம்மா அவளைத் தன்

அருகே உட்காரும்படி சமிக்ஞை காட்டுகிறார்கள். சித்ரா உட்கார்ந்ததும் தலையைக் கோதி விட்டுவிட்டு அவளுடைய வாயைப் பொத்துகிறார்கள்.

இந்தச் சமயத்தில் 'டாக்ஸி' ஒன்று வந்து எங்கள் வீட்டு வாசலில் நிற்கிறது. அதிலிருந்து ஒரு பெரிய மனிதர் இறங்கி வருகிறார். அவரைத் தொடர்ந்து ஜவ்வாது வாசனை வந்து 'கட்டியம்' கூறுகிறது - அறையில் பஞ்சகச்சம், மேலே சட்டை, அதற்கு மேலே கோட்டு, அதற்கும் மேலே ஜரிகைக்கரை மேலாடை - அது தரையைத் தொட்டுக் கொண்டிருக்கிறது!

தலையில் தலைப்பாகை, காதுகளில் வைரக் கடுக்கன் கள், மார்பில் கோட்டுப் பித்தானுக்கும் பைக்குமாகத் தொங்கிக் கொண்டிருக்கும் தங்கக் கடிகாரச் சங்கிலி, நெற்றியில் சந்தனப் பொட்டு - ஆகியவற்றுடன் இரு புறமும் அழகாக மீசையை முறுக்கி விட்டுக் கொண்டிருக் கும் அவர், கையில் அவசியமில்லாத தடியுடன் ஒரு தினுசாக உள்ளே வந்துகொண்டிருக்கிறார்.

அவர் வேறு யாருமல்ல; என் அம்மான் - அதாவது, என் தாயின் ஒரே சகோதரன். அந்தக் காலத்தில் தஞ்சை குற்றாலலிங்கம் என்றால் யாருக்கும் சாதாரணமாகத் தெரியும். அவர் பரம்பரைப் பணக்காரர் மட்டும் அல்ல; பிரபல மிராசுதாருங்கூட.

அவரைத்தான் என்னுடைய தாயார் அத்தனை நேரமும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந் தார்கள் போலிருக்கிறது. ஆனால் அந்த நிலையில் அவர்களைப் பார்த்து அவருடைய முகம் மட்டும் வாடவில்லை!

தம்மைக் கொஞ்சம் தூக்கி உட்கார வைக்கும்படி அம்மா எங்களுக்குச் சமிக்ஞை செய்கிறார்கள்; நாங்களும் அவ்வாறே செய்கிறோம்.

"என்ன அக்கா, என்ன உடம்புக்கு?" என்று சம்பிரதாயத்தை யொட்டி விசாரிக்கிறார் அவர்.

அம்மாவால் பதில் சொல்ல முடியவில்லை. அவர்களுக்குப் பதிலாக, "எல்லாம் இந்தப் புண்ணியவானால் வந்தது!" என்று என்னைச் சுட்டிக் காட்டி ஆரம்பிக்கிறாள் சித்ரா. நான் தலையைக் கீழே தொங்கவிட்டுக் கொள்கிறேன்.

"ஏன், இவன் என்ன செய்தான்?" என்று கேட்கிறார் அவர்.

"பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் கவிழ்ப்பதற்காக இவர் சிறைக்குப் போனார்; அன்றைய தினத்திலிருந்து அம்மா இப்படிப் படுத்துவிட்டார்கள்."

"என்ன, இருக்கிற காங்கிரஸ்காரப் பயல்கள் இருந்து ஊரைக் கெடுப்பது போதாதென்று இவனும் காங்கிரஸ்காரனாகி விட்டானா? - அப்பப்பா, இப்பொழுதெல்லாம் எங்கே பார்த்தாலும் இந்தத் தொல்லைதான்! அதற்கு முன்னெல்லாம் கிராமங்களில் வார்க்கிற கூழை வார்த்துக் கொடுக்கிற காசைக் கொடுத்தா எத்தனையோ நாய்கள், கழுதைகளாய் வந்து உழைக்கும். இப்பொழுதென்னடாவென்றால் நிலமே எனக்குத்தாண்டா சொந்தம், உனக்குச் சொந்தமில்லை, என்று பேச ஆரம்பித்து விட்டார்கள். எல்லாம் இந்தப் பயல்களாலே வந்ததுதான்! சரி சரி, அப்போதே நான் சொன்னேன்: பட்டணத்திலேயிருந்தால் இந்தத் தட்டிக் கேட்க ஆளில்லாத பிள்ளை சரிப்பட்டு வராது, நீ பேசாமல் என்னுடன் வந்துவிடு என்று - கேட்டால்தானே? - படட்டும், படட்டும்!" என்கிறார் அவர்,

அம்மா மௌனமாக அவருடைய கரத்தைப் பற்றுகிறார்கள்; அதில் என்னுடைய கையையும் சித்ராவின்

கையையும் சேர்த்து வைத்து மூடுகிறார்கள் - அத்துடன் தம் கண்களையும் மூடிக்கொண்டு விடுகிறார்கள்.

அவ்வளவு தான்; "அம்மா, அம்மா!" என்று அலறிக் கொண்டே எழுந்து நான் வெளியே வந்தேன்.

"என்ன, அண்ணா?" என்று கேட்டுக் கொண்டே எனக்கு எதிரே வந்து நின்றாள் சித்ரா.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அதுகூட ஒரு வேளை கனவோ என்று எண்ணிக் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு பார்த்தேன் - சந்தேகமேயில்லை; எனக்கு எதிரே வந்து நின்றவள் சித்ராவேதான்!

என்னுடைய சிறைக் கோலத்தைக் கண்டு அவளுடைய கண்கள் கலங்கின. "இது என்ன கோலம்! இப்படியும் உங்கள் புத்தி போகுமா? எவ்வளவோ அழகாக வாழ்க்கை நடத்தவேண்டிய நீங்கள் இப்படிக் குட்டிச் சுவராய்ப் போய்விட்டீர்களே?" என்றாள் அவள்.

"அதுகிடக்கட்டும்; அம்மா எப்படியிருக்கிறார்கள்?"

வேறு எப்படியிருப்பார்கள்? - நாளை எண்ணிக் கொண்டுதான் இருக்கிறார்கள்! - நீங்கள் பரோலிலாவது வந்து அவர்களை ஒரு முறை பார்த்துவிட்டு வரக் கூடாதா?"

"உனக்கு முன்னால் நானே கேட்டுப் பார்த்தேன்; விடமாட்டேன் என்கிறார்கள்!"

"அதற்காக நீங்கள் அம்மாவைப் பார்க்காமலே இருந்துவிடப் போகிறீர்களா? - சொல்வதைக் கேளுங்கள், அண்ணா! - அவர்களை நீங்கள் இன்னொரு முறை பார்க்கப் போவதில்லை; அம்மாவுக்கும் அது தெரிந்து விட்டது. அதனால்தான் தஞ்சைக்குத் தந்தி கொடுத்துத் தம்பியை உடனே வரவழைக்கச் சொன்னார்கள். அவரும் வந்தார். இல்லையென்றால் அவர்களைத் தனியே

விட்டுவிட்டு இன்று கூட என்னால் இங்கே வந்திருக்க முடியாது - இப்பொழுது நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? - பேசாமல் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வெளியே வருகிறீர்களா, இல்லையா?

எனக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரிய வில்லை; தரையைப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

“பெற்ற தாய்க்கும் மேலாக உலகத்தில் வேறு என்ன இருக்கிறது அண்ணா? - ஒரு வரி, ஒரே ஒருவரி - ‘என்னை மன்னித்துவிடுங்கள்’ என்று எழுதிக் கொடுத்து விடுங்கள்.”

அதற்குமேல் ஒரு கணங்கூட நான் அங்கே நிற்க வில்லை - நின்றால் என் மனம் பேதலித்து விடும்போல் இருந்தது. சட்டென்று உள்ளே வந்து கதவை அடைத்துக் கொண்டு விட்டேன். அதற்குப்பிறகு ‘அவள் என்ன ஆனாள்?’ என்றுகூட நான் கவனிக்கவில்லை; கவனிக்கவேயில்லை!

இந்தச் சம்பவத்துக்குப் பிறகுதான் எனக்கு அந்தச் செய்தி கிட்டியது - ‘தாயார் மறைந்தார்கள்’ என்னும் செய்திதான் அது.

## 6. நாளைக்கு விடுதலை

தங்களைத் தாங்களே ‘இல்லை’ என்று சொல்லிக் கொள்ளும் வேதாந்திகள், தங்கள் உடலை மட்டும் சிறைச் சாலையாகக் கருதுவதில்லை, உலகத்தையே சிறைச் சாலையாகக் கருதுகிறார்கள். அவர்களைப்போலவே தேசபக்தர்களிலும் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் சிறைச்சாலையை மட்டும் சிறைச்சாலையாகக் கருதுவ

தில்லையாம்; தேசத்தையே சிறைச்சாலையாகக் கருது வார்களாம். அன்னிய ஆதிக்கத்திலிருந்து என்று தேசம் விடுதலை யடைகிறதோ, அன்றுதான் அவர்களுக்கும் உண்மையான விடுதலையாம்!

அத்தகைய தேசபக்தர்கள் வேண்டுமானால், 'நாளைக்கு விடுதலை!' என்று தெரிந்தாலும் எத்தகைய உணர்ச்சிக்கும் ஆளாகாமல் இருந்திருக்கலாம்; அல்லது ஆளாகாமல் இருந்ததாகச் சொல்லிக்கொள்ளலாம். அடியேன் அவ்வாறு சொல்லிக்கொள்வதற்கில்லை. ஏனெனில், 'நாளைக்கு விடுதலை!' என்று அறிந்ததும் அதற்கு முதல் நாளிலிருந்தே நான் முற்றிலும் மாறிவிட்டேன். அத்தனை நாளும் என்னைப் பீடித்திருந்த சோர்வு அன்று முதல் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. அதற்குப் பதிலாக என்றுமில்லாத சுறுசுறுப்பு என்னை வந்து பற்றிக் கொண்டது. உண்மை யில் அன்று நான் ஆகாய வீதியில் வட்டமிட்டுப் பறக்கவில்லையென்றாலும், தரையில் நடப்பது போன்ற உணர்ச்சியே எனக்கு இருக்கவில்லை.

மூன்று வருடகாலம் சிறைவாசம் செய்தது தாய் நாட்டின் விடுதலைக்காக. ஆனால் தாய்நாட்டுக்கா இப்போது விடுதலை கிடைத்தது? - இல்லை; தாயாருக்குத் தான் விடுதலை கிடைத்துவிட்டது!

தாயைப் பிரிந்த சித்ரா என்ன ஆகியிருப்பாள்? கனவில் கண்டபடி மாமா அவளைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போயிருப்பாரா? அதற்குச் சித்ரா சம்மதித்திருப் பாளா?

நாளை விடுதலையடைந்ததும் எங்கே செல்வது? - தஞ்சைக்கா, சென்னைக்கா?

எது எப்படியிருந்தாலும் முதலில் நாம் சென்னைக்குத் தான் செல்ல வேண்டும். அங்கே சித்ராவைப் பார்க்க

முடியாவிட்டாலும், சாந்தினியையாவது பார்க்கலா மல்லவா?

ஒருவேளை அவளும் கல்யாணம் கில்யாணம் செய்து கொண்டு, புக்ககம் கிக்ககம் போய் விட்டிருப்பாளோ, என்னமோ!

சீசீ, அப்படியெல்லாம் ஒன்றும் நடந்திராது. அவ்வாறு நடந்து கொள்பவளாயிருந்தால், 'என்னை மறவாதீர்!' என்று அன்று ஏன் அவ்வளவு உருக்கமுடன் கேட்டுக் கொண்டிருக்கப் போகிறாள்? நம்முடைய தாய்க்குத் தெரியாமல், தங்கைக்குத் தெரியாமல் - ஏன், தன்னுடைய தந்தைக்குக் கூடத் தெரியாமல் அடிக்கொரு தரம் ஆஸ்பத்திரிக்கு வந்து நம்மை ஏன் அவ்வளவு அக்கறை யுடன் கவனித்திருக்கப் போகிறாள்?

இம்மாதிரியான எண்ணப் போராட்டங்களிடையே அன்றிரவு முழுவதும் கழிந்தது. மறுநாள் பொழுது விடிந்ததும் 'வார்டர்' வந்தான்; பிரிவுபசாரத்துடன் சிறைக் கதவுகளைத் திறந்தான்; விழுந்தடித்துக்கொண்டு வெளியே வந்தேன் - அடாடா! சிறை உலகத்துக்கும் வெளி உலகத்துக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்? மண்ணிலும் விண்ணிலும், நீரிலும் காற்றிலுங்கூட அல்லவா நான் வித்தியாசத்தைக் கண்டேன்?

சென்னை வந்து சேர்ந்ததும் நேரே வீட்டைத் தேடி ஓடி வந்தேன் - வீடு பூட்டிக் கிடக்கவில்லை; திறந்துதான் இருந்தது.

ஆனால் வீட்டுக்குள் எனக்குத் தெரிந்த முகங்கள் எதுவும் இருக்கவில்லை; எல்லாம் புத்தம் புது முகங்களா யிருந்தன.

ஒருகணம் அந்த வீட்டு வாயிலை உற்றுப் பார்த் தேனோ இல்லையோ, யாரோ ஓர் அம்மாள் உள்ளே யிருந்து ஓடோடியும் வந்து, 'இந்த வீட்டுக் கதவைச் சாத்தி

வையுங்கோ, சாத்தி வையுங்கோன்னு ஆயிரந் தரம் முட்டிண்டாச்சு; யாராவது கேட்டாத்தானே? இப்போ வழியோட போற தடியன்களெல்லாம் இங்கே வந்து சித்த நின்னு, என்னத்தையோ முறைச்சு முறைச்சுப் பார்த்துத் தொலையறான்கள்!' என்று இரைந்துகொண்டே கதவைத் 'தடா'லென்று சாத்திவிட்டுச் சென்றாள்.

அவ்வளவுதான்; இனி இங்கு நிற்பதில் பிரயோசன மில்லை என்று நான் அந்த இடத்தை விட்டு நகர்ந்தேன்.

ஆனால், 'வேறு எங்கே செல்வது?' என்றுதான் எனக்குப் புரியவில்லை!

அந்த நகரிலேயே பிறந்து வளர்ந்தவனென்றாலும் எனக்கு அங்கே யாருடனும் அவ்வளவாகப் பழக்கம் கிடையாது. மேலும் சிறு வயதில் மிகவும் செல்வமாக வளர்க்கப்பட்டவனாதலால், எனக்கு யாருடனும் பழக வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை. இதனால் நான்கு பேருடன் சேர்ந்து நன்மையோ, தீமையோ அடையும் பாக்கியமோ, அல்லது துர்ப்பாக்கியமோ எனக்கு அன்றுவரை கிட்டாமலே போய்விட்டது. இந்த அழகில் வளர்ந்ததற்கு நானே முழுவதும் பொறுப்பாளி என்றும் சொல்லிவிடுவதற்கில்லை; எனக்கு உலகம் இன்னதென்று தெரியும்வரை என்னை ஒரு பொம்மையாகவே பாவித்து வந்த என் பெற்றோரும் ஓரளவு பொறுப்பாளிகள்தாம்!

பாலுவோடுகூட நான் பள்ளிக்கூடத்தில் பழகியதோடு சரி - அவன் எங்கே இருக்கிறான், யாருடன் இருக்கிறான் என்பன போன்ற விவரங்கள் ஒன்றும் இன்று வரை தெரியாது - அப்படியே தெரிந்தாலும் இப்போது என்ன பயன்? - அவன் வெளியே இருக்கிறானோ, உள்ளே இருக்கிறானோ?

பாரிஸ்டர் பரந்தாமன் வீட்டுக்குப் போகலாம்; அப்படியே சாந்தினியையும் பார்க்கலாம். ஆனால்,

நம்முடைய பரிதாப நிலையைக் கண்டு அவர் மேலும் ஏதாவது பரிகாசம் செய்ய ஆரம்பித்துவிட்டால்?

என்ன இருந்தாலும் பெரிய மனிதர்; சந்தர்ப்பம் தெரியாமலா நடந்துகொள்வார்? - என்னவோ, யார் கண்டார்கள்? - ஆனானப்பட்ட மகாத்மா காந்தியையே வெளுத்துக் கட்டும் அவருக்கு நாம் எம்மாத்திரம்?

இப்படியெல்லாம் மனம் போனபடி எண்ணமிட்டுக் கொண்டிருந்த நான், "சாமி! எப்போ வந்தீங்க சாமி?" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன்; என் அருகே விசாலம் நின்றுகொண்டிருந்தாள்.

விதவையான அவள் எங்கள் வீட்டில் வேலைக்காரியா யிருந்தவள். ஆனால் அந்தச் சமயத்தில் அவள் எனக்கு வேலைக்காரியாகத் தோற்றமளிக்கவில்லை; என்னை வாழ்விக்க வந்த தேவ கன்னிகையாகத் தோற்றமளித்தாள்!

அளவற்ற ஆவலுடன் நான் அவளை வெறித்துப் பார்த்தேன்.

"என்ன சாமி, முளிக்கிறீங்க? என்னைத் தெரியலைங் களா?" என்று கேட்டாள் அவள்.

"தெரியாமலென்ன, விசாலம்தானே?"

"ஆமாம், சாமி! - ஐயோ, இப்படிக்கூட யாராச்சும் செய்வாங்களா? பெரிய எசமானியம்மா சாகிறவரையிலே உங்க பேரைச் சொல்லிச் சொல்லி அழுதுகிட்டிருந் தாங்களே!" என்று சொல்லிக்கொண்டே, அவள் முந்தானையால் தன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டாள்.

நான் அவளுடைய பேச்சை மாற்ற எண்ணி, "இப்போது நீ எங்கே வேலை செய்கிறாய்?" என்று கேட்டேன்.

''நீங்க போயி என்னமோ படிச்சுக்கிட்டு இருந்தீங் களே, அந்த வக்கீல் ஐயா வீட்டிலே தான் வேலை செய்றேனுங்க!'' என்றாள் அவள்.

வேறு யாராவது என் கோலத்தைப் பார்ப்பதற்கு முன்னால் சீக்கிரமாகப் பேச்சை முடித்துக் கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடன் ''சரி, சௌக்கியமாயிருக் கிறாயோ, இல்லையோ?'' என்றேன் நான்.

''உங்க புண்ணியத்திலே சௌக்கியமாத்தான் இருக்கே னுங்க! - ஆனா, அந்த வக்கீல் ஐயா இருக்காரே...'' என்று மேலே ஏதோ சொல்வதற்கு வெட்கப்படுபவள் போல அவள் தன் உடம்பை இப்படியும் அப்படியுமாக நெளித்துக் கொண்டாள்.

எனக்குத் 'திக்'கென்றது. ஒரு வேளை...

''சீசீ, அப்படியொன்றும் இருக்காது' என்று என்னை நானே சமாதானம் செய்து கொண்டு, ''ம், அப்புறம்?'' என்று அவளுடைய பேச்சை மீண்டும் ஆரம்பித்துக் கொடுத்தேன்.

''என்னைக் கல்யாணம் பண்ணிக்கோ, என்னைக் கல்யாணம் பண்ணிக்கோ!ன்னு சொல்றாரு, சாமி'' என்றாள் அவள்.

''இதென்ன வேடிக்கை! அவர் உன்னையா கல்யாணம் செய்து கொள்கிறேன் என்கிறார்?''

''நீங்க ஒண்ணு! வேறே யாரையாச்சும் பார்த்துக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்றாரு, சாமின்னா!''

''ஏனாம்?''

''இன்னும் கொஞ்ச நாளிலே தாலியறுத்தவங்களெல் லாம் கல்யாணம் பண்ணிக்கப் போறாங்களாம்; அவங் களைப்போல நானும் கல்யாணம் பண்ணிக்கணுமாம் - அது எப்படி சாமி, நியாயமாகும்? ஒருத்தனுக்குப் போட்ட

முந்தானையை இன்னொருத்தனுக்கு எப்படி சாமி, போட முடியும்?''

எனக்குச் சிரிப்பு வந்தது, தன்னால் அந்த 'விதவா விவாக தர்ம'த்தை அனுஷ்டிக்க முடியாவிட்டாலும், பிறரையாவது அனுஷ்டிக்கும்படி 'வக்கீல் ஐயா' வற்புறுத்துகிறாரே என்று நினைத்துக்கொண்டேன்.

நான் சிரித்ததைக் கண்டு, ''என்ன சாமி! நீங்க கூடச் சிரிக்கிறீங்களே?'' என்றாள் அவள்.

''ஒன்றுமில்லை; உன் புருஷன் மீது நீ வைத்திருக்கும் பக்தியை நினைத்துக் கொண்டேன்!'' என்றேன் நான்.

''இல்லாம எங்கே போகும், சாமி? செத்தாலும் அந்த மனுஷன் என் கண்ணை விட்டுத்தான் மறைஞ்சானே தவிர, மனசைவிட்டு இன்னும் மறையலையே? - அப்படி யிருக்கிறப்போ, என் மனசிலே இன்னொருத்தனுக்கு நான் எப்படி இடங்கொடுக்க முடியும்?''

அவள் பேச்சில் நியாயம் இருந்தது. இருந்தாலும் அந்தச் சமயத்தில் அது எனக்குத் தலைவலியாயிருந்தது. ''இவள் அந்த வக்கீல் ஐயாவின் தலையை உருட்டுவதற் குப் பதிலாக நம் தலையை உருட்டித் தொலைக்கிறாளே'' என்று உள்ளூற எண்ணிக்கொண்டு, ''அதனாலென்ன 'அப்படியே பண்ணிக்கொள்கிறேன்' என்று சொல்லி விட்டுப் பேசாமல் இருந்து விட்டால் போச்சு!'' என்றேன் நான்.

''எல்லாம் சொல்லிப் பார்த்தேன் - அவர் கேட்டாத் தானே? - ஒரு நாளைப்போல எவனையாச்சும் கூட்டிக் கிட்டு வந்து, 'இவனைக் கட்டிக்கிறியா, இவனைக் கட்டிக்கிறியா?'ன்னு உசிரை வாங்குறாரு, சாமின்னா!'' என்றாள் அவள் விடாமல்.

''கவலைப்படாதே; உனக்குத் தெரியாமல் உன் கழுத்தில் எவனாலும் தாலி கட்டிவிட முடியாது!'' என்றேன் நான்.

‘‘என்னமோ போங்க, சாமி! - அதாலே அவங்க வீட்டு வேலையை விட்டுட்டாக்கூடத் தேவலைன்னு எனக்குத் தோணுது!’’ என்றாள் அவள்.

‘‘ஏன் விடவேண்டும்? - அவர் பிடிக்காவிட்டாலும் அவருடைய மகளை உனக்கு ரொம்பப் பிடித்திருக்குமே!’’ என்றேன் நான்.

அவ்வளவுதான் - அவள் ஆரம்பித்துவிட்டாள்:

‘‘அந்த அம்மா தங்கம்னா தங்கமாச்சுதுங்களே! நீங்க அம்மாவையும் தங்கச்சியையும் தவியாய்த் தவிக்க விட்டுப்பிட்டு ஜெயிலுக்குப் போனீங்கன்னு கேட்டதும், அது நம்ம வீட்டுக்கு விழுந்தடிச்சுக்கிட்டு ஓடியாந்துச்சி. பெரிய எசமானிக்கும் சின்ன எசமானிக்கும் தன்னாலே ஆனமட்டும் தைரியம் சொல்லித் தேத்துச்சி. பெரியம்மா உசிரை விடுற சமயத்திலேகூட அது கிட்டவே இருந்திச்சி. அப்புறங்கூட அது தினந்தினம் சின்னம்மாகிட்ட வந்து என்னென்னமோ பேசிக்கிட்டு இருக்கும் - அதை எல்லாம் நான் காது கொடுத்துக் கேட்டுக்கிறதில்லே - உங்க மாமா இங்கே வந்து இருந்திச்சே, அது உங்களுக்குத் தெரியு மில்லே? - அவருதான் நம்ம வீட்டை யாரோ ஒரு அய்யருக்கு விட்டுப்பிட்டுச் சின்னம்மாவைத் தன்னோடே கூட்டிக்கிட்டுப் போயிட்டாரு!’’

‘‘சரி, சின்னம்மா சௌக்கியத்தைப் பற்றி நீ வக்கீல் ஐயா மகளை விசாரிப்பதுண்டா?’’

‘‘விசாரிக்காமக்கூட இருப்பேனுங்களா? அந்த அம்மா வைப் பார்க்கிறப்போல்லாம், ‘இன்னிக்குச் சின்னம்மா கிட்டேயிருந்து ஏதாச்சும் காயிதம் வந்ததுங்களா?’’ன்னு கேட்பேன். அந்த அம்மாவும் சந்தோசத்தோடு, ‘வந்தது, சௌக்கியம் தானாம்!’னு சொல்லுவாங்க. ஆனா, இப்போ என்னமோ தெரியலை - ரெண்டு வாரமா நான் அப்படிக் கேட்கிறப்போல்லாம் அந்த அம்மா மூஞ்சியிலே

சந்தோசத்தைக் காணோம். வருத்தத்தோட, 'வந்தது'ன்னு மட்டும் சொல்லிக்கிட்டே அப்பாலே போயிடறாங்க!''

அவள் கடைசியாகச் சொன்ன வார்த்தை என்னை என்னவோ செய்தது. ஒருவேளை சித்ராவை அங்கே யாராவது கஷ்டப்படுத்துகிறார்களோ, என்னவோ என்று எண்ணி என் மனம் கலங்கியது. ஆனாலும் உடனே அவளைப் போய்ப் பார்க்கக் கூடிய நிலையில் நான் அப்போது இல்லை. இந்த நிலையில், 'மேலே அவளை என்ன கேட்பது, என்ன செய்வது?' என்று தெரியாமல் நான் விழித்துக் கொண்டிருந்தபோது, சாலையோரங்களி லிருந்த மின்சார விளக்குகளெல்லாம் 'திக்'கென்று எரிய ஆரம்பித்துவிட்டன. அதைக் கண்ட விசாலம், ''இம்மா நேரமாயிடுச்சுங்களே, இனிமே நீங்க சின்னம்மாவைப் பார்க்கப் போக முடியுங்களா?'' என்று கேட்டாள்.

''நாளைக்குத்தான் போகவேண்டும்!''

''அப்போ ராத்திரிக்கு எங்கே தங்குவீங்க? - எங்க வீட்டுக்கு வேணும்னா வர்றீங்களா?''

'பண்'பைக் கொல்லும் 'பண'மற்ற அவள் என்னைக் குறிப்பறிந்து அழைத்தது, இழந்த நம்பிக்கையை எனக்கு மீண்டும் ஊட்டுவதாயிருந்தது - ''அது என்ன இழந்த நம்பிக்கை'' என்கிறீர்களா! - ''பண்பில் மிக்க தமிழ்நாடு இன்னும் பணத்தால் செத்துப் போகவில்லை!'' என்னும் நம்பிக்கைதான் அது!

இருந்தாலும் அவள் 'வறுமை'யில் பங்கு கொள்ள வேண்டிய நான், 'வாழ்'வில் பங்கு கொள்ள விரும்ப வில்லை. ''என்னால் உனக்கு ஏன் சிரமம்? - 'வக்கீல் ஐயா'வைப் பார்த்துவிட்டு வேண்டுமானால் வருகிறேன்!'' என்று சொல்லிவிட்டு நடையைக் கட்டினேன்.

# 7. 'காந்தி பவனம்'

உலகம் எதையும் எப்பொழுதும் விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருப்பதில்லை; அவ்வப்பொழுது அது மாறுதலை விரும்புகிறது. அந்த மாறுதலைச் சமயமறிந்து பயன்படுத்திக் கொண்டு வாழ்க்கையில் முன்னேற விரும்பும் தன்னலக்காரன் எவனுக்கும் வெகு சீக்கிரத்தில் அது தலை வணங்கி விடுகிறது!

ஆனால் பாரிஸ்டர் பரந்தாமனின் மாறுதலுக்குக் காரணம் உலகமா, அல்லது அவரா என்று என்னால் திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லை.

அடாடா! அவர் வசித்து வந்த அந்த 'விக்டோரியா பவ'னத்தைக் காணாமல் அன்று நான் தவித்த தவிப்பு இருக்கிறதே. ஆண்டவனுக்குக் கூட நிச்சயமாகத் தெரியாது - எனக்குத்தான் தெரியும்.

ஆம், பாரிஸ்டர் பரந்தாமன் மாறித்தான் போயிருந்தார். ஆனால் அவர் மட்டும் மாறியிருக்கவில்லை; அவருடைய வீட்டின் விலாசமும் மாறியிருந்தது.

அவருடைய பங்களாவின் முகப்புச் சுவரில் அன்று காணப்பட்ட 'விக்டோரியா பவனம்' என்ற கல்வெட்டை இன்று காணவில்லை. அதற்குப் பதிலாக, 'காந்தி பவனம்' என்ற கல்வெட்டு அங்கே காட்சியளித்தது.

'ஒருவேளை சாந்தி பவனமாயிருக்குமோ!' என்று நான் கண்ணைக் கசக்கி விட்டுக்கொண்டு பார்த்தேன்; கை விரலால் அந்த 'க' என்ற எழுத்தின் வரிவடிவத்தை ஒருமுறைக்கு இருமுறையாகத் தடவித் தடவிப் பார்த்தேன் - சந்தேகமேயில்லை; 'காந்தி பவன'மேதான்!

இந்தச் சோதனையில் நான் ஈடுபட்டிருந்தபோது அங்கிருந்த நாய் ஒன்று, சில மனிதர்களைப் போல அடிமை வாழ்விலும் கடமையை மறக்காமல், 'வள், வள்' என்று குரைத்தது.

அடுத்த நிமிஷம் உடையில் பண்டித மோதிலால் நேருவை ஞாபகப்படுத்தும் ஒரு மனிதர் அங்கே தோன்றி, ''யார் அது?'' என்றார் அதட்டும் குரலில்.

அவர் வேறு யாருமல்ல; பாரிஸ்டர் பரந்தாமனே தான்!

நான் மௌனமாகச் சென்று அவருக்கு முன்னால் நின்றேன்.

கதர்க் குல்லாயைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு அவர் என்னை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு, ''அட, நீயா! நீயேதானா!'' என்றார்.

என்ன காரணத்தாலோ அப்பொழுதும் ஒன்றும் சொல்லத் தோன்றாமல், அவரையும் அவர் வீட்டு முற்றத்தின் சுவரை அலங்கரித்துக் கொண்டிருந்த மகாத்மா காந்தியின் படத்தையும் நான் மாறி மாறிப் பார்த்த வண்ணம் விழித்துக்கொண்டிருந்தேன்.

''ஏன், இன்னும் சந்தேகம் தீரவில்லையா? - நீ பார்க்கும் பார்வையைப் பார்த்தால் என்னைக்கூடப் பாரிஸ்டர் பரந்தாமன் என்று ஒப்புக்கொள்ள மாட்டாய் போலிருக்கிறதே?'' என்றார் அவர்.

அப்பொழுதும் நான் லேசாகச் சிரித்துவிட்டு மௌனம் சாதித்தேன்.

அவர் என் கையைப் பற்றி உள்ளே அழைத்துச் சென்றார். 'இவரைப் போன்ற ஏகாதிபத்திய தாசர்களின் மனமாற்றத்துக்கு நம்மைப் போன்ற அற்பர்களின் தியாகமும் ஓரளவு காரணமாயிருந்திருக்குமல்லவா?' என்ற பெருமிதத்துடன் நான் அவரைத் தொடர்ந்து சென்றேன்.

உள்ளே சென்று உட்கார்ந்ததும் என்னையும் அறியாமல் என் கண்கள் யாரையோ தேடித்தேடியலைந் தன. இதைக் கவனித்த பரந்தாமனார் வேறு விதமாக நினைத்துக்கொண்டு, "என்ன செல்வம், உனக்கு எல்லாம் ஒரே ஆச்சரியமாகத் தோன்றுகிறதா?" என்று கேட்டார்.

"இதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? ஏதோ என்னைப் போன்றவர்களின் அற்ப தியாகத்தினால் உங்களைப் போன்றவர்களின் மனமும் மாறியிருக்கிறதே. அதைப் பார்க்கப் பெருமையாய்த்தானிருக்கிறது!" என்றேன் நான்.

இவ்வாறு சொல்லி வாய் மூடுமுன் அவர் விழுந்து விழுந்து சிரிக்கலானார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன, ஏன் இப்படிச் சிரிக்கிறீர்கள்?" என்று பரபரப் புடன் கேட்டேன்.

"ஒன்றுமில்லை; உன்னை நீயே ஏமாற்றிக்கொள் கிறாயே, அதற்காகச் சிரித்தேன்!" என்றார் அவர்.

"என்ன. என்னை நானே ஏமாற்றிக்கொள்கிறேனா?"

"ஆமாம். உன்னைப் போன்றவர்களின் அற்ப தியாகத்தினாலோ, அபார தியாகத்தினாலோ நாங்கள் மனம் மாறிவிடவில்லை என்பதை இங்கே நான் வருத்தத்துடன் சொல்லிக்கொள்கிறேன்!" என்றார் அவர், 'பிரசங்கப் பாணி'யில்.

"சரி, அந்தப் பெருமையை என்னைப் போன்றவர் களுக்கு அளிக்க உங்களுக்கு இஷ்டமில்லையென்றால் விட்டுவிடுங்கள்!"

"இஷ்டமில்லாமலென்ன? - ஆனால் உன்னைப் போன்றவர்களுடைய தியாகத்துக்கும் என்னைப்போன்ற வர்களுடைய மாறுதலுக்கும் ஏதாவது சம்பந்தம் இருந்தால் தானே? - இது எங்களுடைய சொந்த விஷயம் சார், சொந்த விஷயம்!"

"எது உங்களுடைய சொந்த விஷயம்?"

"நாங்கள் மனம் மாறியதுதான்!"

"அது எப்படி சொந்த விஷயமாகும்?"

"சொல்கிறேன் - இருந்தாற்போலிருந்து அந்த காந்தி கோர்ட்டு பகிஷ்காரம், அந்நியத் துணி பகிஷ்காரம், பள்ளிக்கூட பகிஷ்காரம் என்று ஆரம்பித்து விட்டான்..."

"அதனாலென்ன?"

"சரியாய்ப் போச்சு! - அந்நியத் துணி பகிஷ்காரம், பள்ளிக்கூடப் பகிஷ்காரம் இவற்றைப்பற்றி வேண்டு மானால் கவலைப்படாமலிருக்கலாம்; கோர்ட்டு பகிஷ் காரத்தைப் பற்றி என்னைப்போன்றவர்கள் கவலைப் படாமல் இருக்க முடியுமா?"

"அந்தக் கவலைதான் உங்களைக் காங்கிரஸ்காரனாக மாற்றிவிட்டதா, என்ன?"

"ஆமாம் தம்பி, ஆமாம் - இல்லையென்றால் இந்த வேஷத்தை நான் ஏன் போட்டிருக்கப் போகிறேன்?"

"இதனால் உங்களுடைய கவலை தீர்ந்துவிடுமா, என்ன?"

"அதெல்லாம் அவரவர்களுடைய திறமையைப் பொறுத்தது. இந்த மாதிரி வேஷத்தால் சிலர் தங்கள் கவலையைத் தீர்த்துக் கொள்வதுமுண்டு; கஷ்டத்தை விலைக்கு வாங்கிக்கொள்வதுமுண்டு!"

"சரி, உங்களுடைய உத்தேசம் என்ன?"

"கவலையைத் தீர்த்துக்கொள்ளும் உத்தேசந்தான்!"

"அதற்கு நீங்கள் பழைய பாரிஸ்டராகவே இருந்திருக் கலாமே?"

"அது தெரியாதா, எனக்கு? - அந்தப் பாழும் தொழிலில் பணம் பண்ணுவதைத் தவிர வேறு என்னப்பா, இருக்கிறது?"

''உங்களைப் போன்றவர்களுக்குத்தான் அந்தப் பணத்தைத் தவிர வேறு ஒன்றுமே வேண்டிய தில்லையே?''

''உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான்! - என்னைப் போன்றவர்களுக்கும் எல்லாவற்றிலும் ஆசையுண்டு ஐயா, ஆசையுண்டு, ஆனால் அதற்காக எந்தவிதமான கஷ்டத்தையும் அனுபவிக்கத்தான் நாங்கள் தயாராயிருப்ப தில்லை!''

''சரி, இந்த நாட்டு மக்கள் அனைவரும் உங்களைப் போலவே சகல சௌகரியங்களுடனும் வாழ வேண்டு மென்றாவது நீங்கள் விரும்புகிறீர்களல்லவா?''

''மன்னிக்க வேண்டும்; அவ்வளவு தூரம் என் புத்தி இன்னும் கெட்டுப் போகவில்லை - எல்லோரும் என்னைப் போலவே வாழ்வதென்று ஏற்பட்டுவிட்டால், அப்புறம் இந்த உலகத்தில் எங்களை யார் மதிப்பார்கள்? எங்கள் வீட்டைக் காக்க நாயைத் தவிர வேறு எவன் கிடைப்பான்? காரை வேண்டுமானால் நாங்களே ஓட்டக் கற்றுக் கொள்ளலாம்; ஓட்டிக்கொண்டும் செல்லலாம், ஆனால் அதிலிருந்து இறங்கக் கதவைத் திறந்து விடுவது யார்? கை கட்டி நிற்பது யார்? கழுவித் துடைப்பது யார்? ஏவிய வேலையைச் செய்வதற்கும், எச்சில் இலையை எடுத்துப் போடுவதற்கும் யாரைத் தேடுவது?''

''உங்களைப்போன்ற ஒரு சிலர் மதிப்பு, மரியாதை யுடன் வாழவேண்டுமென்பதற்காக ஏழைகள் என்றும் ஏழைகளாகவே இருக்க வேண்டுமென்று நீங்கள் நினைப்பது என்ன நியாயம்?''

''நியாயமாவது, அநியாயமாவது! மனைவி தன்னை மதிக்க வேண்டுமென்று கணவன் எதிர்பார்க்கிறான்; மகன் தன்னை மதிக்க வேண்டுமென்று தகப்பன் எதிர்பார்க் கிறான்; தம்பி தன்னை மதிக்க வேண்டுமென்று அண்ணன்

எதிர்பார்க்கிறான் - இதெல்லாம் நியாயமாயிருக்கும் போது எங்கள் கட்சி மட்டும் எப்படி நியாயமற்றதாயிருக்க முடியும்? - பரம்பரை பரம்பரையாக வளர்ந்து வந்திருக்கும் இந்த 'நாகரீக'த்தை ஒழிக்க உன்னைப்போல் எத்தனை பேர் கிளம்பினாலும் முடியாதப்பா, முடியாது. ஆனால் 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் இந்நாட்டு மன்னர்!' என்ற வெறுங் கூச்சலை மட்டும் அதற்காக நாங்கள் கைவிட்டுவிட முடியாதுதான்!''

''அது ஏன் அப்படி?''

''இது என்ன கேள்வி? - அதுதானே என்னைப் போன்றவர்கள் பேரும் புகழும் பெறுவதற்குத் தாரக மந்திரமாயிருக்கிறது? - உண்மையான மதிப்பு; ஊரோடு மட்டுமின்றி உலகத்தோடும் ஒட்டிய மதிப்பு; ஒரு நாளும் அழியாத மதிப்பு; செத்தாலும் சாகாத மதிப்பு - யாராவது பெற வேண்டுமென்றால் அவர்களுக்கு அந்தக் கூச்சலை விட்டால் வேறு வழி? அதனால்தான் இந்த உடம்பில் உயிருள்ளவரை கட்சிக்காரர்களைக் கட்டிக் கொண்டு அழுது, அவர்களுக்காகத் தொண்டைத் தண்ணீர் வற்றக் கத்தி, கடைசியில் ஒருவருக்கும் தெரியாமல் செத்துப் போகும் அந்தப் பாரிஸ்டர் தொழிலுக்கு நான் முழுக்குப் போட்டுவிட்டேன்!''

''அப்படியானால் காந்திஜியின் கோர்ட்டுப் பகிஷ்காரத்தை விரும்பியோ, அதில் நாமும் கலந்துகொள்ள வேண்டியது நியாயம் என்று கருதியோ நீங்கள் தொழிலை விடவில்லையா?''

''உன்னிடம் நான் தான் உண்மையைச் சொல்கிறேனே, அந்த மனிதனின் திட்டங்கள் அனைத்தும் பரிபூரண வெற்றி அடைந்துவிடும் என்று நான் இன்றுகூட நினைக்கவில்லை. ஆனால் மக்களின் உணர்ச்சியைத் தூண்டக்கூடிய ஏதோ ஒரு சக்தி அவனுடைய பேச்சுக்குத் தற்சமயம் இருக்கிறது. அதன் மூலம் ஒருவேளை அவன்

வெற்றி அடைந்தாலும் அடையலாம் - அதையெல்லாம் இப்போது நாம் ஏன் அலசிப் பார்க்க வேண்டும்? - என்னவோ, என்னைப்போன்றவர்கள் 'அகில இந்தியக் கீர்த்தி' அடைவதற்கு அவன் ஒரு குறுக்கு வழியைக் காட்டுகிறான்; அதை நான் பயன்படுத்திக் கொண்டு விட்டேன் - அவ்வளவுதான் விஷயம்!''

''அகில இந்தியக் கீர்த்தி அடைவதற்கு இதில் என்ன இருக்கிறது?''

''விஷயம் தெரியாத மனிதனாயிருக்கிறாயே? - இந்தா, இந்தப் பத்திரிகையைப் பார்!'' என்று சொல்லி அங்கிருந்த ஒரு பத்திரிகையை எடுத்து எனக்கு முன்னால் விட்டெறிந் தார் பாரிஸ்டர். அந்தப் பத்திரிகையில் அவர் தேசநலனைக் கருதி, லட்சக் கணக்கில் வரும்படி வரும் வக்கீல் தொழிலைத் துச்சமெனக் கருதி விட்டது பற்றிய மகத்தான செய்தியும், அதற்காக ஆசிரியர் பெருமான் எழுதியிருந்த மாபெரும் தலையங்கமும் வெளியாகியிருந்தன. மேலெழுந்த வாரியாக அவற்றைப் பார்த்துக்கொண்டிருந்த என்னை நோக்கி, ''பார்த்தீர்களா, சில சமயம் நமக்கு நூற்றுக் கணக்கில்கூட வரும்படி வராவிட்டாலும் பத்திரி கையில் லட்சக்கணக்கில் வரும்படி வரும் அதிசயத்தை!'' என்றார் பரந்தாமன்.

''பார்த்தேன், பார்த்தேன்!'' என்றேன் நான்.

இந்தத் தலையங்கம் எழுதிய ஆசிரியர் இருக்கிறாரே, அவர் மறுநாள் என்னைப் பார்க்க வந்தார். 'தங்களைப் பற்றித் தலையங்கம் எழுதியிருந்தேனே, பார்த்தீர்களா?' என்று கேட்டார். 'ஆஹா, பார்த்தேன்; பார்த்துப் பரவச மடைந்தேன்!' என்று சொல்லி நான் அவரை அனுப்பி வைத்தேன்! அதற்குப் பிறகு இரண்டுநாள் கழித்துத் தம்முடைய பெண்ணுக்குக் கல்யாணம் என்று 'அழைப்பிதழ்' அனுப்பினார். நானும் சந்தர்ப்பத்தைக் கைவிடாமலும் நன்றியை மறவாமலும் ஆயிரம் ரூபாயில்

ஒரு வெள்ளிக்குடம் வாங்கிக் கொண்டு போய் அவருடைய பெண்ணுக்கு ஓதி இட்டுவிட்டு வந்தேன் - எப்படி எங்கள் திட்டம்?''

''பிரமாதம், போங்கள்!''

''அப்படிச் சொல்லய்யா, அப்படிச் சொல்லு! - அதற்குப் பிறகு நான் 'திலகர் குருகுலம்' ஆரம்பித்தபோது, தம் பத்திரிகையில் அதைப் பற்றிய செய்திகளை அவர் பிரமாதப்படுத்திப் பிரசுரித்தார். என்னுடைய படத்தை வேறு பெரிய அளவில் போட்டு, 'இந்திரனாக்கும், சந்திரனாக்கும்!' என்றெல்லாம் எழுதி ஜமாய்த்தார்! - நீங்களுந்தான் போலீஸ் குண்டாந்தடியை ருசி பார்த்து, சிறை வாசனையை மூன்று வருட காலம் அனுபவித்து, தொழிற் பயிற்சியைக் கைவிட்டு, வருங்கால வாழ்விலும் மண்ணைப் போட்டுக்கொண்டு, இறந்த தாயையும் இறக்காத தங்கையையும் பிரிந்து விடுதலையாகி வந்திருக் கிறீர்கள் - என்ன பிரயோசனம்? - இன்று காங்கிரஸ்காரன் என்ற முறையில் எனக்கு இருக்கும் மதிப்பு உன்னைப் போன்றவர்களுக்கு இருக்கிறதா, இருக்க முடியுமா?''

''அது சரி, அதென்ன திலகர் குருகுலம்?''

''இதுகூடவா தெரியவில்லை? காந்திஜியின் பள்ளிக் கூடப் பகிஷ்காரத்தைப் பின்பற்றிச் சிலர் விதேசிக் கல்வி பயில்வதை விட்டுச் சுதேசிக் கல்வி பயில ஆரம்பித்தார் களல்லவா? அந்தச் சந்தர்ப்பத்தையும் அடியேன் கை நழுவ விடவில்லை. அதனால் மாணவர்களுக்கு ஏதாவது பலன் கிடைத்ததோ என்னவோ, எனக்கு வேண்டிய மட்டும் பலன் கிடைத்துவிட்டது. - அடாடா! அதை ஆரம்பித்து வைத்த எனக்கு ஆனானப்பட்ட மகாத்மாவிட மிருந்தும், இன்னும் மற்ற தலைவர்கள் பிரமுகர்களிட மிருந்தும், வந்து குவிந்த வாழ்த்துத் தந்திகளும் செய்திகளுந்தான் எத்தனை எத்தனை! - இத்தனைக்கும்

அதனால் எனக்கு ஏதாவது நஷ்டமுண்டோ? கிடையவே கிடையாது; ஒருவிதத்தில் லாபம் என்றுகூடச் சொல்ல லாம். ஒரு காரியத்தில் இறங்கினால் அப்படியல்லவா இறங்க வேண்டும்? - இது தெரியவில்லையே, உனக்கு?''

''எப்படித் தெரியும்? எல்லாரும் உங்களைப் போலவே 'புத்திசாலிகளா'யிருந்துவிட முடியுமா?''

''சரி, என்னவோ சிறைக்குப் போகும் போதுதான் ஒருவருக்கும் தெரியாமல் போனாய்; வரும்போதாவது நாலுபேருக்குத் தெரிந்து வந்திருக்கக் கூடாதோ? எனக்கு மட்டும் நீ விடுதலையாகும் தேதியைக் குறிப்பிட்டு ஒரு கடிதம் எழுதியிருந்தால், என்னவெல்லாம் செய்திருப் பேன்? 'அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்து நின்று மூன்று வருடகாலம் சிறை சென்ற வீரர் வருகிறார்! இரத்தம் சிந்தியும் சித்தம் கலங்காத தீரர் வருகிறார்!' - என்றெல்லாம் சுவரொட்டி விளம்பரங்கள் செய்து, ஜனங்களை ஒரே பைத்தியங்களாக அடித்துவிட்டிருக்க மாட்டேனா? - அப்புறம் ஒரு பெருங் கூட்டத்துடன் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து, தாங்க முடியாதபடி உனக்குப் பூமாலைகளையும் புகழ்மாலைகளையும் சூட்டி, வரவேற்றிருக்க மாட்டேனா?''

''நீங்கள் என்ன, ஜனங்களை ஆட்டு மந்தைகளாகவா நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?''

''இல்லாமல் என்னவாம்? அதற்காகத்தானே என்னுடைய மேலான ஆதரவைக் கொண்டு இந்த நகரிலே பல கிளைச் சங்கங்கள் நடந்து கொண்டிருக்கின்றன? அவையெல்லாம் நான் சொன்னபடி கேட்காமல் வேறு என்ன செய்யும்? அப்படியே செய்தாலும் என்னுடைய பணம் இல்லாமல் அவை எப்படி உயிர் வாழும்? இவற்றைப் புரிந்துகொள்ளாமல் யாரோ ஒருவனைப் போல இப்படிச் சந்தடி செய்யாமல் வந்து எனக்கு

முன்னால் நிற்கிறாயே, உன்னை என்ன செய்தால் தேவலை!'' என்று சொல்லி நிறுத்தினார் அவர்.

எனக்குத் தலையை வலித்தது; ஒன்றும் புரியாமல் மூளை குழம்பி விட்டதுபோன்ற உணர்ச்சிக்கு நான் அப்போது ஆளானேன். நல்ல வேளையாக அந்தச் சமயத்தில் கையில் 'ஸ்டெதஸ்கோப்'புடன் சாந்தினி உள்ளே நுழைந்தாள். என்னைக் கண்டதும் அவளுடைய கால்கள் மேலே செல்லவில்லை; கண்ணின் இமைகளும் அப்படி இப்படி அசையவில்லை - நின்றது நின்றபடி நின்றாள். அதற்குள் பரந்தாமனார் குறுக்கிட்டு, என்ன அம்மா, இந்தப் பேர் வழியை யார் என்று உனக்குத் தெரியவில்லையா?'' என்று கேட்டார்.

அவருடைய கேள்விக்கு உடனே பதில் சொல்லாமல் அவள் என்னை ஒரு கணம் உற்று நோக்கினாள்; மறுகணம் வியப்புடனும், விஷமத்தனத்துடனும் விரிந்த இதழ்களை அவள் ஏனோ குவித்துக்கொள்ள முயன்றாள்.

பரந்தாமனார் விடவில்லை: ''என்ன, தெரியவே இல்லையா?'' என்றார் மறுபடியும்.

''தெரியவில்லையே, அப்பா!'' என்றாள் அவள் குறுநகையுடன்.

''இவன்தான் செல்வம்; மூன்று வருடங்களுக்கு முன்னால் என்னிடம்...''

''ஓஹோ, இப்பொழுது தெரிகிறது; சிறைக்குக்கூட...''

''ஆமாம் ஆமாம், அவனேதான்! - இன்று விடுதலையாகி வந்திருக்கிறான்!''

''அடபாவமே, இவருடைய தங்கைகூட இப்பொழுது இங்கே இல்லை போலிருக்கிறதே? - இரவு இவர் எங்கே தங்குவார்?'' என்று கேட்டுவிட்டு, அப்பாவுக்குத் தெரியாமல் தன் பார்வையை அவள் என்மேல் செலுத்தினாள்.

அதற்குள், "அதனாலென்ன, இன்றிரவு இங்கே தங்கிவிட்டு நாளைக்கு வேண்டுமானால் அங்கே போனால் போச்சு!" என்றார் பரந்தாமன்.

"பாவம், எப்பொழுது சாப்பிட்டதோ என்னவோ? மணி எட்டு அடிக்கப் போகிறதே, முதலில் சாப்பாட்டைப் போட்டுவிட்டு அப்புறம் வேண்டுமானால் பேசக் கூடாதோ?' என்றாள் அவள்.

"இதைத்தான் பெண் உள்ளம் என்பது! - இத்தனை நேரம் நானும் உன்னுடன் பேசிக்கொண்டிருந்தேனே, இதுவரை நீ சாப்பிடவில்லை என்பது எனக்குத் தெரியவேயில்லை, பார்த்தாயா?" என்றார் பரந்தாமன். பதிலுக்குப் புன்னகை புரிந்துவிட்டு நான் பேசாமல் இருந்தேன்.

"சரி வாருங்கள் - சாப்பிடுவோம்!" என்றார் பரந்தாமன்.

"முதலில் ஸ்நானம்; பிறகுதான் சாப்பாடு!" என்றேன் நான்.

அதற்குப் பின் பரந்தாமனாருக்கு எந்தவிதமான சிரமமும் கொடுக்கவில்லை சாந்தினி; எல்லாச் சிரமங்களையும் தானே ஏற்றுக் கொண்டாள். அதன் பயனாக அவர் தொணதொணப்பிலிருந்து ஒருவாறு தப்பி, ஸ்நானம், சாப்பாடு ஆகியவற்றையெல்லாம் முடித்துக் கொண்டேன். "சரி, காலையில் பார்ப்போம் - போய்ப் படுத்துக்கொள்!" என்று எனக்கெனத் தனி அறையொன்றைக் காட்டி விட்டு, "எங்கே அவளைக் காணோம்?" என்று தம் இளையாளைத் தேடிக் கொண்டு சென்றார் முதியவர்.



அன்றிரவும் எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை என்று சொல்லவாவேண்டும்? - மனமே ஒரு நிலையில் நிற்க வில்லை; அங்கேயும் இங்கேயுமாக அது அலைந்து கொண்டே இருந்தது. அத்துடன், என்றுமில்லாத அதிசயமாக அன்று உலகமே எனக்குப் புத்தம் புதிதாகத் தோன்றியது.

ஆம், சிறைக்குள்ளிருந்த போது நான் சிலரிடமிருந்து கேட்டறிந்த விஷயங்களும், அன்று மாலை பரந்தாமனார் வெளியிட்ட சில விவரங்களுந்தான் அதற்குக் காரணமா யிருக்க வேண்டும்.

அவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து எண்ணிப் பார்க்கும்போது, "நாம் இதுவரை உலகமே இன்னதென்று தெரியாமல் இருந்து விட்டோமோ?" என்ற சந்தேகங்கூட எனக்கு எழுந்த தென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இதற்கிடையே சித்ராவின் நினைவு வேறு - நாளைக்காவது தஞ்சைக்குப் போய் அவளைப் பார்க்க வேண்டாமா? - பார்க்கத்தான் வேண்டும் - ஆனால் அதற்குக் குறைந்த பட்சம் பத்து ரூபாய்களாவது வேண்டுமே, என்ன செய்வது?

பாரிஸ்டர் பரந்தாமனைக் கேட்கலாமென்றால் அதற்கு மனம் இடங் கொடுக்கவில்லை - சாந்தினி - அவளைக் கேட்டால் என்ன? - பின்னால் திருப்பிக் கொடுத்து விட்டால் போகிறது!

சீ, அவளையும்தான் எப்படி மனம் விட்டுக் கேட்பது? அவளாகவே நம் நிலைமையை உணர்ந்து ஏதாவது கொடுத்தால் நன்றாயிருக்கும் - அப்படியும் நடக்குமா?

என்ன இருந்தாலும் படித்த பெண் - ஏன் நடக்காது?

அதுசரி, நாம் ஏன் இந்த நிலைக்கு வந்தோம்? - ரொம்ப அழகுதான்! - அதைப்பற்றி இப்போது யோசித்து என்ன பயன்?

இப்படியாக என்னவெல்லாமோ எண்ணியெண்ணி நான் ஏங்கிக்கொண்டிருந்தபோது, 'கிலிங், கிலிங்' என்ற வளையலொலி என் காதில் விழுந்தது; திரும்பிப் பார்த்தேன் - சாளரத்தின் வழியாக ஒரு கடிதம் வந்து என் அறைக்குள் விழுந்தது; வியப்புடன் அதை எடுத்துப் பிரித்துப்படித்தேன்:

***அன்புடையீர்,***

***நாளை மாலை நாலு மணிக்கு என்னை ஜெனரல் ஆஸ்பத்திரி வாயிலண்டை எதிர்பார்த்துக் கொண்டிருக்கவும். அதற்கு முன்னரே அவசியமானால் 'தஞ்சைக்குச் சென்று வருகிறேன்' என்று என் தகப்பனாரிடம் விடை பெற்றுக் கொள்ளவும் - மற்றவை நேரில்.***

***என்றுமுங்கள்,***

***சாந்தினி.***

இந்தக் கடிதத்தைப் படித்ததும் எனக்கு அப்போது ஏற்பட்ட உள்ளக் கிளர்ச்சியை நான் எப்படி எழுத்தில் விவரிப்பேன்?

# 8. காதலும் கண்ணீரும்

மறுநாள் பொழுது விடிந்ததும் யாரோ வந்து என் அறைக் கதவுகளைத் திறக்கும் சத்தம் கேட்டது. ஜெயில் வார்டர்தான் வந்து விட்டானோ என்று நான் தூக்கி வாரிப்போட்டவனாய் எழுந்து உட்கார்ந்தேன். ''மூன்று வருஷத்துத் தூக்கத்தையும் சேர்ந்து ஒரே இரவில் தூங்கி விடுவதாக உத்தேசமோ?'' என்று கேட்டுக்கொண்டே பாரிஸ்டர் பரந்தாமன் உள்ளே நுழைந்தார்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை; கண்கள் தூங்க விரும்பினாலும் மனம் எங்கே தூங்கவிடுகிறது?'' என்றேன் நான்.

''இன்று மாலை ஒரு பெரிய வரவேற்பு விழாவுக்கு ஏற்பாடு செய்வதென்று தீர்மானித்திருக்கிறேன்!'' என்று ஆரம்பித்தார் அவர்.

''யாருக்கு வரவேற்பு?'' என்றேன் நான்.

''சரியாய்ப் போச்சு! உனக்குத்தான் ஐயா, உனக்குத்தான்!''

''என்னைத்தான் நேற்றே வரவேற்று விட்டீர்களே?''

''நான் மட்டும் வரவேற்றுவிட்டால் போதுமா? பொது மக்கள் திரண்டு வந்து உன்னை வரவேற்க வேண்டாமா?''

''அவ்வளவு தூரத்துக்கு நான் 'பெரிய மனித'னா, என்ன!''

''அது எப்படியிருப்பான், பெரிய மனிதன்?''

''அறிவிலும் ஆற்றலிலும், வீரத்திலும் தீரத்திலும், தியாகத்திலும் சீலத்திலும் சிறந்தவனாயிருப்பான்!''

''சரி, அவற்றில் ஒன்றுமே உன்னிடம் இல்லையா?''

''என்னிடம் என்ன இருக்கிறது; நான் நேற்று முளைத்தவன்தானே?''

''ச்சூச்சூ! - இப்படி நினைத்து நினைத்துத்தான் நம்மவர்கள் குட்டிச்சுவராய்ப் போகிறார்கள் - என்னைக் கேட்டால் பெரிய மனிதனாவதற்கு நீ சொல்வதில் ஒன்றுமே இருக்க வேண்டாம் என்று சொல்வேன்.''

''வேறு என்ன இருக்க வேண்டுமாம்?''

''அப்படி வா, வழிக்கு! - பெரிய மனிதர்கள் என்றால் நாலு பேருக்குத் தெரிந்து அங்குமிங்குமாக நடமாடிக் கொண்டிருக்கக் கூடாது - கூடியவரை நடமாட்டத்தைக்

குறைத்துக்கொண்டு, 'அவர் எப்படியிருப்பார், அவர் எப்படியிருப்பார்?' என்ற ஆவலை ஏதும் அறியாத மக்களிடையே தூண்டிவிட வேண்டும்; அதற்காகத் தங்கள் வீரப் பிரதாபங்களைப் பற்றிய செய்திகள் அடிக்கடி பத்திரிகைகளில் வெளியாகும்படி பார்த்துக் கொள்ள வேண்டும் - அப்படிச் சொல்லிக்கொள்ள வேறொன்றும் இல்லையென்றாலும் பாதகமில்லை; 'நேற்று அங்கே போனார். இன்று இங்கே வந்தார்!' என்பன போன்ற தகவல்களை மட்டும் வெளியிட்டால் கூடப்போதும் - 'ஏன் போனார், ஏன் வந்தார்?', 'யாருக் காகப் போனார், யாருக்காக வந்தார்!' என்று யாராவது கேட்டுவிடுவார்களோ என்ற பயம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை வேண்டாத சங்கதி - ஏன் தெரியுமா? - தமிழ் மக்கள் இன்னும் அவ்வளவு தூரம் 'புத்திசாலிக'ளாகி விடவில்லை!''

''நாசமாய்ப் போச்சு!''

''சொல்வதைக் கேளப்பா! - இன்னும் பெரிய மனிதர் களானவர்கள் - அல்லது, ஆக்கப்பட்டவர்கள் அடிக்கடி அறிக்கைகள் வெளியிடலாம். அவற்றைத் தயார் செய்யத் தங்களுக்குத் தெரியவில்லையென்றால், தெரிந்தவர் களைக் 'கூலிக்கு மாரடிக்க' வைத்துக் கொள்ளலாம். ஆனால் ஒன்று - அந்தக் 'கூலிக'ளுக்கு நம்முடைய பலவீனம் தெரிந்துவிடக் கூடாது. அதற்காக அவர்கள் செய்யும் காரியங்களிலெல்லாம் வேண்டுமென்றே ஏதாவது குற்றங் குறைகள் கண்டுபிடித்து, 'அது சொத்தை, இது சொள்ளை' என்று சொல்லி, அவர்களை அடிக்கடி மட்டந் தட்டிக் கொண்டிருக்க வேண்டும் - எந்தப் பைத்தியக்காரனாவது நம்மை 'அபூர்வப் பிறவி' என்று நினைத்துக் கொண்டு பார்க்கவந்தால், அவனுக்கு லேசில் பேட்டி அளித்துவிடக் கூடாது - 'அவர் அவசர வேலையா யிருக்கிறார்', 'டாக்டர் யாரையும் பார்க்கக் கூடாது என்று

சொல்லியிருக்கிறார்', அவர் ஊரில் இல்லை, நாளை வேண்டுமானால் பார்க்கலாம்' 'இப்பொழுது உங்களைப் பார்க்க முடியாததற்காக வருந்துகிறார்!' - இப்படி ஏதாவது சொல்லி, அவனுடைய பொறுமையை முடிந்தவரை சோதிக்க வேண்டும். அதற்குள், 'அவன் சுரணையுள்ள வனா, இல்லாதவனா?' என்று தெரிந்துவிடும். அதற்குப் பிறகு சுரணையில்லாதவனாயிருந்தால் அவனுக்குப் பேட்டியளிக்கலாம்; சுரணையுள்ளவனாயிருந்தால் பேட்டியளிக்கக் கூடாது - அது ஒரு வேளை ஆபத்தில் கொண்டு வந்து விட்டாலும் விடலாம் - இப்படியெல்லாம் நடந்து கொண்டு வந்தால் சமூகத்தில் நமக்குத் தானாகவே மதிப்பு ஏற்பட்டுவிடும். அப்புறம் யாராவது ஏதாவது கூட்டத்தைக் கூட்டி அதில் கலந்துகொள்ள நம்மை அழைப்பார்கள். அப்படி யாரும் அழைக்காவிட்டாலும் அதற்காகக் கவலைப்பட வேண்டியதில்லை; நம்முடைய செலவிலேயே ஏதாவது ஒரு காரணத்தை நாம் முன்னால் வைத்துக் கூட்டத்தைக் கூட்டலாம்; அந்தக் கூட்டத்தில் ஆகாயத்திலிருந்து திடீரென்று கீழே குதித்தவனைப் போலப் பிரசன்ன மாகலாம்; பிரசங்கமாரி பொழியலாம். மக்கள் அவனுடைய பேச்சைக் கேட்க வராவிட்டாலும், அவனைப் பார்ப்பதற்காகவாவது நிச்சயம் விழுந்தடித்துக் கொண்டு வருவார்கள்!''

என்னால் பொறுக்க முடியவில்லை. கட்டிலை விட்டுச் சட்டென்று கீழே குதித்து, ''ஐயோ, என்னிடம் ஏன் இந்த அபத்தங்களையெல்லாம் சொல்லித் தொலைக்கிறீர்கள்? - நீங்கள் நினைப்பதுபோல் நான் நிச்சயம் பெரிய மனிதனாகப் போவதில்லை!'' என்றேன் வெறுப்புடன்.

இதைக் கேட்டதும் அவர் துள்ளிக் குதித்து, ''அடிசக்கை, இதுகூடப் பெரிய மனிதனாவதற்கு நல்ல வழி தான்! - அதாவது, பெரியமனிதனாகப் போவதில்லை' என்று சொல்லிக்கொண்டே 'பெரிய மனிதனாவது! -

ஆனால் இதற்கெல்லாம் முதலில் வேண்டியது பணம். அதை முதலில் ஏதாவது பித்தலாட்டங்கள் செய்து சேர்த்துக்கொள்ள வேண்டும்; பின்னால் அதைக் கொண்டு அந்தப் பித்தலாட்டங்களை மறைத்துவிடலாம். இதுதான் பெரிய மனிதனின் லட்சியம் - ஏன், லட்சணங்கூட இதுதான்; இதுவேதான்!'' என்றார்.

''அந்த லட்சணங்கூட என்னிடம் இல்லையே?'' என்றேன் நான்.

''இல்லாவிட்டால் என்ன, இருப்பதாகக் காட்டிக் கொண்டால் போச்சு! - அதற்கு முதற்படியாகத்தான் இன்று மாலை நான் நடத்தப்போகும் வரவேற்பு விழாவில் உன்னைக் கலந்து கொள்ளும்படி வேண்டுகிறேன்!''

''மன்னிக்க வேண்டும்; இப்படி வலுவில் புகழ் தேடிக் கொள்வதை நான் மனப்பூர்வமாக வெறுக்கிறேன். உண்மையான லட்சியவாதி என்றால், புகழ் தானாகவே அவனைத் தேடி வரும்; அவன் புகழைத் தேடிக்கொண்டு போக வேண்டியதில்லை.''

''நீ சொல்வதும் ஒருவிதத்தில் உண்மைதான்! - உண்மையான லட்சியவாதி என்றால், அவன் எதற்காகப் புகழைத் தேடிக்கொண்டு போகவேண்டும்? அதற்குள் மரணம்தான் அவனைத் தேடிக்கொண்டு வந்துவிடுமே!''

''விட்டது, கவலை! - இந்த அழகான உலகத்திலிருந்து என்னைப் போன்றவர்களுக்குச் சீக்கிரம் விடுதலை யளிக்கும் அந்த மரணம் நீடூழி வாழட்டும்!''

''அப்படியானால் சரி! - நீ வாழ ஆசைப்படுவாயாக்கும் என்று நினைத்தேன்; உனக்கோ சாக ஆசையாய் இருக்கிறது - ம், அதற்கு நான் என்ன செய்ய?''

''நல்ல விஷம் ஏதாவது இருந்தால் ஒரு துளி கொடுங்களேன்!'' என்றேன் நான் சிரித்துக் கொண்டே.

''ஸ்நானம் செய்துவிட்டு வாருங்கள்; தருகிறேன்!'' என்றார், அவரும் சிரித்துக் கொண்டே.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஸ்நானம் செய்து விட்டு வந்து, ''எங்கே விஷம்?'' என்று கேட்டேன்.

மேஜை மீதிருந்த காப்பியைச் சுட்டிக் காட்டினார்; எடுத்துக் குடித்தேன்.

அதற்குள் சாந்தினி வந்து, ''நான் வரட்டுமா, அப்பா!'' என்று ஆஸ்பத்திரிக்குச் செல்ல விடை கேட்டாள்.

''போய் வா, அம்மா!'' என்றார் அவர்.

போகிற போக்கில் அவள் என்மீது ஒரு க்டைக் கண் பார்வையை வீசிவிட்டு, வாசலில் காத்திருந்த காரில் ஏறிக் கொண்டாள். நான் பாரிஸ்டரை நோக்கி, ''உங்களுடைய பெண்ணைப் போலவே நம் நாட்டிலுள்ள ஒவ்வொரு பெண்ணும் புருஷனை நம்பி வாழாத புதுமைப் பெண்ணாக மாறிவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!'' என்றேன்.

''அதற்கு எல்லாத் தகப்பன்மார்களும் என்னைப் போலவே வக்கீலாயிருந்து நியாயத்தைக் கொல்ல வேண்டுமே!'' என்றார் அவர்.

நான் சிரித்தபடி, ''நாடு விடுதலையடைந்துவிட்டால் அதற்கு அவசியம் இருக்காது; எல்லாக் குழந்தைகளையும் சர்க்கார் தங்கள் செலவிலேயே படிக்க வைத்து விடுவார்கள்!'' என்றேன்.

''பலே, பிரசாரத்துக்கு இது ஓர் அருமையான வார்த்தையப்பா! - நாடு விடுதலையடையும் வரை இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கலாம், விடுதலையடைந்த பிறகு நாட்டின் பொருளாதார நிலையைச் சுட்டிக் காட்டி அதைச் சுலபமாகத் தட்டிக் கழித்து விடலாம்!''

''உங்களுடைய அவநம்பிக்கையை நீங்கள் முதலில் விட்டொழிக்க வேண்டும்.''

''சரி, விட்டொழித்து விடுகிறேன்.''

''தேச விடுதலைக்காகத் தியாக அக்கினியில் குதித்திருக்கும் காங்கிரஸ்காரர்களை நீங்கள் நம்ப வேண்டும்.''

''நம்புகிறேன் அப்பா, நம்புகிறேன்; அவர்களைப் பின்பற்றி, 'நானும் தியாக அக்கினியில் குதித்திருப்பதிலிருந்தே அது உனக்குத் தெரியவில்லையா? ஆனால் மக்களின் நல்வாழ்வுக்குக் கடவுளையும், கைராட்டையையும் அவர்கள் நம்புவதைப் பார்க்கும்போதுதான் என்னுடைய நம்பிக்கை ஆட்டங் கண்டு விடுகிறது. ஏனெனில், கடவுளாலும், கைராட்டையாலும் இந்த நாட்டின் பொருளாதாரம் ஒரு நாளும் முன்னேறாது என்பது என் அபிப்பிராயம். பொருளாதார முன்னேற்றமின்றி இந்த நாட்டுக் குழந்தைகள் சர்க்கார் செலவில் கல்வியறிவு பெறுவதென்பது கனவிலும் நடக்காத காரியம்.''

''இந்த அபிப்பிராயம் என்னைப் போன்ற இளைஞர்களுக்கு உண்டு. ஆனால், அதைத் தைரியமாக எடுத்துச் சொல்வதற்குரிய காலம் இன்னும் வரவில்லை. அந்தக் காலம் வரும்போது நாங்கள் காங்கிரஸைக் கைப்பற்றிக் கடவுளையும், கைராட்டையையும் ஒழித்துக் கட்டத் தயங்க மாட்டோம்!''

''இது நடக்காத காரியம் தம்பி, நடக்காத காரியம்! அந்தக் காலம் வருவதற்குள் என்னைப் போன்றவர்கள் காங்கிரஸை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு விடுவார்கள். அப்புறம் எங்களுடைய செல்வாக்கை மீறி நீங்கள் ஒன்றும் செய்துவிட முடியாது!''

இந்தச் சமயத்தில் சாந்தினியை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றிருந்த கார் திரும்பி வந்து வாசலில் நின்றது. அதிலிருந்து டிரைவர் கீழே இறங்கி வந்து,

''அம்மா சாயந்திரம் வண்டி வேண்டாம்னு சொன்னாங்க!'' என்றான்.

''ஏனாம்?'' என்று பரந்தாமன் கேட்டார்.

''யாரோ ஒரு சிநேகிதி வீட்டுக்கு அம்மா போறாங் களாம்; திரும்பி வருவதற்குக் கொஞ்ச நாழியாகும்னு சொல்லச் சொன்னாங்க!'' என்றான் அவன்.

''சரி, போ!'' என்று சொல்லிவிட்டுப் பரந்தாமன் கைக் கடிகாரத்தைப் பார்த்தார்; மணி பத்தரை ஆகியிருந்தது - ''சாப்பிடுவோமா?'' என்றார்.

அதே சமயத்தில், ''இலை போட்டாச்சு!'' என்று சொல் லிக்கொண்டே அங்கு வந்து நின்றான் சமையற்காரன். இருவரும் எழுந்து சென்று சாப்பிட்டுவிட்டு வந்தோம்.

''பகலில் நீங்கள் தூங்குவதுண்டா?'' என்று கேட்டார் பரந்தாமன்.

எனக்குப் பகலில் தூங்கும் பழக்கம் இல்லையென் றாலும் அவருடைய தொணதொணப்பிலிருந்து தப்புவதற் காக ''உண்டு'' என்று சொல்லி வைத்தேன்.

''சரி, படுத்துக் கொள்ளுங்கள்!'' என்று சொல்லி விட்டு அவர் எழுந்தார்.

''இன்னொரு விஷயம்; மூன்று மணிக்கெல்லாம் இங்கிருந்து கிளம்பிவிடப் போகிறேன்!'' என்றேன் நான்.

''எதற்காக?'' என்று அவர் கேட்டார்.

''ஊருக்குப் போவதற்காகத்தான்!''

''இரவு எட்டரை மணிக்குத்தானே வண்டி?''

என்னுடைய நிலைமை தர்மசங்கடமாகப் போய் விட்டது. இந்தக் கேள்விக்கு அரிச்சந்திரனாயிருந்தால் என்ன பதில் சொல்லியிருப்பானோ? - ஒருவேளை, 'உங்கள் அருமைக் குமாரி சாந்தினி என்னை நாலு

மணிக்கெல்லாம் ஜெனரல் ஆஸ்பத்திரியின் வாயிலுக்கு வந்து காத்திருக்கும்படி சொல்லியிருக்கிறாள்!'' என்று அவன் உள்ளது உள்ளபடியே சொல்லியிருக்கலாம் - அவனுக்கென்ன, நிலைமை மோசமாகும்போது பரம சிவன் வந்து காட்சியளிப்பார் என்ற தைரியம் இருக்கும். அடியேனுக்கு அம்மாதிரி தைரியம் ஒன்றும் இல்லை யல்லவா? - எனவே; போனாற் போகிறதென்று 'நரக'த்துக்கும் துணிந்து நான் ஒரு மகத்தான பொய்யை அவரிடம் சொன்னேன் - அதாவது, 'நண்பன் ஒருவனைப் பார்த்துவிட்டுப் போகப் போகிறேன் என்று!'

''அப்படியானால் சரி! - நான் இப்போது திலகர் குருகுலம் வரை போய்விட்டு வரலாமென்று இருக்கிறேன்; நீங்களும் வேண்டுமானால் வருகிறீர்களா?'' என்றார் அவர்.

''மன்னியுங்கள்; இன்னொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம்!'' என்றேன் நான்.

அவர் போய்விட்டார்; நான் படுக்கையில் சாய்ந்தேன் என் மனம் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தது - என்னுடைய இருண்ட வாழ்க்கை ஒளி பெறுவதற்காக அன்பெனும் விளக்கை ஏற்றி எடுத்துக்கொண்டு வருகிறாள் சாந்தினி. அர்த்தமற்ற சமுதாயக் கட்டுப் பாட்டுக்கு முன்னால் அந்த உத்தமமான காரியத்தை அவள் உலகத்துக்குத் தெரியாமல் செய்ய வேண்டி யிருக்கிறது. ஆகவே, அப்படியும் இப்படியுமாகத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே அவள் பதுங்கிப் பதுங்கி வருகிறாள். பயத்தால் அவளுடைய விழிகள் அப் படியும் இப்படியுமாகப் பாய்ந்து பாய்ந்து சென்று மீள் கின்றன. அதைப் பார்க்கும்போது, 'அந்தப் பயம் அவளை விட்டு என்றும் நீங்காமல் இருக்கட்டும்!' என்று எனக்கு வாழ்த்தத் தோன்றுகிறது - ஆம்; அந்த அழகிலே நான் அவ்வளவு தூரம் சொக்கி விடுகிறேன்! - அவளுடைய

தளிர்க்கரங்களின் ஒன்றிலே அந்த விளக்கு ஒளிர்ந்து கொண்டிருக்கிறது; இன்னொரு கரமோ புடவைத் தலைப்பை இழுத்து அந்த விளக்குக்கு முன்னால் பிடித்துக் கொண்டிருக்கிறது - ஏன்? - அந்த விளக்கைச் சமூக மென்னும் சூறைக் காற்றிலிருந்து காப்பாற்றவா? - அப்படி யானால் அவளுடைய எண்ணம் ஈடேற வேண்டுமே!

எப்படி ஈடேறும்? - ஒருவேளை பெற்றோர் அந்த விளக்கைப் பிடுங்கிக் கீழே எறிந்துவிட்டால்? - பெரியோர் ஓடோடியும் வந்து அதை ஊதி அணைத்து விட்டால்?

ஐயோ, அதற்குப் பின் என்னுடைய வாழ்க்கை! - என்றும் இருண்ட வாழ்க்கையாகவே இருந்துவிட வேண்டியதுதானா?

'பொய் சொல்வது பாவம்' என்று உலகம் பயமுறுத்து கிறது - ஆனால், அதே உலகம் உண்மையைச் சொல்லிக் காதலை வளர்க்க எங்களை அனுமதிக்கிறதா?

எனவே, காதல் வசப்பட்டுவிட்ட நாங்கள் எடுத்ததற் கெல்லாம் பொய் சொல்கிறோம் - ஏன், எங்கள் காதல் வளர்வதற்காக; அந்தக் காதலில் நாங்கள் ஒருவரை யொருவர் உள்ளது உள்ளபடி அறிந்து உயிர் வாழ்வதற் காக!

இதைக் குற்றம் என்று சொல்லும் உலகம், 'நீங்கள் வாழ வேண்டாம்; செத்துப் போங்கள்!' என்றாவது சொல்லித் தொலையட்டுமே!

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் 'டாண் டாண், டாண்' என்று ஒலித்து மணி மூன்று என்பதை எனக்கு அறிவித்தது - அவ்வளவுதான்; அவசர அவசரமாக எழுந்து முகத்தை அலம்பிக் கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கி நடந்தேன்.

மனத்தில் இனந்தெரியாத மகிழ்ச்சி; அர்த்தமில்லாத அச்சம் - இரண்டும் ஒன்றாய்க் கலந்ததும் ஏதோ ஒருவித மான இன்பம்! - எதிரே வருபவர்களைக்கூட ஏறெடுத்துப் பார்க்காமல் சிறிது தூரம் 'விறு விறு' என்று நடப்பேன். பிறகு, ஒரு காரணமுமின்றித் திரும்பிப் பார்ப்பேன். பின்னால் வருபவர்களை நோக்கி என் கண்கள் ஊடுருவிச் செல்லும் ஏனோ?

இருவரும் தனிமையில் சந்திக்கப் போகிறோம் - 'என்ன பேசப் போகிறோமோ?' என்று என் மனம் ஒரு கணம் நினைக்கும். அடுத்த கணம், 'அந்தக் கவலை நமக்கெதற்கு, அவளே முதலில் பேச்சை ஆரம்பித்து வைப்பாள்?' என்று தானே தீர்மானித்துக்கொள்ளும்.

இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது? - ஒன்றுமில்லை யல்லவா? - எனினும் காணாத எதையோ கண்டு விட்டவை போல என் கண்கள் மலரும்; இதழ்கள் விரியும் - இதயத்தோடு இதயம் ஒன்றித்தான்.

ஆஹா! - இந்தக் கள்ளக் காதலில் உள்ள இன்பத்தைக் காணும்போது கல்யாணத்தைப் பற்றிக் கனவு கூடக் காணாமல் இருந்துவிடலாம் போலிருக்கிறதே!

எண்ணத்தில் இனித்த பெண்ணுடன் கண்ட இந்த இன்பப் போதையிலே, 'பாரிஸ் கார்னர்' வரை சென்று விட்ட பிறகு தான் 'சென்ட்ரல் ஸ்டேஷ'னைக் கடந்து வந்து விட்டோம் என்ற நினைவு என் கவனத்திற்கு வந்தது. அசட்டுச் சிரிப்புடன் அவசர அவசரமாகத் திரும்பினேன். அவள் வந்தாள்; என்னைக் கண்டதும் முதல் தடவையாக அவள் 'மோன நகை' புரிவதை விட்டு 'முத்து நகை' புரிந்தாள்.

அந்த நகைக்கு இந்த உலகத்தில் ஈடேது, இணைதான் ஏது?

அடுத்த கணம் அவள் கண்ணால் அழைத்தாள்; காந்தக் கல்லைக் கண்ட ஊசி போல என்னை ஏதோ ஒரு சக்தி உந்தித் தள்ள, நான் அவள் நிற்குமிடத்தை அடைந்தேன். அவள் அங்கிருந்த ஒரு 'ரிக்ஷாவாலா'வைக் கூப்பிட்டாள்; அவன் வண்டியுடன் விரைந்தோடி வந்து அவளுக்கு முன்னால் நின்றான்.

நிலையில்லாத உயிரின்மீது அவனுக்கு ஏன்தான் அவ்வளவு ஆசையோ, தெரியவில்லை - இல்லையென்றால் மனிதனாய்ப் பிறந்த அவன் ஏன் மாட்டின் தொழிலை மேற்கொண்டிருக்கப் போகிறான்? - மனிதர் நோக மனிதர் பார்க்கும் சமுதாயத்தைத்தான் அவன் ஏன் சும்மா விட்டிருக்கப் போகிறான்?

அந்த ஜீவனிடம் 'சில புண்ணியாத்மாக்க'ளைப் போல இரக்கங் காட்ட என் மனம் இடங் கொடுக்கவில்லை - அப்படிக் காட்டுவது ஆட்டுக்குட்டியிடம் ஓநாய் இரக்கங் காட்டுவது போலாகுமல்லவா? - ஆகவே, அந்தப் பக்கமாக அப்போது ஓடிக்கொண்டிருந்த டிராம் வண்டியில் நான் தொத்திக்கொண்டு, அவளையும் வந்து ஏறிக்கொள்ளும்படி என் கண்ணால் அழைத்தேன்.

என்னுடைய அழைப்பை அவள் தட்டவில்லை; ஏறிக் கொண்டாள். இருவரும் திருவல்லிக்கேணியில் இறங்கி, கடற்கரையை நோக்கி நடந்தோம்.

''அநேகமாக எல்லாக் கதாநாயகர்களுக்கும் கடற் கரையில்தானே காதல் உதயமாகியிருக்கிறது? நம்முடைய காதலும் அங்கேயே உதயமாகட்டுமே!'' என்றாள் அவள்.

''அதுதான் ஆஸ்பத்திரியிலேயே உதயமாகி விட்டதே!'' என்றேன் நான்.

''ரொம்ப அழகுதான்? - போயும் போயும் காதல் ஆஸ்பத்திரியில்தானா உதயமாக வேண்டும்?'' என்றாள் அவள்.

நான் சிரித்துவிட்டு, ''சிறையில் இருந்தபோது எனக்கு நீ ஏன் கடிதங்கூட எழுதவில்லை?'' என்று கேட்டேன்.

''அதை நீங்கள் எதிர்பார்த்தீர்களா, என்ன?'' என்று அவள் திடுக்கிட்டுக்கேட்டாள்.

''எதிர்பார்க்காமல் கூட இருந்திருக்க முடியுமா?''

''எனக்குக் கடிதம் எழுதவேண்டுமென்று ஆசைதான். ஆனால், உங்கள் அமைதியை அது குலைத்து விடுமோ என்று பயந்து பேசாமல் இருந்துவிட்டேன்.''

''என்று நீ 'என்னை மறவாதீர்' என்று சொல்லி விட்டுப் போனாயோ, அன்றேதான் என் அமைதி குலைந்து விட்டதே!''

''அப்படியானால் நான் குற்றவாளிதான்!''

''நீ மட்டுமென்ன, நானும் குற்றவாளிதான்!''

''அது சரி, உங்கள் மாமாவின் குடும்பம் சோம்பேறிக் குடும்பமோ?''

இந்தக் கேள்வி என்னைத் தூக்கி வாரிப் போடுவது போலிருந்தது. ஒன்றும் புரியாமல், ''ஏன், இல்லையே?'' என்றேன்.

''பின், பரம்பரை பரம்பரையாகவே பணக்காரக் குடும்பமோ?''

''ஆமாம்.''

''அதைத்தான் நானும் சொல்கிறேன் - சோம்பேறிக் குடும்பம் என்றால் என்ன, பணக்காரக் குடும்பம் என்றால் என்ன? - இரண்டும் ஒன்றுதானே?''

அவள் சிரித்தாள்; நானும் சிரித்தேன்.

''ஆமாம், உங்கள் மாமாவின் மகன் ஒருவன் ஒரு வேலையும் செய்யாமல் ஊரைச் சுற்றிக் கொண்டிருக் கிறானாமே, உண்மைதானா?''

''இருக்கலாம்; தலைமுறை தலைமுறையாகவே அவன் குடும்பத்தில் யாரும் வேலை செய்வதில்லை. அதைப் பின்பற்றி அவனும் வேலை செய்யாமல் திரிந்துகொண் டிருக்கலாம் - ஏன், அவனுக்கென்னவாம்?''

''அவனுக்கு ஒன்றுமில்லை; அவனால் உங்கள் தங்கை சித்ராதான் அவதிப்படவேண்டியிருக்கிறது!''

''என்ன அவதி?''

''அடிக்கடி அவன் அவளிடம் விளையாட வந்துவிடு கிறானாம் - அந்த விளையாட்டு அவளுக்கு விரசமாகப் படுகிறது; அவனுக்கோ சரசமாகப் படுகிறது!''

''ஏன்; மாமாவும் மாமியும் வீட்டில் இல்லையா?''

''இருந்து என்ன பிரயோசனம்? - அவர்கள், 'உன் மாமன்தானேடி, சும்மா விளையாடட்டுமே!' என்கிறார் களாம்.''

''அக்கிரமமாகவல்லவா இருக்கிறது!''

''அந்த அக்கிரமம் நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறதாம். அதற்கேற்றாற்போல் அப்பாவும் அம்மாவும் அவன் கட்சியில் சேர்ந்துகொண்டு, 'தொட்டில் எல்லாம் போய் விடுமோ? புருஷன் வாடையே படாமல் இருந்துவிடு வாயோ?' என்றெல்லாம் சொல்லி, மேலும் மேலும் அவள் பொறுமையைச் சோதித்துக் கொண்டே இருக் கிறார்களாம் - வேதனை தாங்காமல் அழுதால், நீலி! எத்தனைபேர் தலையை வாங்கிவிட்டு இல்லையென் பாயோ?' என்கிறார்களாம் - 'இந்த நரகத்திலிருந்து உன்னால் என்னை விடுதலை செய்ய முடியாதா?' என்று அவள் இரண்டு நாட்களுக்கு முன்னால் எனக்குக் கடிதம் எழுதியிருந்தாள். நான் என்ன செய்வதென்று தெரியாமல் தவித்துக்கொண்டிருந்தேன் - நல்ல வேளையாக நீங்கள் வந்து விட்டீர்கள்!''

இதைக் கேட்டதும் என் மனம் எப்படியிருந்திருக்கும்? பரபரப்புடன் எழுந்து நின்று, ''சாந்தினி, இனி ஒரு நிமிஷங்கூட என்னால் இங்கே தாமதிக்க முடியாது!'' என்றேன்.

''ஆத்திரப்படாதீர்கள்! - அசம்பாவிதமாக இதுவரை ஒன்றும் நடந்துவிடவில்லையென்றும், அப்படி ஏதாவது நடப்பதற்குள், தான் அந்த இடத்தை விட்டு வெளியேறி விடுவது நல்லதென்றும் அவளே எழுதியிருக்கிறாள். மேலும், அவர்களோ, உங்களுக்கு உறவினர்களாயிருக் கிறார்கள். அவசரப்பட்டு நீங்கள் அவர்களை ஒன்றும் செய்துவிட முடியாது - இந்த விஷயத்தில் சித்ரா சொல்வதுதான் சரி; அவள் சொற்படி நீங்கள் உடனே சென்று அவளை இங்கே அழைத்து வந்துவிடுங்கள். அதற்குள் உங்கள் வீட்டைக் காலி செய்து வைக்கும்படி அங்கே சென்றதும் என் அப்பாவுக்கு நீங்கள் ஒரு கடிதம் எழுதி விடுங்கள் - நடந்ததைப் பற்றிச் சிந்திப்பதைவிட இனி நடக்கப்போவதைப் பற்றிச் சிந்திப்பதுதான் நல்லது!'' என்றாள், அவளும் என்னோடு எழுந்து நின்றுகொண்டே.

எனக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை - அப்போது என் உள்ளத்தைப் பிரதிபலிப்பது போலிருந்த அலைகடலை வெறித்துப் பார்த்த வண்ணம் நான் பெருமூச்சு விட்டேன்.

''இந்தாருங்கள்!'' என்று சொல்லி, அவள் என் கைக்குள் எதையோ சுருட்டி வைத்தாள் - என்னவென்று பார்த்தேன்; ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்கள் என் கைக்குள் இருந்தன.

''தீபாவளியின்போது எனக்குப் பிடித்த புடவையாகப் பார்த்து எடுத்துக்கொள்ளும்படி அப்பா இருநூறு ரூபாய் கொடுத்தார். அதில் சமயத்துக்கு உதவட்டும் என்று ஐம்பது ரூபாயை எடுத்து வைத்திருந்தேன் - அது இப்போது உதவிற்று!'' என்றாள் அவள்,

''சாந்தினி, நீ எனக்காக எவ்வளவோ செய்திருக்கிறாய்; இன்னும் செய்கிறாய், இதற்கெல்லாம் கைம்மாறாக உனக்கு நான் என்ன செய்யப் போகிறேனோ?'' என்றேன் நான்.

''உங்கள் இதயத்தில் எனக்குக் கொஞ்சம் இடங் கொடுங்கள், போதும்!'' என்றாள் அவள், எங்கேயோ பார்த்தபடி.

நான் அவளுடைய முகத்தைத் திருப்பி, ஏதோ சொல்ல முயன்றேன். ஆனால் வார்த்தைக்குப் பதில் கண்ணீர்தான் கசிந்தது.

'களுக்'கென்று சிரித்தபடி என் கண்ணீரைத் துடைத்துவிட்டு, ''போய் வாருங்கள்!'' என்றாள் அவள்.

நான் தயங்கினேன்; அவள் 'கலகல'வென்று சிரித்த வண்ணம் என் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டே பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தாள்.

# 9. சிவகுமார லீலை!

அன்றிரவு ரயில் ஓடுவதாகவே எனக்குத் தோன்ற வில்லை; சித்ராவைப் பார்ப்பதற்காக நான்தான் விழுந் தடித்துக்கொண்டு ஓடுவது போல் எனக்குத் தோன்றிற்று. அடுத்தநாள் காலை என் உள்ளத்தைச் சூழ்ந்திருந்த இருள் விலகாவிட்டாலும், உலகத்தைச் சூழ்ந்திருந்த இருள் விலகிவிட்டது. பரபரப்புடன் சோளகம்பட்டி ஸ்டேஷனை விட்டு இறங்கி, செய்யாமங்கலத்தை நோக்கி விரைந்தேன். அந்தக் கிராமத்தில்தான் குற்றாலலிங்கம் கொலு வீற்றிருந் தார். மணிமுடி தரிக்காத அந்த மன்னரின் ஆட்சியும் அங்கேதான் நடந்து கொண்டிருந்தது.

ஸ்டேஷனை விட்டு ஒரு பர்லாங் தூரங்கூடப் போயிருக்க மாட்டேன் - ''ஐயோ, என்னடி செய்வேன்?'' என்ற தீனக்குரல் என் காதில் விழுந்தது; அதைக் கேட்ட பிறகு என்னால் மேலே ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. திரும்பிப் பார்த்தேன்; எனக்குச் சற்றுத் தூரத்தில் ஓர் இளம் பெண் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்து கிடந்தாள். அவளுக்குப் பக்கத்தில் முதியவள் ஒருத்தி நின்று தவித்துக்கொண்டிருந்தாள். அவளுடைய கையில் உறங்கிக்கொண்டிருந்த பச்சிளங் குழந்தை ஒன்று எந்தவிதமான சலனமும் இல்லாமல் புன்னகை பூத்துக் கொண்டிருந்தது - நான் அவர்களை நெருங்கினேன். என்னைக் கண்டதும் அந்த முதியவள் திடுக்கிட்டாள்; பிறகு கையிலிருந்த குழந்தையைக் கீழே கிடத்திவிட்டு மூர்ச்சையுற்றுக் கிடந்த பெண்ணைத் தூக்கித் தன் தோளின் மேல் சாய்த்துக்கொண்டாள்.

''என்ன உடம்புக்கு?'' என்று விசாரித்தேன்.

''ஒன்றுமில்லை...'' என்று இழுத்துக்கொண்டே, அவள் என்னை அச்சத்துடன் பார்த்தாள்; காரணம் என்ன என்று தெரியாமல் நான் திகைத்தேன். அவள் என்னைப் பொருட்படுத்தாமல், ''செங்கமலம், செங்கமலம்!'' என்று நாலைந்து முறை தன் தோளின்மேல் கிடந்த பெண்ணைக் கூப்பிட்டுப் பார்த்தாள்; பதில் இல்லை.

பழையபடி அந்தப் பெண்ணைக் கீழே கிடத்திவிட்டு அவள் ஸ்டேஷனை நோக்கி விரைந்தாள்.

''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

அவள் 'திருதிரு'வென்று விழித்துக்கொண்டே ''ஒரு சோடாவாவது வாங்கிக்கொண்டு வரலாமென்று போகிறேன்!'' என்று தயங்கித் தயங்கிச் சொன்னாள்.

''நீங்கள் இங்கேயே இருங்கள்; நான் வாங்கிக் கொண்டு வருகிறேன்!'' என்று சொல்லிவிட்டு ஓடினேன்.

திரும்பி வருவதற்குள் குழந்தை 'வீல், வீல்' என்று கத்த ஆரம்பித்துவிட்டது.

என்னிடமிருந்த சோடாவை வாங்கி அந்தப் பெண்ணின் வாயில் கொஞ்சங் கொஞ்சமாக ஊற்றினாள் முதியவள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் மூர்ச்சை தெளிந்து எழுந்த செங்கமலம், ''அம்மா!'' என்று ஈனஸ்வரத்தில் இழுத்தாள்.

''அம்மாவுமாச்சு, ஆட்டுக்குட்டியுமாச்சு! - இந்தா, இதை நீயே குடி!'' என்று 'பாட்டி'லை அவளிடம் கொடுத்து விட்டுக் கீழே கிடந்த குழந்தையைத் தூக்கினாள் தாயார்.

''இனிமேல் என்னால் ஓர் அடிகூட எடுத்து வைக்க, முடியாது, அம்மா!'' என்றாள் செங்கமலம்.

''முடியாவிட்டால் இங்கேயே இரு!''

''ஏன் அம்மா, நீகூட என்னிடம் இரக்கங் காட்ட மாட்டாயா?'' என்று கேட்டுக்கொண்டே தலை நிமிர்ந்த செங்கமலம், என்னைக் கண்டதும் திடுக்கிட்டுத் தன் மேலாக்கை இழுத்துப் போர்த்திக்கொண்டாள்.

தாயார், குழந்தையை அவளிடம் கொடுத்துவிட்டு, ''எமனே உன்னிடமும் உன் அழகான குழந்தையினிடமும் இரக்கங் காட்டியிருக்கும் போது நான் காட்டாமல் இருக்க முடியுமா?'' என்றாள்.

அவள் கண்களில் நீர் துளித்தது. நான் ஒன்றும் புரியாமல், ''விஷயத்தைச் சொல்லுங்கள்?'' என்றேன்.

செங்கமலத்தின் தாயார் சிரித்தாள்; அவளோடு அவள் கண்ணீரும் சிரித்தது.

நான் திடுக்கிட்டு, ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்றேன்.

"உங்களை ஒருவர் முந்திக்கொண்டு விட்டார்; அதற்காகத்தான் சிரித்தேன்!" என்றாள் அவள்.

"அப்படியென்றால்...?"

"நீங்கள் இப்போது இரக்கங்காட்டுகிறீர்களல்லவா? - அதே இரக்கத்தை இரண்டு வருடங்களுக்கு முன்னால் இந்த அப்பாவிப் பெண்ணிடம் ஒருவர் காட்டி விட்டார். அதன் பலன்தான் இந்தக் குழந்தை."

"நீங்கள் என்னைப் பற்றித் தவறாக நினைக்கிறீர்கள்..."

"ஆமாம்; முதலில் அவரும் அப்படித்தான் சொன்னாராம்!"

எனக்கு வேதனையாயிருந்தது - இதற்குள் "அம்மா!" என்று இடைமறித்தாள் செங்கமலம்.

"என்ன, சொல்லித் தொலையேன்?" என்று அலுத்துக் கொண்டாள் தாயார்.

"முதலில் என்னைக் கொன்றுவிடு, அம்மா! - பிறகு யாரிடம் வேண்டுமானாலும் என் கதையைச் சொல்லு?" என்றாள் அவள்.

"இனிமேல் உன்னைக் கொன்றால் என்ன, கொல்லா விட்டால்தான் என்ன? - கெட்ட பால் நல்ல பாலாகப் போவதில்லையல்லவா?" என்றாள் தாயார்.

நான் பொறுமையிழந்து, "நீங்கள் இருவரும் இப்படி மனம் உடைந்து பேசிக்கொள்வதற்குக் காரணமாயிருந்த அந்தக் கிராதகன் யார்?" என்று கேட்டேன்.

அவ்வளவுதான்; "உங்களுடைய அருமை மைத்துனன் தான் அந்தக் கிராதகன்!" என்றாள் செங்கமலத்தின் தாயார் ஆத்திரத்துடன்.

"என்ன, நீங்கள் சிவகுமாரனையா சொல்கிறீர்கள்?"

"ஆமாம். அந்தச் செல்வக்குமாரனைத்தான் சொல்கிறேன்!"

அவ்வ ாவுதான்; சித்ராவை நான் நினைத்துக்கொண்டு விட்டேன் - 'ஐயோ, அவளுடைய கதி?' என்று நினைக்கும் போதே என் உடல் முழுவதும் ஒரு கணம் நடுங்கி ஓய்ந்தது. அதை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "அப்படியானால் என்னை இதற்கு முந்தியே உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன்.

"தெரியாமலென்ன, நன்றாய்த் தெரியும்!"

"உங்களை எனக்குத் தெரியவில்லையே?"

"எப்படித் தெரியும்? - நான் வேலைக்காரிதானே, எதற்காக நீங்கள் என்னை 'யார்?' என்று கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கப் போகிறீர்கள்!"

"நீங்கள் எங்கே வேலையாயிருந்தீர்கள்?"

"வேறு எங்கேயாவது வேலையாயிருந்தால்தான் இந்தக் கதிக்கு நாங்கள் ஆளாகியிருக்க மாட்டோமே? உங்கள் மாமா வீட்டில் வேலையாயிருந்ததால் வந்த ஆபத்துத்தான் இது!"

எனக்கு விஷயம் ஒருவாறு புரிந்துவிட்டது. "எந்த வீட்டில் வேலையாயிருந்தாலும் முதலிலேயே கொஞ்சம் எச்சரிக்கையாயிருந்திருக்க வேண்டுமல்லவா?" என்றேன்.

"நான் மட்டும் எச்சரிக்கையுடன் இருந்தால் போதுமா? இவளுமல்லவா எச்சரிக்கையுடன் இருந்திருக்க வேண்டும்? - இவள்தான் அதெல்லாம் ஒன்றும் வேண்டியதில்லை என்று சொல்லிவிட்டாளே? - ஏனென்றால், இவர்களுக்குள் காதல் எங்கிருந்தோ வந்து முளைத்துவிட்டதாம்; அந்தக் காதலுக்கு ஜாதி பேதம் கிடையாதாம்; ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் கிடையாதாம்; அது எல்லாவற்றையும் கடந்ததாம்;

எப்பொழுதும் அழியாததாம் - இப்படியெல்லாம் அவன் சொன்னானாம். அப்பேர்ப்பட்ட காதல் இந்த அருமை மகன் தோன்றினானோ இல்லையோ, உடனே அழிந்து விட்டது?'' என்றாள் அவள்.

இந்தச் சமயத்தில், ''என்ன இருந்தாலும் அவர் என்னவோ நல்லவர்தான், அம்மா!'' என்றாள் செங்கமலம்.

''யார் இல்லை என்கிறார்கள்? - நல்லவர்களாயிருந்த தால் தான் நாம் இருந்த குடிசையைக்கூடப் பிய்த்து எறிந்து விட்டார்கள்!''

''அவரா வந்து பிய்த்து எறிந்தார்?''

''அவன் வந்து பிய்த்து எறியவில்லை. அவன் வீட்டு ஆட்கள் வந்து பிய்த்து எறிந்துவிட்டார்கள்!''

''அப்பா இருக்கும் வரை அவருடைய வீடு என்று எப்படி அம்மா சொல்ல முடியும்?''

''அதற்கு முதலிலேயே அவன் அப்பாவைக் கேட்டுக் கொண்டு வந்து உன்னைக் காதலித்திருக்க வேண்டும். இல்லையென்றால் அப்பாவைக் கேட்காமல் காதலிப் பதற்கு இருந்த தைரியம் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வதற்கும் இருந்திருக்க வேண்டும். அவனுக்கென்ன, இன்னும் எத்தனை பேரை வேண்டுமானாலும் காதலிக் கலாம்; இன்னும் எத்தனை பேரை வேண்டுமானாலும் கைவிடலாம். உன்னால் முடியுமா?''

''ஏன் முடியாது? - எல்லாம் முடியும்!'' என்றேன் நான்.

''எப்படி முடியும்? - உலகம் சிரிக்காதா?'' என்றாள் அவள்.

''உலகம் எல்லோரையும் பார்த்தா சிரிக்கிறது? செங்கமலத்தைப் போன்றவர்களை மட்டும் பார்த்துத்

தானே சிரிக்கிறது? சிவகுமாரனைப் போன்றவர்களைப் பார்த்துச் சிரிக்கவில்லையே? - அப்படிப்பட்ட வஞ்சக உலகத்துக்கு நீங்கள் ஏன் அஞ்ச வேண்டும்?''

''வேறு வழி? - இங்கே ஆணுக்கு ஒரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியுமாக வைத்துக்கொண்டிருக்கும் வரை எங்களைப் போன்றவர்கள் மானத்தைக் காத்துக் கொள்ளச் சாவைத்தானே தழுவவேண்டியிருக்கிறது!''

''ஆண்கள் மானத்தைக் காத்துக் கொள்ளச் சாவைத் தழுவாமலிருக்கும் போது பெண்கள் மட்டும் ஏன் தழுவ வேண்டும்? அதைப் பற்றி அவர்களுக்கு இல்லாத கவலை உங்களுக்கு மட்டும் என்னத்துக்கு?''

''ஊராரின் வாயை மூடத்தான்!''

''ஊரார், ஊரார், ஊரார்! - அவர்கள் வேறு, நாம் வேறா? நீங்களும் நானும், இன்னும் உங்களைப் போன்ற வர்களும், என்னைப் போன்றவர்களும் சேர்ந்தவர்கள் தானே ஊரார்? - அப்படியிருக்கும்போது நமக்கு நாமே பயந்து சாவதில் என்ன அர்த்தமிருக்கிறது? காலமெல்லாம் ஊராருக்கும் உலகத்தாருக்கும் அஞ்சி நாம் செத்துக் கொண்டிருந்தால் வாழ்வது தான் எப்போது?''

''உங்களைப்போல் ஊரில் ஒரு சிலர் இருக்கலாம்; மற்றவர்கள்...''

''மற்றவர்களை நீங்கம் மனம் வைத்தால் மாற்றி விடலாம். அதற்கு உங்களைப் போன்றவர்கள் துணிந்து காரியத்தில் இறங்க வேண்டும். ஆனால் அந்தக் காரியத்தை நீங்கள் ரகசியமாக செய்யக் கூடாது; பகிரங்கமாகச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் ஊரும் உலகமும் உங்களைப் பார்த்து வெட்கித் தலை குனியும்; விபசாரி என்ற வீண் பழியும் நாளடைவில் மறைந்தொழியும்; சிவகுமாரனைப் போன்ற சண்டாளர்களும் சீர்திருந்தி விடுவார்கள்!''

''இவ்வளவு தூரம் பேசுகிறீர்களே, நான் உங்களை ஒன்று கேட்கட்டுமா?''

''கேளுங்கள்!''

''இந்தச் செங்கமலத்தை உங்கள் தங்கையாகப் பாவித்துக் கொள்ளுங்கள் - சிவகுமாரனால் வஞ்சிக்கப் பட்ட இவளை நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் உறவினர்கள் என்ன செய்வார்கள்? - தங்களிடமிருந்து தள்ளி வைத்துவிடுவார்கள். அதே மாதிரி நீங்கள் சிவகுமாரனைத் தள்ளி வைத்துவிடுவீர்களா?''

''கட்டாயம் தள்ளி வைத்துவிடுவேன்!''

''அப்படியானால் என்னுடன் வாருங்கள் - இந்தக் குழந்தையை மட்டுமாவது நான் அவனிடம் ஒப்புவித்து விட்டுத் தான் வரப் போகிறேன் - இதனால் என்ன ஆனாலும் சரி!'' என்று அவள் கிளம்பினாள்.

அப்போது தற்செயலாக அந்த வழியே கூண்டு வண்டி ஒன்று வந்துகொண்டிருந்தது. நான் வண்டிக்காரனைக் கை தட்டி அழைத்து, ''செய்யாமங்கலத்துக்கு வருகிறாயா?'' என்றேன்.

''வரேனுங்க!'' என்றான் அவன்.

எல்லோரும் வண்டியில் ஏறிக்கொண்டோம். சிறிது தூரம் சென்றதும் வண்டிக்காரன் என்னை நோக்கி, ''இது உங்களுக்குத் தலைச்சன் பிள்ளைங்களா?'' என்றான்.

நான் தயங்கவில்லை; ''ஆமாம்'' என்று சொல்லி வைத்தேன்.

''திருச்சி ஆஸ்பத்திரியிலேயிருந்து வராப்போல இருக்குது!'' என்று தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்ட வண்ணம், 'ஹை, ஹை!' என்று அவன் மாட்டை விரட்டினான்.

# 10. செங்கமலத்தின் யோசனை!

மேடும் பள்ளமும் நிறைந்த பாதையிலே வண்டி போராடிய வண்ணம் சென்று கொண்டிருந்தது. செங்கமலம் திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவள் போல், "அம்மா, இந்தக் கோலத்துடன் நாம் அங்கே போக வேண்டாம், அம்மா!" என்றாள்.

"ஏண்டி?" என்று எரிந்து விழுந்தாள் தாயார்.

"என்ன இருந்தாலும் ,அவர்கள் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; நாம் இந்தக் கோலத்துடன் அங்கே போய் அவர்களுடைய கௌரவத்தை ஏன் குலைக்க வேண்டும்?"

"அடடடா, அவர்கள் மட்டும் நம்முடைய கௌரவத்தைக் குலைக்கலாமா?"

"அவர்கள்தான் மோசமாக நடந்து கொண்டார்களென்றால் நாமுமா மோசமாக நடந்துகொள்ள வேண்டும்? என்னவோ, நடந்தது நடந்துவிட்டது; அதை ஏதாவது ஒரு நல்ல வழியில் திருத்திக்கொள்ளப் பார்ப்போமே?"

"அது என்னடி, நல்ல வழி?"

"எல்லோருமாகச் சேர்ந்து அங்கே போகவேண்டாம், அம்மா! - நானும் நீயும் இந்தக் குழந்தையுடன் எங்கேயாவது இறங்கிவிடுவோம். முதலில் இவர் மட்டும் அங்கு போய் நம்முடைய நிலைமையை எடுத்துச் சொல்லட்டும். பிறகு என்ன ஆகிறதென்று பார்த்துக்கொண்டு, மேலே செய்ய வேண்டியதைச் செய்யலாம்" என்றாள் அவள்.

''என்ன தங்கமான குணம்!'' என்று நான் வியந்தேன்.

அதே சமயத்தில் வண்டிக்காரன் திரும்பிச் செங்கமலத்தின் கழுத்தைச் சந்தேகக் கண்களுடன் பார்த்தான். பிறகு, ''சரிதான், சரிதான்!'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

''என்ன சரிதான்?'' என்று நான் எரிந்து விழுந்தேன்.

''ஒண்ணும் இல்லிங்க; வண்டி ஊருக்குள்ளே நொழைஞ்சிப்போச்சுன்னு சொன்னேன்!'' என்று அவன் பேச்சை மாற்றினான்.

அதற்குள், ''அதோ பார் அம்மா, அமிர்தம் அத்தை வீடு; நாம் அங்கே இறங்கி விடுவோமா?'' என்றாள் செங்கமலம்.

''அது என்னமோ, உன் இஷ்டம்!'' என்றாள் அவள் தாயார்.

வண்டி அமிர்தம் வீட்டு வாசலில் நின்றது; இருவரும் இறங்கிவிட்டனர். அங்கிருந்து குற்றாலலிங்கம் பிள்ளையின் வீடு சுமார் ஒரு பர்லாங்கு தூரத்தில் இருந்தது. நானும் அவர்களுடன் வண்டியை விட்டிறங்கி, அவருடைய வீட்டை நோக்கி நடந்தேன்.

வாசலில் நின்று கொண்டிருந்த மாமா என்னைக் கண்டதும் சிரித்துக்கொண்டே, ''என்னப்பா, கடைசியிலே வெறுங்கையோடு திரும்பி வந்திருக்கிறாயே?'' என்றார்.

''என்ன கொண்டு வரவேண்டும் என்கிறீர்கள்?'' என்றேன் நான்.

''சுயராஜ்யத்தை வாங்கிக் கொண்டுதான் திரும்பி வருவாயாக்கும் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்!'' என்றார் அவர்.

''அது என்ன, சிறையில் விலைக்கு விற்கும் என்று நினைத்துக் கொண்டீர்களா?'' என்று கேட்டுக் கொண்டே நான் உள்ளே நுழைந்தேன்.

அப்போது, ''அழகான தங்கையைப் பார்த்துவிட்டுப் போக வந்துவிட்டானாக்கும்!'' என்று மாமி சமையல் அறையில் இருந்தபடி முனகியது என் காதில் விழுந்தது.

''என்னுடைய அழகான தங்கையை மட்டுமா, உங்களுடைய அழகான பிள்ளையையும் பார்த்துவிட்டுப் போகலாமென்று தான் வந்திருக்கிறேன்!'' என்று நானும் பதிலுக்கு முனகிக்கொண்டே அங்கிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன்.

நான் அவ்வாறு முனகியது எனக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த என் மாமாவின் காதில் விழுந்துவிட்டது. ''ஏன், அவனுடைய அழகுக்கு என்னடா குறைவு?'' என்று கேட்டுக் கொண்டே, அவர் எனக்கு எதிர்த்தாற் போலிருந்த நாற்காலியில் அமர்ந்தார்.

''ரொம்ப அழகுதான்; ஊர் சிரிக்கிறது!''

''ஏன் சிரிக்கிறது. என்னத்துக்காகச் சிரிக்கிறது?''

''ஓர் அபலையின் உயிருக்கு உலை வைத்ததற்காக!''

''அது யார், அந்த அபலை?''

''ஒன்றும் தெரியாதவர்போல் கேட்கிறீர்களே, அவளுடைய தாயார் கூட இங்கே வேலை செய்துகொண்டிருக்கவில்லையா?''

''ஆமாம், நாலு கழுதைகளோடு ஐந்தாவது கழுதையாக ஏதோ ஒரு கழுதை இங்கே வேலை செய்து கொண்டு இருந்தது. ஒரு மாதத்துக்கு முன்னால் அந்தக் கழுதையின் வேலை எங்களுக்குப் பிடிக்கவில்லை; விரட்டி விட்டோம் - அதனால் என்ன?''

''ரொம்ப சரி; அவளுடைய மகள் செங்கமலத்தின் வாழ்க்கையை உங்கள் மகன் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட்டானே, அதற்கு என்ன சொல்கிறீர்கள்!''

''என்ன, செங்கமலமா! - அவள் யார் என்று கூட எங்களுக்குத் தெரியாதே? உனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?''

''ஏன் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறீர்கள்? - குடிசையைப் பிய்த்து எறிந்துவிட்டால் குற்றத்தை மறைத்துவிட முடியாது!''

''யாருடைய குடிசையைப் பிய்த்து எறிந்தேன்? என்னுடைய குடிசையை நானே பிய்த்து எறிந்து விட்டேன்! - அவ்வளவுதானே? - அந்தக் கழுதை என் வீட்டில் வேலை பார்க்கும் வரை அதற்கு என்னுடைய குடிசையில் இடங் கொடுத்து வைத்திருந்தேன்; வேலையை விட்டு நீக்கிய பிறகு நான் அதற்கு இடங் கொடுப்பானேன்?''

''பணம் இருந்தால் எது வேண்டுமானாலும் செய்து விடலாம் என்று நினைத்துவிடாதீர்கள்; பழி, யாரையும் விடாது - அந்தப் பழிக்குப் பகவான் தண்டனை அளிக்கும் வரை மக்கள் காத்துக் கொண்டிருக்கும் காலமும் அல்ல, இது!''

''என்னப்பா, என்னவெல்லாமோ பேசுகிறாய்! - எனக்கு ஒன்றுமே புரியவில்லையே?''

''கொஞ்சம் நியாய புத்தியோடு யோசித்துப் பார்த்தால் உங்களுக்கு எல்லாம் புரியும் - ஓர் ஏழைப் பெண்ணுக்கு என்னவெல்லாமோ ஆசை காட்டி, அவளைத் தன் இஷ்டத்துக்குப் பயன்படுத்திக் கொண்ட பின் கை விடுவதை யாரும் சகிக்க மாட்டார்கள் - உடனே அந்தப் பெண்ணைச் சிவகுமாரனுக்குக் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடு செய்யுங்கள்!''

''நல்ல வேடிக்கைதான், இது! - இன்று உங்களுடைய மகன்தான் என்னைக் கெடுத்தான் என்று இவள் வருகிறாள்; நாளைக்கு இன்னொருத்தி வருகிறாள்; அதற்கு

மறுநாள் வேறொருத்தி வருகிறாள் - இப்படியே எங்கெங்கேயோ கெட்டு எத்தனை பேர் வந்தாலும் அத்தனை பேரையும் சிவகுமாரனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட வேண்டியதுதானா? - பேஷ், உன்னுடைய யோசனையே யோசனை, அப்பா! - வழியே போகிற சனியன்களை யெல்லாம் விலைக்கு வாங்கிக்கொள்ள வேண்டுமென்று சொல்கிறாயே?''

''வழியே போகிற சனியனை விலைக்கு வாங்கச் சொல்லவில்லை; வீட்டோடு இருந்த சனியனைத்தான் விலைக்கு வாங்கச் சொல்கிறேன் - நீங்கள் நினைப்பது போல் வேடிக்கை வேடிக்கையாகவும் இல்லையே, வினை யாகவே முடிந்துவிட்டதே! - உங்கள் சிவகுமாரனுக்குச் செல்வக் குமாரன் ஒருவன் பிறந்திருக்கிறான். துரதிர்ஷ்ட வசமாக அவன் செத்துப் போகவுமில்லை; உயிரோடு இருக்கிறான்.!''

''நான் சிவகுமாரனுக்குத்தான் பிறந்தேன் என்று அவன் உன்னிடம் வந்து சொன்னானாக்கும்?''

''இதற்கெல்லாம் நீங்கள் சாட்சியைத் தேடிக் கொண்டிருக்க முடியுமா, என்ன?''

''அப்படியானால் நீ அவளை அருந்ததி என்று ஒப்புக் கொள்வதுபோல் நானும் ஒப்புக்கொள்ள வேண்டுமா? - அவ்வளவு தூரம் என் புத்தி இன்னும் கெட்டுப் போகவில்லை!''

''நீங்கள் இப்படி வாதிப்பது அநியாயமானது, அக்கிரமமானது! சிவகுமாரன் அவளைக் காதலிக்கும் போது, மடு சாட்சி, மலைசாட்சி, இந்திரன்சாட்சி, சந்திரன் சாட்சி என்றெல்லாம் சொல்லியிருப்பான் - அவையெல் லாம் சாட்சி சொல்ல வந்துவிடுமா? - மலையும் மடுவும், சந்திரனும் இந்திரனும் ஒருக்காலும் சாட்சி சொல்ல வரமாட்டார்கள் என்ற தைரியத்தைக் கொண்டுதானே

சிவகுமாரனைப் போன்ற 'காதலர்' தங்களுடைய திருவிளையாடல்களுக்கு அவற்றைச் சாட்சிகளாகத் தேர்ந்தெடுக்கிறார்கள்!''

''ஆமாம், அந்த நாய்களை உனக்கு எப்படித் தெரிந்தது?''

''வழியில் நான் அவர்களுக்கு ஒரு சிறு உதவி செய்ய நேர்ந்தது; அதன் மூலம் தெரிந்து கொண்டேன்.''

''இப்போது அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?''

''அவர்கள் எங்கே இருந்தால் என்ன? முதலில் அவளை உங்கள் மகனுக்குக் கல்யாணம் செய்து வைப்பதாகச் சொல்லுங்கள். பிறகு நான் அவர்களை இங்கே அழைத்து வருகிறேன்!''

''அவள் சிவகுமாரனுக்கு மாலையிட வேண்டுமானால் முதலில் என் உடம்பில் இருக்கும் உயிர் என்னை விட்டுப் போக வேண்டும்!''

''உங்களைப் போலவேதான் உங்களுடைய மகனும் சொல்கிறானோ? - அந்தக் கிராதகனை இங்கே கொஞ்சம் வரச் சொல்லுங்களேன், கேட்டுப் பார்ப்போம்?''

''அவனுக்கென்ன, உனக்குப் பிடித்திருப்பது போல் பைத்தியமா பிடித்திருக்கிறது?'' அந்த நாயின் முகத்தைக் கூட நான் பார்த்ததில்லை' என்றுதான் அவன் அன்றே சொல்லிவிட்டானே!''

''அட பாவி, உனக்காகவா அவள் அவ்வளவு தூரம் பரிந்து பேசுகிறாள்?''

''பரிந்து பேசாவிட்டால் பணக்கார மாப்பிள்ளை எப்படிக் கிடைப்பான்? - உனக்கு உலகம் தெரியாது, அப்பா! - இப்படிப்பட்டவர்களிடம் இரக்கமே காட்டக் கூடாது - போகட்டும்; அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்று எனக்குக் கொஞ்சம் சொல்லேன்? - பாவத்துக்கு

அஞ்சிப் போனால் போகிறதென்று குடிசையைப் பிய்த்து எறிந்ததோடு விட்டால் அவர்கள் இப்படித்தான் வாலை ஆட்டிக் கொண்டிருப்பார்கள். உடனே அவர்களைக் கூண்டோடு கொண்டு போய்ப் போலீஸ் லாக் - அப்பில் அடைத்து விட்டால்தான் தொல்லை தீரும் - அவர்கள் மீதுள்ள குற்றங்களுக்கோ குறைவில்லை - விபசாரம் செய்த குற்றம்; சிசு ஹத்தி செய்ய முயன்ற குற்றம்; கௌரவமான ஒரு மனிதனை அவமதித்த குற்றம்...''

''போதும். நிறுத்துங்கள்! - பணத்தால் சட்டத்தைக் கூட விலைக்கு வாங்கிவிடலாம் என்பதற்காக மனச்சாட்சி யைக் கொன்றுவிடாதீர்கள்!''

''உன்னுடைய உபதேசம் ஒன்றும் எனக்கு வேண்டாம்; இனிமேல் நான் உன்னிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டியதும் ஒன்றுமில்லை - வந்த வேலையைப்பார்!'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு அவர் எழுந்தார். எனக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. ''இனி ஒரு நிமிஷங்கூட இங்கே நான் இருக்க விரும்பவில்லை. சித்ராவைக் கூப்பிடுங்கள்; அவளை அழைத்துக் கொண்டு உடனே நான் சென்னைக்குப் புறப்பட வேண்டும்'' என்றேன்.

''அந்த வெட்கக்கேட்டை ஏன் கேட்கிறாய்? அவள் செத்துப்போயிருந்தால்கூடக் கவலை விட்டது என்று பேசாமல் இருந்திருக்கலாம் - பாவி, வேறுவிதமாக அல்லவா நடந்துகொண்டு விட்டாள்!'' என்று பாகாய் உருகினார் அவர்.

''எவ்விதமாக நடந்துகொண்டு விட்டாள்? உங்களு டைய யோக்கியதைக்கு அவளுடைய யோக்கியதை என்ன குறைந்துவிட்டது?''

''எங்களுடைய யோக்கியதை கிடக்கட்டும், அப்பா! உன் தங்கையினுடைய யோக்கியதையைக் கேள்:

அவளைப் பற்றி ஏற்கெனவே எனக்குச் சந்தேகம் - அடிக்கடி எங்கிருந்தோ அவளுக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருந்தன 'என்ன கடிதம்?' என்று கேட்டால், 'சொந்த விஷயம்' என்பாள். அந்தச் சொந்த விஷயத்தின் பலன் தான் போலிருக்கிறது, நேற்றிரவிலிருந்து அவளைக் காணோம்.''

*''காணவில்லையா!''*

''ஆமாம். சிவகுமாரன் பசி, தூக்கத்தைக்கூட மறந்து அவளைத் தேடு, தேடு என்று தேடியலைகிறான் - அவனை எதிர்பார்த்துக்கொண்டுதான் நான் தெருவில் நின்று கொண்டிருந்தேன்; அப்போதுதான் நீ அந்த நாய்களின் சமாசாரத்தை எடுத்துக்கொண்டு வந்தாய்! - அந்த வயிற்றெரிச்சலில் நான் இதுவரை சித்ராவைப்பற்றி உன்னிடம் ஒன்றுமே சொல்லாமல் இருந்துவிட்டேன்!'' என்றார் அவர்.

எனக்கு விஷயம் விளங்க வெகு நேரம் ஆகவில்லை. சாந்தினி எழுதிய கடிதங்களை யாரோ காதலன் எழுதியதாக இந்த மனிதர் நினைத்துக்கொண்டு விட்டார். அதற்கேற் றாற்போல் இவர்மீதிருந்த வெறுப்பின் காரணமாக அந்தக் கடிதங்களைச் சித்ரா இவரிடம் காட்டாமல் இருந்திருக்க வேண்டும் - தன்னந்தனியாகவே இந்த வீட்டை விட்டுக் கிளம்பிவிடுவதற்கு வேண்டிய தைரியத்தைக்கூட அல்லவா இவர்களுடைய உபத்திரவம் அவளுக்கு அளித்திருக்கிறது! - இவ்வாறு எண்ணி நான் துடித்துக் கொண்டிருந்தபோது. ''என்னப்பா, யோசிக்கிறாய்?'' என்று கேட்டார் அவர்.

''ஓடிப்போன பிறகும் உங்கள் திருக்குமாரனால் அவளை மறக்க முடியவில்லையே, அதைப் பற்றித்தான் யோசிக்கிறேன்!'' என்று வெறுப்புடன் சொல்லிவிட்டு, நான் அங்கிருந்து விர்ரென்று கிளம்பினேன்.

ஒருவேளை சித்ரா தற்கொலை செய்து கொண்டிருப் பாளோ? - சீ சீ, அப்படியெல்லாம் ஒன்றும் நடந்திருக் காது; அவள் சாந்தினியை நம்பிச் சென்னைக்குத்தான் போயிருப்பாள்!

இந்த நம்பிக்கையுடன் செங்கமலம் தங்கியிருந்த வீட்டையடைந்து, நான் அவர்களிடம் நடந்த விஷயத் தைச் சொன்னேன் - 'போலீஸ், லாக் - அப்' என்ற வார்த்தைகளைக் கேட்டதும் அவர்கள் நடுங்கி, "எங்களைப் பட்டணத்திலாவது கொண்டுபோய் விட்டு விடுங்கள்; உங்களுக்குப் புண்ணியமுண்டு" என்றனர், வேறுவழியின்றி நான் அவர்களை அழைத்துக்கொண்டு சோளகம்பட்டி ஸ்டேஷனை நோக்கி விரைந்தேன்.

## 11. அவள் சொன்ன கதை

'கூகுக்' என்று கூவிவிட்டு, ரெயில் பெருமூச்சு விட்டுக் கொண்டே நகர்ந்தது, அத்துடன் சேர்ந்து நானும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன்.

அப்போது ஜன்னலுக்கு வெளியே தலை நீட்டிக் கொண்டிருந்த என்னை நோக்கி, "சாமி, சாமி!" என்று கத்திக்கொண்டே, குடியானவன் ஒருவன் ஓடிவந்தான்.

"யாரைக் கூப்பிடுகிறாய், என்னையா?" என்று நான் அவனை நோக்கிக் கேட்டேன்.

"ஆமாங்க. மிராசுதார் ஐயா இந்தத் தந்தியை உங்கக்கிட்டே கொடுக்கச் சொன்னாருங்க!" என்று ஒரு கவரை அவன் என்னிடம் கொடுத்துவிட்டுச் சென்றான்.

நடுங்கும் கைகளுடன் நான் அதைப் பிரித்துப் பார்த்தேன் - "கவலை வேண்டாம்; சித்ரா இங்குவந்து

சேர்ந்து விட்டாள் - சாந்தினி'' என்று அந்தத் தந்தியில் கண்டிருந்தது.

''விட்டது கவலை!'' என்று நான் திரும்பினேன்; செங்கமலத்தின் தாயார் பீதி நிறைந்த கண்களுடன் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்தாள். ''ஏன் இப்படிப் பயந்து சாகிறீர்கள்? பெட்டியில்தான் நம்மைத் தவிர வேறு யாரும் இல்லையே?'' என்றேன் நான்.

''வேறு யாருக்கும் பயப்படவில்லை; உங்களுக்குத் தான் பயப்படுகிறேன் - நீங்கள் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளக்கூடாது; ஊர் வாயை மூடவே இப்படிச் செய்கிறேன்!'' என்று சொல்லிக்கொண்டே, அவள் அத்தனை நேரமும் மடியில் ஒளித்து வைத்திருந்த தாலிக் கயிற்றை எடுத்தாள்; ஏற்கெனவே அதில் முடிந்து வைத்திருந்த மஞ்சளை ஒரு கணம் பார்த்தாள்; மறுகணம் என்ன காரணத்தாலோ கலங்கிய கண்களைத் துடைத்து விட்டுக்கொண்டு, தன்னையே சிவகுமாரனாகப் பாவித்துக்கொண்டு, செங்கமலத்தின் கழுத்தில் அவள் தாலியைக் கட்டினாள்!

அப்போது அந்த அபலையின் முகத்தில் பிரதிபலித்த வேதனையை என்னால் சகிக்க முடியவில்லை; கண்ணை மூடிக்கொண்டேன் - அடுத்த நிமிஷம் அவள் வாய்விட்டு அழுதது என் காதில் விழுந்தது - கண்ணைத் திறந்தேன்; செங்கமலத்தின் தாயார் 'நக்'கென்று அவள் கன்னத்தில் ஓர் இடி இடித்து, ''என் மானத்தை வாங்காதேடி, என்னைச் சந்தியில் இழுத்து வைக்காதேடி!'' என்றாள் ஆத்திரத்துடன்.

என்னால் பொறுக்க முடியவில்லை. ''அம்மா, இவ்வளவு பெரிய உலகத்தில் நீங்கள் ஒருவர்தான் அந்த ஜீவனிடத்தில் அன்பு காட்டுவதற்கு இருக்கிறீர்கள்; நீங்களும் வெறுத்தால் அவள் என்ன செய்வாள்?'' என்றேன்.

''ஏன், எமலோகத்துக்குப் போகிறது!'' என்றாள் அவள்.

''போகிறேன் அம்மா, போகிறேன்; கட்டாயம் போகிறேன். இனிமேல் நான் இருந்துதான் என்ன பிரயோசனம்? இந்தக் குழந்தையை மட்டும் தயவு செய்து எடுத்துக்கொள்ளுங்கள்; உங்களால் முடியாவிட்டால் இதை வேறு யாரிடமாவது கொடுத்து வளர்த்துக்கொள்ளச் சொல்லுங்கள். எத்தனையோ கஷ்ட நஷ்டங்களுக் கிடையே என்னை வளர்த்ததற்காக இன்னுங் கொஞ்ச நேரம் மட்டும் எனக்காகப் பொறுத்துக்கொள்ளுங்கள் - இருள் கவியட்டும்; பகவான் மீது பாரத்தைப் போட்டு விட்டு நான் ஓடும் ரயிலிலிருந்து கீழே குதித்துவிடுகிறேன். எதிர்பாராத விதமாக நேர்ந்த மரணம் என்று உலகம் சொல்லட்டும்; உங்களுடைய கவலையும் ஒருவாறு தீரட்டும்?'' என்று சொல்லிக்கொண்டே, செங்கமலம் குழந்தையைத் தாயாரிடம் நீட்டினாள்.

''விழுகிறவள் குழந்தையோடுதான் விழுந்து தொலையேன்!'' என்றாள் அவள்.

''சும்மா இருங்கள், அம்மா! மனித இதயம் கண்ணாடி யைப் போன்றது; உடைந்தால் ஒட்டவைக்க முடியாது!'' என்று நான் அவள் வாயை அடக்க முயன்றேன்.

''நீங்கள் ஒண்ணு, நான் சும்மா இருந்தாலும் பார்ப்பவர்கள் சும்மா இருப்பார்களா?''

''அதற்குத்தான் தாலியைக் கட்டித் தொலைத்து விட்டீர்களே?''

''என்னத்தைச் செய்வது, போங்கள்! - தாலி கட்டி விட்டால் மட்டும் போதுமா? அதைப் பார்த்த பிறகாவது அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் சும்மாவா இருந்து விடப் போகிறார்கள்? - அவர்களுக்கு இந்தமாதிரி விஷயங்களில் என்னதான் அக்கறை இருக்குமோ, தெரியவில்லை -

'இவளுடைய புருஷன் எங்கே இருக்கிறான்? என்ன வேலை செய்கிறான்? என்ன சம்பாதிக்கிறான்? எப்போது வருவான்? நீங்கள் எப்படிச் சாப்பிடுகிறீர்கள்?' என்றெல்லாம் குறுக்கு விசாரணை செய்து தொலைப்பார்கள். நமக்கு வரும் ஆத்திரத்தில், 'அவன் எங்கேயோ போய்த் தொலைந்தான்!' என்றால், 'இவள் ஏதோ முறை தவறி நடந்திருக்கிறாள்; அதனால்தான் இவளை அவன் தள்ளி வைத்துவிட்டிருக்கிறான்?' என்று தங்களுக்குள் எல்லாம் தெரிந்தவர்களைப்போலக் 'குசுகுசு'வெனப் பேசிக் கொள்வார்கள் - இதெல்லாம் காதில் விழும்போது நம் மனம் என்ன பாடு படும்? அதற்குத்தான் நான் நினைத்தேன்...''

''என்ன நினைத்தீர்கள்?''

''நம்மை மோசம் செய்த உலகத்தை நாமும் மோசஞ் செய்தால் என்ன என்று நினைத்தேன்!''

அதற்குள் செங்கமலம் குறுக்கிட்டு, ''தயவு செய்து என்னை மட்டும் அதில் சேர்த்துக் கொள்ளாதே, அம்மா!'' என்றாள்.

''போடி, போ! இப்படிச் சொல்ல உனக்கு வெட்கமாயில்லை? இப்போது கற்பைக் கட்டிக் காக்கப் பார்க்கும் நீ, அப்போது கட்டிக் காத்திருந்தால் என்ன?'' என்று அவளை அதட்டினாள் தாயார்.

''என்ன விஷயம்? ஏன் இப்படி ஒருவர் மேல் ஒருவர் எரிந்து விழுகிறீர்கள்?'' என்றேன் நான்.

''சரி அவளை விட்டுவிடுவோம். என்னை மோசஞ் செய்த உலகத்தை நானும் மோசம் செய்யப் பார்த்தேன் என்று வைத்துக்கொள்ளுங்களேன் - நடுவில் நீங்கள் தான் குறுக்கிட்டு...''

''என்ன. நானா குறுக்கிட்டேன்?''

''ஆமாம், இவர்களுடைய அன்பில் விளைந்த அமுதம் - இல்லை; சனியன் இருக்கிறதே, அதைக் கொண்டு போய் அந்த நாசகாரன் வீட்டில் போட்டுவிட்டு வந்து விடுவதென்று நான் இருந்தேன். அதனால் என் உயிரே போவதாயிருந்தாலும் அதற்கு நான் துணிந்திருந்தேன். இதை அவன் தலையில் கட்டிவிட்டால் இவளைப் பிடித்த பீடை விட்ட மாதிரி. அப்புறம் உலகத்தார் முன்னிலையில் இவளும் அசல் கன்னிப் பெண்ணாகக் காட்சியளிக்கலாம்; கல்யாணமும் செய்து கொள்ளலாமல்லவா?''

''அதற்கு நான்தான் தடையாயிருந்தேனாக்கும்?''

''ஒரேயடியாய் அப்படிச் சொல்லி விடுவதற்கும் இல்லை. முதலில் இந்தப் பத்தினித் தங்கம் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லையே? - காதல் மலரைப் போன்றதாம்; அது ஒரே ஒரு முறைதான் மலருமாம் - இப்படியெல்லாம் என்னவெல்லாமோ சொல்லிக் கதைக்கிறாளே!''

''பலே, உங்கள் வாழ்க்கை இலக்கிய ரசனை மிக்கதா யிருக்கிறதே! செங்கமலம் என்ன படித்திருக்கிறாள்?'' என்றேன் நான் என்னை மறந்து.

''பள்ளிக்கூடத்தில் எட்டாம் வகுப்புவரைதான் படித்தாள்; வீட்டில் கண்டதைப் படித்துப் பண்டிதையாகி விட்டாள்!''

''மேற்கொண்டு இன்னுங் கொஞ்சம் படித்திருந்தால் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளக்கூடிய சக்தியை அவள் பெற்றிருப்பாள் - ம், என்ன செய்வது?''

''அப்படித்தான் நானும் நினைத்திருந்தேன்; அதற்குள் அவள் காலை வாரி விட்டுவிட்டுப் போய் விட்டார்!''

''அவர் போகும்போது உங்களுக்கென்று ஒன்றும் வைத்துவிட்டுப் போகவில்லையா!''

''எல்லாம் வைத்திருந்தார்; எனக்குத்தான் ஒன்றும் கிடைக்கவில்லை!''

“ஏன்?”

“அது பெரிய கதை!”

“அதைத்தான் கொஞ்சம் சொல்லுங்களேன்?”

“பாழும் சட்டம் இருக்கிறதே, அது சிவகுமாரனைப் போல எங்களை மோசம் செய்துவிட்டது - ம், சட்டம் என்ன செய்யும்? - ஜாதி வெவ்வேறாக இருந்து விட்டதே அதற்குக் காரணம்!”

“ஏன் நீங்கள் கலப்பு மணம் செய்து கொண்டீர்களா என்ன?”

“அந்தக் கூத்தை ஏன் கேட்கிறீர்கள்? - இவள் இப்போது கதைக்கிறாளே, என்னமோ காதல் கீதல் என்று - அந்த எழவெடுத்த காதலுக்கு நானும் எனது இளம் பிராயத்தில் பலியானேன். இவளுடைய அப்பா அப்போது என் அக்காளின் குழந்தைகளுக்கு ‘ட்யூஷன்’ சொல்லிக் கொடுப்பதற்காக எங்கள் வீட்டிற்கு வருவார். அப்படி வரும்போதெல்லாம் அவர் என்னை ஒரு தினுசாகப் பார்ப்பார்; நானும் அவரை ஒரு தினுசாகப் பார்ப்பேன். இதிலிருந்து அந்தப் பாழாய்ப்போன காதல் உதயமாயிற்று - இதில் வேடிக்கை என்ன தெரியுமா? - அவருக்கு ஏற்கெனவே கல்யாணமாகியிருந்தது. ஆனால் அது காதல் கல்யாணமில்லையாம் - அவரேதான் சொன்னார், இந்த விஷயத்தை எனக்கு! - அப்புறம் எப்படியோ அவருக்கே தெரியாமல் அவருடைய உள்ளத்தை நான் திருடிக்கொண்டு விட்டேனாம்; அதைக் காணாமல் அவர் ‘தேடு, தேடு’ என்று தேடும்போது, அது என் உள்ளத்தில் ஒளிந்து கொண்டிருந்ததாம். ஆகவே, ‘நீ என்னைக் கல்யாணம் செய்து கொண்டால்தான் ஆச்சு; இல்லையென்றால் பிராணனை விட்டுவிடுவேன்!’ என்று அவர் என்னைப் பயமுறுத்தினார் - ஏனோ தெரியவில்லை, எனக்கும் அந்த மனிதரைக் கல்யாணம் செய்து

கொள்ள வேண்டுமென்று ஆசையாயிருந்தது. ஆனால் இதில் ஒரு சங்கடம் - அவர் ஒரு ஜாதி, நான் ஒரு ஜாதி!''

''சரிதான்; அவர் ஆண்ஜாதி, நீங்கள் பெண் ஜாதியாக்கும்?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை - நான் சூத்திரச்சி; அவர் பிராமணர். இந்த வேறுபாட்டால் பெற்றோருக்குத் தெரியாமல் கோவிலுக்குச் சென்று, நாங்கள் முறைப்படிக் கல்யாணம் செய்துகொண்டோம். ஆரம்பத்தில் வாழ்க்கை என்னமோ ஆனந்தமாகத்தான் இருந்தது. அதிலும் சிவகுமாரனைப் போல இவள் பிறந்ததும் அவர் என்னைக் கைவிடவில்லை; கண்ணுங் கருத்துமாய்த்தான் எங்களைக் காத்து வந்தார். கடைசியில் பாழும் எமன் இன்னுங் கொஞ்ச நாட்கள் அவரை எங்களிடம் விட்டு வைக்காமல் கொண்டு போய்விட்டான்!'' என்று சொல்லி, அவள் கண்களைக் கசக்கிக் கொண்டாள்.

''சரி, அப்புறம் என்ன நடந்தது?''

''இரண்டு பெண்டாட்டிக்காரர் அல்லவா? - இறந்த பிறகு அவருடைய சொத்தைப் பகிர்ந்து கொள்வதில் எங்களுக்குள் தகராறு ஏற்பட்டது.''

''ம்?''

''இருவரும் கோர்ட்டுக்குப் போனோம்; வழக்கு வளர்ந்தது - தீர்ப்பு என்ன தெரியுமா? - பிராமணப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்ட சூத்திரன் இறந்து விட்டால் அவனுடைய சொத்தில் அந்தப் பெண்ணுக்குப்பங்கு பெற உரிமையுண்டாம்; சூத்திரப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்ட பிராமணன் இறந்துவிட்டால் அவனுடைய சொத்தில் பங்கு பெற அந்தப் பெண்ணுக்கு உரிமை இல்லையாம்!''

''ஓஹோ!''

''என்ன ஓஹோ! - உங்களுக்குத் தெரியாதா? நீங்கள் சட்டம் படித்தவர் என்று நான் கேள்விப்பட்டேனே!'' என்றாள் அவள்.

'வகுப்பு வாதி'' என்ற வஞ்சகர்களின் பட்டத்துக்கு அஞ்சி நான் அந்தச் சமயம் ஒன்றும் சொல்லவில்லை; பேசாமல் இருந்தேன்.

''அதனால் தான் இந்தக் கதிக்கு நாங்கள் ஆளானோம். இல்லையென்றால் உங்கள் அருமை மாமாவை நாங்கள் ஏன் தஞ்சமடைந்திருக்கப் போகிறோம்? அவர் வீட்டு வேலைக்காரிகளாயிருந்து இந்தக் கதிக்கு ஏன் ஆளாகி யிருக்கப் போகிறோம்?'' என்று தன் கதையை முடித்தாள் அவள்.

அதற்குள், எங்களை ஏற்றிக்கொண்டு வந்த ரயில் சென்னை எழும்பூர் ஸ்டேஷனை அடைந்தது.

முதலில்: நான் இறங்கினேன் - என்ன அதிசயம், இது! எங்கிருந்தோ பாலு ஓடோடியும் வந்து என் கையைப் பிடித்துக் குலுக்கி, ''ஹெல்லோ செல்வம், சௌக்கியமா?'' என்று விசாரித்தான்.

''ஹெல்லோ என்னப்பா ஹெல்லோ? நீங்கள்தான் இங்கிலீஷ்காரனை இந்தியாவிலிருந்து விரட்டப் போகிறீர் களோ?'' என்றேன் நான்.

அதற்குள் ''சித்தி!'' என்று ஒரே கத்தாய் கத்தினான் அவன். திரும்பிப் பார்த்தேன்; ''என்னடா பாலு, சௌக்கியமா?'' என்றாள் செங்கமலத்தின் தாயார்.

அதிசயத்திற்கு மேல் அதிசயம்! - எங்கே செங்கமலம்? - சுற்றுமுற்றும் பார்த்தேன்; குழந்தையுடன் ஓடோடியும் சென்று அவள் கூட்டத்தோடு கூட்டமாக மறைந்து விட்டாள் - அண்ணனுக்கு அஞ்சித்தான்!

# 12. ஒரு துளி விஷம்

செங்கமலத்தின் தாயார், பாலுவின் சித்தி! - என்னால் இதை நம்பவே முடியவில்லை. ஆனால் சம்பவம் கதையில் நடக்கவில்லையாதலால், நம்பத்தான் வேண்டியிருந்தது.

சித்தியின் அலங்கோலத்தைக் கண்டோ என்னவோ, பாலு ஒரு கணம் அசைவற்று நின்றுவிட்டான்.

தன்னையே வைத்த கண் வாங்காமல் அவன் பார்ப்பதைக் கண்ட சித்தி புன்னகையுடன், ''என்னடா, 'சௌக்கியமா?' என்று கேட்கிறேன், பேசாமல் நிற்கிறாயே!'' என்று மறுபடியும் கேட்டாள்.

அப்போதும் அவன் பதில் சொல்லவில்லை; நின்றது நின்றபடி நின்றான்.

செங்கமலத்தின் தாயார் என்னை நோக்கி, ''இவன் சின்னஞ் சிறுவனாயிருந்தபோது, அவர் இவனை அடிக்கடி எங்கள் வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு வருவார். சில சமயம் எங்கள் வீட்டிலேயே இவன் ஒரு வாரம், இரண்டு வாரங் கூடத் தங்கி விடுவான். அப்போதெல்லாம் இவனுக்கு நான் சூத்திரச்சி என்றும், இவனுடைய அப்பா பிராமணரென்றும் தெரியாது. ஆகவே, எந்தவிதமான வித்தியாசமும் இல்லாமல் என்னுடன் பழகுவான். செங்கமலம் இவனைப் பார்த்துவிட்டால் போதும்; 'அண்ணா, அண்ணா!' என்று வாய் ஓயாமல் அடித்துக் கொள்வாள். இவனும் அப்படித்தான்; எங்கள் வீட்டுக்கு வந்தால் செங்கமலத்தை விட்டு ஒரு நிமிஷங்கூடப் பிரிந்திருக்க

மாட்டான் - அதெல்லாம் அந்தக் காலம்; இந்தக் காலத்தில் அப்படியெல்லாம் இருக்க முடியுமா?'' என்றாள்.

''ஏன் முடியாது, சித்தி? நிச்சயம் முடியும்?'' என்றான் பாலு.

''எப்படி முடியும்? 'புனிதம் மிக்க உங்கள் மனுதர்மம்' அதற்கு இடங் கொடுக்காதே!'' என்றேன் நான் சிரித்துக் கொண்டே.

''மனு தர்மமாவது, மண்ணாங்கட்டியாவது? என்னைப்பற்றி நீ தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறாய்; மனித தர்மத்தைத் தவிர வேறொரு தர்மத்தையும் நான் ஒப் புக் கொள்வதில்லை!'' என்றான் பாலு ஆவேசத்துடன்.

''நான் தவறாக நினைத்துக் கொண்டிருக்கவில்லை; சட்டம் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறது- இந்த அழகான உலகத்தில் எந்தக் காலத்திலாவது மனுதர்ம ராஜன் என்று ஒரு புண்ணியவான் இருந்தானோ இல்லையோ, அவன் பேரால் 'இந்து லா' என்றொரு சட்டம் மட்டும் இன்றுவரை இருப்பது உண்மை. அந்தச் சனியன் பிடித்த சட்டம் இல்லாமலிருந்தால் உன் சித்திக்கு இந்தக் கதி வந்திருக்குமா?'' என்றேன் நான்.

''என்ன கதி? என் சித்தி ஏன் இப்படி இருக்கிறார்கள்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே? கொஞ்சம் விவரமாய்ச் சொன்னால் தேவலை!''

''சொல்கிறேன்; சொல்லாமலா போகப் போகிறேன்? - ஆனால் அதற்கு இது சமயமில்லை; நீ எங்கேயாவது அவசரமாகப் போகிறாயா?''

''கொஞ்சம் அவசரந்தான்; அம்மாவுக்கு உடம்பு சரியில்லையென்று நேற்றுத் தந்தி வந்தது - அதற்காகப் போகிறேன்!''

''சரி, திரும்பி வந்ததும் அதைப் பற்றிப் பேசிக் கொள்ளலாம் - போய் வரட்டுமா?'' என்று நான் திரும்பினேன்.

அவன் என் கையைப் பிடித்து நிறுத்தி, ''ஆமாம் உனக்கு எப்படி இவர்களைத் தெரிந்தது?'' என்று கேட்டான்.

''அதுதான் கதை; அந்தக் கதையைத்தான் இப்போது சொல்ல நேரமில்லை என்கிறேன்?''

''என்னைக் கண்டதும் செங்கமலம் ஏன் பஞ்சாய்ப் பறந்துவிட்டாள்? - எனக்குச் சொல்லாமலே கல்யாணம் செய்துகொண்டு, எனக்குத் தெரியாமலே ஒரு குழந்தைக்கும் தாயாகிவிட்டதற்காகவா?'' என்றான் அவன் சிரித்துக் கொண்டே.

''வெட்கக்கேடுதான்! - எல்லாவற்றையும் உனக்குப் பின்னால் சொல்கிறேன்; போய் வா!'' என்று நான் நடையைக் கட்டினேன்.

செங்கமலத்தின் தாயார் என்னைத் தொடர்ந்தாள்.

இரண்டடிகள் எடுத்து வைத்த நான் என்னையும் அறியாமல் திரும்பிப் பார்த்தேன்; பாலு நின்றது நின்றபடி நின்றுகொண்டிருந்தான்.

''ஊரிலிருந்து திரும்பி வர எத்தனை நாட்களாகும்?'' என்றேன் நான்.

''இரண்டு நாட்களுக்குள் திரும்பிவிடுவேன்!'' என்றான் அவன்.

''அதெப்படி முடியும்? அங்கே அம்மாவின் உடம்பு மோசமாயிருந்தால்?''

''இங்கே அழைத்துக்கொண்டு வந்துவிடுவேன்!''

''சரி, வந்ததும் என்னைப் பாரிஸ்டர் பரந்தாமன் வீட்டில் வந்து பார்!''

''சித்தியும் செங்கமலமும்கூட உன்னுடன்தானே இருப்பார்கள்?''

''ஆமாம்.''

''அப்படியானால் ஊரிலிருந்து திரும்பியதும் நான் அவசியம் வந்து பார்க்கிறேன்!'' என்றான் அவன்.

அவனுடைய தலை மறைந்ததும் செங்கமலம் எங்கிருந்தோ ஓடோடியும் வந்து எங்களுடன் கலந்து கொண்டாள்.

நாங்கள் நால்வரும் பாரிஸ்டர் பரந்தாமன் வீட்டை அடைந்தபோது அங்கே யாரையும் காணவில்லை. வீட்டு வாசலில் நின்று ''ஸார், ஸார்!'' என்று இரண்டு மூன்று முறை குரல் கொடுத்துப் பார்த்தேன்; பதில் இல்லை.

சிறிது நேரங்கழித்து மிஸஸ் பரந்தாமன் வந்து கதவிடுக்கில் நின்று, ''அவர் இல்லையே!'' என்றாள்.

''எங்கே போயிருக்கிறார்?'' என்று கேட்கலாமென்று நிமிர்ந்தேன்; அதற்குள் அவள் உள்ளே போய் விட்டாள்!

மேலே என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தபோது சற்றுத் தூரத்தில் சாந்தினி வருவது தெரிந்தது. உடனே நான் ஓடோடியும் சென்று, ''சித்ரா எங்கே, சாந்தினி?'' என்று பரபரப்புடன் கேட்டேன்.

''ஸ், கல்யாணமாவதற்கு முன்னால் நாலு பேருக்குத் தெரிந்து நீங்கள் என்னுடன் பேசக் கூடாது; இது இந்து தர்மம், தெரியுமா?'' என்று வாயைப் பொத்திக் காட்டி விட்டு, ''நேரே உங்கள் வீட்டுக்குப் போங்கள்; எல்லாம் தெரியும்!'' என்று சொல்லிவிட்டு, அவள் முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டே நடந்தாள்.

எங்கள் வீட்டிலா?... இவ்வளவு சீக்கிரம் வீடுமாற்ற அங்கே இருந்தவர்களால் எப்படி முடிந்தது? - எனக்கு ஒன்றும் புரியவில்லை. இருந்தாலும் பின்னால் எல்லா வற்றையும் விசாரித்துத் தெரிந்துகொள்ளலாம் என்ற தீர்மானத்துடன் 'விடுவிடு'வென்று நடந்தேன். என்னைப் பின்பற்றி நடப்பதற்குச் செங்கமலமும் அவளுடைய

தாயாரும் அப்போது கொஞ்சம் திணறத்தான் வேண்டியிருந்தது.

எத்தனையோ நாட்களுக்குப் பிறகு சித்ராவைப் பார்க்கப் போகிறோம் - அவளுடைய உள்ளமும் உடலும் எப்படி எப்படியெல்லாம் மாறுதல் அடைந்திருக்குமோ? இந்த அருமை அண்ணனைக் கண்டதும் அவளுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வருமோ, அல்லது ஆனந்தம் பொங்கிக் கொண்டு வருமோ? பெற்ற தாயார், உடன் பிறந்த சகோதரிகள் இவர்களைத் தவிர வேறு எந்தப் பெண்களைக் கண்டாலும் 'மனைவி முறை' கொண்டாட விரும்பும் ஈனர்கள் நிறைந்த இந்த உலகிலே, தன்னந் தனியாக வாழ நேர்ந்த அவளுக்கு என்னென்ன சோதனைகளெல்லாம் ஏற்பட்டிருக்குமோ? பெற்ற தாயைப் பிரிந்து, பிறந்த வீட்டை மறந்து, பணச் செருக்கால் மனிதத் தன்மையையே இழந்துவிட்ட அந்தப் பாவிகளிடம் அடைக்கலம் புகுந்த அவள் எப்படிப்பட்ட கொடுமைகளுக்கெல்லாம் உள்ளாக நேர்ந்ததோ? - இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டே நான் வீட்டுக்குள் நுழைந்தேன்.

சித்ரா என்னைப் பார்த்தாள்; பார்த்தது, பார்த்தபடி ஒரு கணம் அப்படியே நின்றாள்.

அவளுக்கு ஆனந்தம் பொங்கிக் கொண்டு வரவில்லை; ஆத்திரந்தான் பற்றிக்கொண்டு வந்தது. ஆனால் அந்த ஆத்திரத்தில் கோபத்தைக் காணமுடியவில்லை; துக்கத்தைத்தான் காண முடிந்தது.

''சித்ரா!'' என்றேன் நான் தழுதழுத்த குரலில்.

''இன்னொரு முறை என்னை விட்டுப் பிரிய நேரும் போது எனக்கு நீங்கள் ஒரு சிறு உதவி செய்ய வேண்டும். அண்ணா!'' என்றாள் அவள் விம்மிக் கொண்டே.

''என்ன உதவி, சித்ரா - சொல்; உனக்காக எது வேண்டுமானாலும் செய்யத் தயார்!''

''உங்களைவிடச் சாந்தினிக்கு அந்த உதவியைச் செய்வது சுலபம். அம்மாவுக்குப் பிறகு அம்மாவாக இருந்து எனக்காக இதுவரை எவ்வளவோ செய்திருக்கும் அவள், அதை மட்டும் ஏனோ செய்யமாட்டேன் என்கிறாள் - நீங்களாவது அவளிடம் சொல்லவேண்டும். ஏனெனில், உங்களுக்காக என்ன வேண்டுமானாலும் அவள் இப்போது செய்வாள் போலிருக்கிறது. அவ்வளவு நம்பிக்கை இருக்கிறது. உங்களிடம் அவளுக்கு! - ஆனால் எனக்கு மட்டும் உங்களிடம் நம்பிக்கையில்லை அண்ணா, நம்பிக்கை இல்லவேயில்லை. அதனால்தான் அந்த உதவியை எனக்கு அவசியம் செய்யவேண்டுமென்று கேட்கிறேன்!''

''ம், புண்பட்ட உள்ளம் புலம்பத்தான் செய்யும் - அதனாலென்ன, என்னிடம் உனக்கு ஏன் நம்பிக்கை யில்லை? வாழ்க்கை எப்போதுமே சுகம் நிறைந்ததாயிருக் குமா? கஷ்டமும் கலந்ததாய்த்தானே இருக்கும்? - அதற்காக இப்படிச் சோர்வடைந்துவிடலாமா? - உனக்கு என்ன உதவி வேண்டுமோ, அதைச் சொல் - உடனே செய்கிறேன்!''

''ரொம்ப சந்தோஷம், அண்ணா! இன்னொரு தடவை நீங்கள் சிறைக்குப் போக நேர்ந்தால் எங்கிருந்தாவது எனக்கு ஒரு துளி நல்ல விஷமாகப் பார்த்து வாங்கிக் கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டும் - என்ன, செய்வீர்களா?''

நான் திடுக்கிட்டு, ''சித்ரா, என்ன இது! இவ்வளவு கோழையாக நீ இருப்பாய் என்று நான் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லையே?'' என்றேன்.

இந்தச் சமயத்தில், வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. ஜன்னல் வழியாகப் பார்த்தேன்; பாரிஸ்டர்

பரந்தாமன் காரிலிருந்து இறங்கி உள்ளே வந்து கொண்டிருந்தார்.

அப்பொழுதுதான் செங்கமலத்தைப் பற்றிய நினைவு எனக்கு வந்தது. திரும்பிப் பார்த்தேன்; அவர்கள் ஒன்றும் தோன்றாமல் விழித்தது விழித்தபடி எனக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்தார்கள்.

''மன்னிக்க வேண்டும்; சித்ராவைப் பார்க்க வேண்டு மென்ற அவசரத்தில் உங்களை நான் மறந்தே விட்டேன் - வாருங்கள்!'' என்று அவர்களை அழைத்துக்கொண்டு போய் மாடியில் விட்டுவிட்டு, பரந்தாமனை வரவேற்க நான் தயாரானேன்.

## 13. விரும்பிய விதமே!

''இப்பொழுதுதான் ஊரிலிருந்து வந்தாற் போலிருக் கிறது!'' என்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தார் பாரிஸ்டர் பரந்தாமன்.

''ஆமாம், ஸ்டேஷனிலிருந்து நேரே உங்களுடைய வீட்டுக்குத்தான் வந்திருந்தேன்; வெளியே போயிருப்ப தாகச் சொன்னார்கள்'' என்றேன் நான்.

''ஓஹோ! இன்று நம் குருகுலத்தைக் கொஞ்சம் நேரில் சென்று கவனிக்க வேண்டியிருந்தது; அதற்குத்தான் போயிருந்தேன்.''

''அப்படி என்ன விசேஷம், அங்கே?''

''அதைப் பற்றிக் கேள்விப்பட்ட பெரிய மனிதர் ஒருவர் பார்வையிட வந்திருக்கிறார்; அவரிடமிருந்து

தர்மத்தின் பேரால் ஐயாயிரம், பத்தாயிரமாவது பிடுங்க வேண்டாமா?''

''அதற்கு?''

''இன்றாவது நம் குருகுலத்தில் வேலை செய்யும் பயல்கள்...''

''குருகுலத்திலாவது, வேலை செய்யும் பயல்களாவது!''

''சரி, படித்துக் கிழிக்கும் பயல்கள் என்றே வைத்துக் கொள். 'தொழிற்கல்வி' என்றால் என்ன ஐயா, அர்த்தம்? ஆதரவற்ற அனாதைச் சிறுவர்களிடம் சம்பளமில்லாமல் வேலை வாங்கிக்கொள்வது என்றுதானே அர்த்தம்?''

''இல்லை, அது உங்களுக்கென்று நீங்கள் தனியாகக் கற்பித்துக் கொண்டிருக்கும் அர்த்தம்!''

''ம், உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். வயிற்றுக் குச் சோறில்லாமல் யாராவது தொழிற் கல்வி கற்றுக் கொள்ள முடியுமா? என் வீட்டுச் சோற்றைப் போட்டு ஊரார் வீட்டுக் குழந்தைகளுக்குத் தொழிற் கல்வி கற்றுக் கொடுக்க எனக்கென்ன பைத்தியமா?''

''என்ன இருந்தாலும் 'மனச் சாட்சி' என்று ஒன்று இருக்கிறது, பாருங்கள்!''

''அட, நீ ஒண்ணு! மனச் சாட்சியாவது, மண்ணாங் கட்டியாவது? சந்தர்ப்பத்துக்கு ஏற்றாற்போல் அது சாட்சி சொல்லும் என்பது உனக்குத் தெரியாது போலிருக்கிறது! சொல்வதைக் கேள்; இன்றாவது அந்தப் பயல்கள் பெரிய மனிதரின் பேரைச் சொல்லிக் கொஞ்சம் நல்ல சாப்பாடாகச் சாப்பிடட்டுமே என்று சமையற்காரனைக் கூப்பிட்டு அவனிடம் ஐம்பது ரூபாயைக் கொடுக்க மனமில்லாமல் கொடுத்துவிட்டு வந்தேன்...''

''மற்ற நாட்களில்?''

"குருகுலத்துத் தோட்டத்தில் விளையும் கீரையோடு சரி!"

"இன்று?"

"முட்டைக்கோஸ், காலிப்ளவர், பீட்ரூட், காரெட் டொமேட்டோ, பொட்டேட்டோ எல்லாம் இருக்கும்; நெய்யும் தயிரும் தண்ணீர் படுகிற பாடு படும். சாயந்திரம் வேறு பாதாம் ஹல்வா, பாஸந்தி, பஜ்ஜி, சொஜ்ஜி, டிக்ரி காப்பி எல்லாம் தயார் செய்யச் சொல்லியிருக்கிறேன் - பயல்களின் பாடு இன்று யோகந்தான்; தினந்தோறும் இப்படி யாராவது பெரிய மனிதர்கள் வரமாட்டார்களா என்று தவங் கிடப்பார்கள்! - அவர்களுக்கு மட்டுமென்ன- எனக்குந்தான் இன்று யோகம். இன்றெல்லாம் செலவழிந் தால் என் கைப்பணம் நூறு ரூபாய்க்கு மேல் செலவழி யாது; அதையும் பின்னால் குருகுலத்தின் செலவுக் கணக்கில் எழுதிவிடுவேன்; சாயந்திரம் அதற்குப்பதிலாக ஐயாயிரமோ, பத்தாயிரமோ அந்தப் பெரிய மனிதரிட மிருந்து வாங்கி என் சொந்தப் பைக்குள் போட்டுக் கொண்டு விடுவேன்!"

"அதை வரவுக் கணக்கில் எழுத மாட்டீர்களா?"

"எழுதாமலென்ன, பேஷாய் எழுதுவேன். அதற்கேற் றாற்போல் செலவைக் காட்டுவதுதானா பிரமாதம்?"

"அதற்குத்தான் என்னைப் போன்ற சிலர் இம்மாதிரிக் காரியங்களையெல்லாம் சர்க்காரே மேற்கொண்டு நடத்த வேண்டுமென்று சொல்கிறார்கள்."

"ஐயையோ! இவையெல்லாம் தர்ம காரியங்களா யிற்றே; உடல், பொருள், ஆவி மூன்றையும் தேசத்துக்குத் தத்தம் செய்துவிட்டு அரூபிகளாக நடமாடும் உத்த மோத்தமர்களின் சத் காரியங்களாயிற்றே! இவற்றைச்

சர்க்கார் மேற்கொள்ள வேண்டுமென்று சொல்ல உன் நாவு கூசவில்லையா?''

''கூசும், கூசும்; இன்னுங் கொஞ்ச நாட்கள் பொறுத் திருந்து பாருங்கள் - கூசுவதும் கூசாததும் தெரியும்!''

''எத்தனை நாட்கள் பொறுத்திருந்தால் தான் என்ன? சத்தியத்தின் பிறப்பிடமாகவா சர்க்கார் மாறிவிடப் போகிறது?''

''ஏன் மாறாது, நிச்சயம் மாறும்!''

''அப்படியே மாறட்டும். அதனாலென்ன, உரிய பதவிகளில் உட்கார்ந்து, அடிக்கும் கொள்ளையைச் சம்பளக் கொள்ளையாக அடித்துவிட்டுப் போகிறோம்!''

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்களுக்குத் தேச விடுதலை, சமூக விடுதலையெல்லாம் ஏதோ 'பிஸினஸ்' மாதிரியல்லவா இருக்கிறது?''

''சந்தேகமென்ன, 'பிஸினஸ்' தான்! இதை நான் ஒப்புக்கொள்கிறேன்; மற்றவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டோம் என்கிறார்கள். இதுதான் அவர்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம். இல்லையென்றால் பேருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு வக்கீல் தொழிலை உதறித்தள்ளி விட்ட நான் எப்படிப் பிழைப்பதாம்?''

''இப்படிப் பிழைப்பதற்கு நீங்கள் வக்கீல் தொழிலை விட்டிருக்க வேண்டாமே!''

''அது தெரியாதா, எனக்கு? நீ பேசாமலிருந்து நான் சொல்வதைக் கேள்: ஏதோ உனக்கும் என்னுடைய அனுபவம் பயன்படட்டுமே என்றுதான் இவ்வளவு தூரம் சொல்கிறேன். வேண்டுமானால் நீயும் சாயந்திரம் என்னுடன் குருகுலத்துக்கு வந்துப் பாரேன்; ஆறு மணி வரை அவர் அதைச் சுற்றிப் பார்வையிடுவார்; அதற்குப் பின் தம் பேரால் ஹாலோ, அறையோ கட்டுவதற்குப்

பணமும் கொடுத்துவிட்டுப் போவார். அத்துடன் எங்கள் 'நாடகம்' நிற்காது. அவருடைய தன்னலமற்ற சேவை யைப் பாராட்டி நான் பேசுவேன்; என்னுடைய தன்னலமற்ற சேவையைப் பாராட்டி அவர் பேசுவார். வேலையற்ற நிருபர்கள் அந்த வைபவத்தை பற்றிப் பத்திரிகைகளுக்குப் பத்தி பத்தியாகச் செய்தி அனுப்பு வார்கள். இப்படியாக எல்லாம் ஒரே வேடிக்கையாக யிருக்கும். வருகிறாயா, உன்னையும் அந்தப் பெரிய மனிதருக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன். பாவம், அவரும் ஒருவிதத்தில் என்னுடைய கட்சியைச் சேர்ந்தவர் தான். நான் ஒரு வழியில் பிரபலமடையப் பார்க்கிறேன்; அவர் இன்னொரு வழியில் பிரபலமடையப் பார்க்கிறார். என்னுடைய வழியில் பணத்துக்குச் செலவில்லை; அவருடைய வழியில் பணத்துக்குச் செலவிருக்கிறது. ஆனால் பலன் என்னவோ ஒன்று தான்! - என்ன செய்வது, மக்கள் ஆட்டு மந்தையாக இருக்கும்வரை நாம் வேட்டை நாய்களாக இருக்க வேண்டியதுதானே? - என்ன சொல்கிறாய், இப்படிப்பட்ட வைபவங்களில் கலந்து கொண்டால்தான் நீயும் சீக்கிரத்தில் பெரிய மனிதனாக முடியும்...''

''ஐயோ, வேண்டாம். அதைவிடச் சின்ன மனிதனாகவே இருந்துவிட்டுப் போகிறேன்!''

''அதற்கு நீ உன் தொழிலை விட்டு விட்டுச் சிறைக்குச் சென்றிருக்கக் கூடாது?!''

''அதனாலென்ன?''

''எது எப்படியானாலும் இப்போது குடும்பம் நடந்தாக வேண்டுமே?''

''குடும்பம் நடக்காமல் எங்கே போகிறது? எல்லோரும் அவரவர்கள் குடும்பத்தை மட்டுமே கவனித்துக் கொண்டிருந்தால் தேசம் உருப்படுவது எப்படி?''

"முதலில் நீ எப்படி உருப்படப் போகிறாய், அதைச் சொல்?"

"நானா, இந்த வீட்டை விற்றுவிட்டு உருப்படப் போகிறேன்!"

"என்ன!"

"ஆமாம், இந்த வீட்டை விற்றுவிட்டுத்தான் உருப்படப் போகிறேன்!"

"சரி, இதை விற்ற காசு உன்னை எத்தனை நாட்கள் தாங்கும்?"

"அதற்குப் பின் நான் சும்மாவா இருக்கப் போகிறேன்? அந்தக் காசைக் கொண்டு பத்திரிகை நடத்தப் போகிறேன்!"

"அப்பொழுதும் பணக்காரனின் தயவு வேண்டுமே?"

"அது வேறு பத்திரிகை; என்னுடைய பத்திரிகையோ பாட்டாளிகளின் சுகத்திலும் துக்கத்திலும் பங்கெடுத்துக் கொள்ளும்."

"நாசமாய்ப் போச்சு! பாட்டாளிகளுக்காவது, சுகமாவது? அவர்களுக்கும் துக்கந்தான்; உனக்கும் துக்கந்தான்! வீணாகக் கெட்டலையாதே, பெற்றோர் ஞாபகார்த்தமாக இருக்கும் இந்த ஒரு வீட்டையும் விற்று விட்டு நிற்கக் கூட நிழலின்றித் தவிக்காதே! இப்போதைக் குச் சித்ராவிடம் முந்நூறு ரூபாய் கொடுக்குமாறு நான் சாந்தினியிடம் சொல்லியிருக்கிறேன்; அதை வைத்துக் கொண்டு குறைந்த பட்சம் ஒரு மாத காலமாவது நீங்கள் கஷ்டமில்லாமல் காலந் தள்ளிவிடலாம். அதற்குள் நீ வேண்டுமானால் உன்னுடைய விருப்பம்போல் பத்திரி கைத் தொழிலில் இறங்கு. ஆனால் அதற்காக வீட்டை விற்காதே; அந்தத் தொழிலுக்கு வேண்டிய பணத்தை நான்

தருகிறேன். என்ன இருந்தாலும் பணக்காரரை வெறுத்துக் கொண்டு உன்னால் பத்திரிகை நடத்த முடியாது. ஆனானப்பட்ட காந்தியே அவர்கள் அடியோடு ஒழிய வேண்டுமென்று சொல்லவில்லை; கோயில் தர்மகர்த் தாக்களைப்போல அந்தப் பெருச்சாளிகள் ஏழைகளுக்கும் தர்மகர்த்தாக்களாக இருக்க வேண்டும் என்றுதான் சொல்கிறார். அத்தகைய பெருச்சாளிகளில் ஒன்றாக நீயும் ஏன் இருக்கக்கூடாது? அவரே அப்படிச் சொல்லும்போது நீ மட்டும் அதற்கு மாறாக ஏன் நடக்க வேண்டும்?''

''சரி, அப்படியானால் எனக்கு உங்களால் எவ்வளவு பணம் தரமுடியும்?''

''எவ்வளவு வேண்டுமானாலும் கொடுத்துக் கொண்டே இருக்கிறேன்!''

''இது என்ன வேடிக்கையாயிருக்கிறதே! உங்களுக்கு ஏது அவ்வளவு பணம்?''

''தேசபந்து நிதிக்குப் பத்து லட்ச ரூபாய் சேர்ப்பதென்று முடிவு செய்திருக்கிறார்களே, அது உனக்குத் தெரியாதா?''

''தெரியாமலென்ன, அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''சம்பந்தமில்லாவிட்டால் என்ன, நாம் சம்பந்தப் படுத்திக்கொள்ள வேண்டியதுதான்!''

''இது அக்கிரமமில்லையா?''

''எது அக்கிரமமில்லை? சொல்வதைக் கேள், தம்பி! நானோ இதுவரை தேசபந்து நிதிக்காக ரூபாய் ஐம்பதினா யிரம் வரை சேர்த்திருக்கிறேன், எல்லாம் எனக்காகக் கொடுத்தது தான்; ஸி.ஆர்.தாஸுக்காக யாரும் கொடுத்து விடவில்லை. அப்படிக் கொடுத்தவர்களில் சிலர் தங்கள்

பெயரை வெளியிட வேண்டாம் என்று சொல்லியிருக் கிறார்கள். ஏன் தெரியுமா? தன்னடக்கத்தால் அல்ல; வேறு யாராவது நிதிக்கு வந்துவிட்டல் என்ன செய்வது என்ற பயத்தினால் தான்! அதிலும் இந்த இன்-கம்-டாக்ஸ் தொல்லை என்று ஒன்று இருக்கிறதே, அந்தத் தொல் லையை நிதியினால் ஓரளவு குறைத்துக் கொள்ளலாம். அதற்காகவே நல்ல வழியில் சம்பாதிப்பவர்கள் ஐந்தும் பத்துமாகக் கொடுத்தால், கெட்ட வழியில் சம்பாதிப்ப வர்கள் ஐயாயிரம், பத்தாயிரமென்று கொடுக்கிறார்கள். அப்படியிருக்கும் போது நாம் ஏன் அக்கிரமத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? நல்ல வழியில் சம்பாதித்துக் கொடுத்தவர்களின் பணத்தை வேண்டுமானால் ஸி.ஆர். தாஸ் நிதிக்கே அனுப்பி விடுவோம்; கெட்ட வழியில் சம்பாதித்துக் கொடுத்தவர்களின் பணத்தை...''

என்னால் தாங்க முடியவில்லை; எழுந்து கைகூப்பிய வண்ணம், ''வணக்கம்; என்னை இத்துடன் விட்டு விடுங்கள்!'' என்று எழுந்தேன்.

''ம், நீ எப்படித்தான் பிழைக்கப் போகிறாயோ!'' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே சென்றார் அவர்.



அன்று மாலை; நான் விட்டாலும் பாரிஸ்டர் பரந்தாமன் என்னை விடுவதாயில்லை. ஆகவே வேறு வழியின்றி அவருடன் திலகர் குருகுலத்துக்குச் சென்றேன். அதைப் பார்வையிட வந்திருந்த பெரிய மனிதருக்குப் பரந்தாமனார் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார். இருவரும் ஒருவருக்கொருவர் வணக்கம் தெரிவித்துக் கொண்ட பிறகு, எல்லோருமாகச் சேர்ந்து குருகுலத்தைச் சுற்றி வந்தோம். பாரிஸ்டர் பரந்தாமன் அதுவரை தாம்

அதற்காகச் செய்திருக்கும் தன்னலமற்ற சேவையைப் பற்றித் தன்னடக்கத்துடன் வந்திருந்த பெரிய மனிதரிடம் சொல்லிக் கொண்டே வந்தார். அவற்றைக் கேட்டுப் பாரிஸ்டர் எதிர்பார்த்தபடி அவரும் பிரமித்துப் போனார் - ஆம்! உண்மைக்கு வசப்படுவதைக் காட்டிலும் மனிதன் பொய்க்கு அதிகமாக வசப்பட்டு விடுகிறா னல்லவா?

இந்த நிலையில் குருகுலம் முழுவதையும் பார்வை யிட்ட பிறகு, தமக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கூட்டத்தில் பெரிய மனிதர் பேசினார். குருகுலச் சிறுவர் அனைவரும் கூட்டத்தில் கலந்துகொண்டனர். கேட்கும் விஷயத்தைப் பகுத்தறிவுக் கண் கொண்டு பார்க்கும் சக்தி அவர்களுக்கு இல்லாவிட்டாலும், எடுத்ததற்கெல்லாம் கரகோஷம் செய்யும் சக்தி மட்டும் அவர்களுக்கு இருந்தது. இதில் வேடிக்கை என்னவென்றால், பாரிஸ்டர் பரந்தாம னைப் பற்றி வந்திருந்தவர் ஏதாவது சொல்லும்வரை கூட அவர்கள் காத்திருக்கவில்லை; அவருடைய பெயரை எடுக்கும்போதே கை தட்ட ஆரம்பித்துவிட்டார்கள் - இப்படி ஒரு முறை இரு முறையல்ல; பிரசங்கம் முடியும் வரை அவருடைய பெயர் எத்தனை இடங்களில் வந்ததோ அத்தனை இடங்களிலும் அவர்கள் கை தட்டி ஆரவாரம் செய்தார்கள் - எல்லாம் ஏற்கெனவே நடத்தியிருந்த ஒத்திகையின் விளைவு போலும்!

திருவாளர் பரந்தாமனைப்பற்றி இரண்டு வார்த்தைகள் சொல்வதற்காக எழுந்த பெரிய மனிதர் இருநூறு வார்த்தை களுக்குமேல் பேசிக்கொண்டே போனார். 'உலகத்தில் பலனை எதிர்பாராமல் கருமத்தைச் செய்யும் மிகச்சில கர்மயோகிகளில் பாரிஸ்டர் பரந்தாமன் குறிப்பிடத் தக்க ஒருவர்!' என்று அவர் பெருமிதத்துடன் உறுமினார். சர்க்கார் ஆதரவில் நடைபெறும் கல்லூரிகளைப் பகிஷ் கரித்துவிட்டு இம்மாதிரிக் குருகுலங்களில் மாணவர்கள்

சேர்ந்து படிக்கவேண்டியதன் அவசியத்தைப் பற்றி அவர் வற்புறுத்தினார். நடுநடுவே தம்மைப்பற்றியும் தர்ம காரியங்களில் தமக்குள்ள சிரத்தையைப் பற்றியும், சற்றே குறிப்பிட அவர் மறந்துவிடவில்லை!

அடுத்தாற்போல் என்னையும் ஏதாவது பேசுமாறு கேட்டுக்கொண்டார் பரந்தாமனார்.

''சர்வகலாசாலை அளிக்கும் யோக்கியதாம்சங்களுக்குத் தக்கபடிச் சர்க்கார் உத்தியோகம் கிடைக்கும் வரை இம்மாதிரிக் குருகுலங்களால் மாணவர்களுக்கு அவ்வளவாக நன்மையில்லை என்பது என் அபிப்பிராயம்; அதைப்பற்றி வேண்டுமானால் பேசட்டுமா?'' என்றேன் நான்.

''கடைசியில் கூட்டத்தைக் கசப்புடன் முடிக்க நான் விரும்பவில்லை; வந்தனோபசாரம் கூறி இனிப்புடன் முடித்து விடுகிறேன்!'' என்றார் அவர். ''அப்படியே செய்யுங்கள்!'' என்று சொல்லிவிட்டு நான் பேசாமல் இருந்துவிட்டேன்.

பாரிஸ்டர் பரந்தாமனார் எழுந்து பதிலுக்குப் பதில் கணக்கைத் தீர்த்துக்கொள்வதுபோலப் பெரிய மனிதரின் உதார குணத்தைப் பற்றி வானளாவப் புகழ்ந்தார். கடைசியில், வந்திருந்தவர்களுக்கெல்லாம் தம் வந்தனத்தைத் தெரிவித்துக்கொண்டு கூட்டத்தைக் கசப்பின்றி முடித்தார்.

அவ்வளவுதான்; கையில் தயாராக வைத்திருந்த பத்தாயிரம் ரூபாய் செக்கைப் பரந்தாமனாரிடம் நீட்டினார் பெரிய மனிதர். அகமும் முகமும் ஒருங்கே மலர அதைப் பெற்றுக்கொண்டு, ''தங்களைப் போன்றவர்கள் இருக்கும் வரை என்னைப் போன்றவர்கள் இன்னும் எத்தனை தர்ம

காரியங்களில் வேண்டுமானாலும் துணிந்து இறங்கலாம்!'' என்றார் பாரிஸ்டர்.

அவர் சொன்னதும் ஒருவிதத்தில் உண்மைதானே?



கூட்டம் கலைந்த பிறகு மூவரும் பேசிக்கொண்டே குருகுலத்தின் வாயிலை அடைந்தோம். எனக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. அதை நிவர்த்தி செய்துகொள்வதற்காக, ''உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?'' என்று பெரிய மனிதரைக் கேட்டேன்.

''மூன்று குழந்தைகள். அவர்களில் இருவர் ஆண் குழந்தைகள்; ஒன்று பெண் குழந்தை'' என்றார் அவர்.

''சரி; அவர்கள் எங்கே படிக்கிறார்கள்?''

''ஒருவன் பிரஸிடென்ஸி காலேஜில் படிக்கிறான்; இன்னொருவன் லயோலா காலேஜில் படிக்கிறான்; பெண் குழந்தை க்வீன்மேரீஸ் காலேஜில் படிக்கிறது - ஏன், எதற்காகக் கேட்கிறீர்கள்?''

''இல்லை, பாரிஸ்டர் பரந்தாமனுக்குத்தான் சாந்தினியைத் தவிர வேறு குழந்தைகள் எதுவுமில்லை. அதனால் தம் குழந்தைகளை முதலில் குருகுல வாசம் செய்ய விட்டுப் பிறருக்கு வழி காட்ட அவரால் முடியாமலிருக்கிறது. நீங்களாவது உங்கள் குழந்தைகளை இந்தக் குருகுலத்தில் விட்டுப் பிறருக்கு வழி காட்டியிருக்கலாமே?'' என்றேன் நான்.

அவ்வளவுதான் - அவருடைய மீசை துடித்தது; கண்கள் ஜிவ்வென்று சிவந்தன. கையிலிருந்த ஊன்று கோலை அப்படியும் இப்படியுமாக ஆட்டிய வண்ணம்,

''ஏதேது, இவன் பெரிய அதிகப்பிரசங்கியாயிருப்பான் போலிருக்கிறதே; இவனைப் போன்றவன்களிடத்தி லெல்லாம் நீங்கள் சிநேகமே வைத்துக்கொள்ளக் கூடாது, ஸார்! மரியாதை தெரியாத பயல்கள்; பண்பாடு தெரியாத பயல்கள்!'' என்று அவர் மரியாதையையும், பண்பாட்டை யும் சற்றே மறந்து என்னைத் தீர்த்துக் கட்ட ஆரம்பித்து விட்டார்.

''மன்னிக்க வேண்டும்; இவ்வளவு சீக்கிரத்தில் உங்களு டைய வேஷத்தை நீங்கள் கலைத்துவிடுவீர்கள் என்று நான் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லை!'' என்றேன் நான்.

பாவம், பரந்தாமனார் என்ன செய்வார்? மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் தவியாய்த் தவித்தார்!

அதற்குள் காரை நெருங்கினார் அவர். டிரைவரைக் காணோம்.

''முனிசாமி! ஏய், முனிசாமி!''

பதில் இல்லை; சற்றுத் தூரத்தில் அவன் ஒரு மரத்தடியில் நின்று கொண்டிருந்தான். அவனுக்கருகே ஒரு சிறுமி தலைவிரி கோலத்துடன் நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் ஏனோ கலங்கியிருந்தன. அவனிடம் அவள் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த முனிசாமியின் காதிலோ பெரிய மனிதரின் குரல் விழவில்லை!

இந்த நிலையில் தம்முடைய காரியம் முடிந்து விட்டதால் பரந்தாமனார் அவரைச் சீக்கிரமாக வண்டியில் ஏற்றி அனுப்பிவிட நினைத்தாரோ என்னமோ, 'பாம், பாம்' என்று ஹாரன் அடிக்க ஆரம்பித்து விட்டார். அதைக் கேட்டதும் அவன் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தான்.

''ஏண்டா, நாயே! உனக்காக நான் காத்திருப்பதா, எனக்காக நீ காத்திருப்பதா? - ஏறு வண்டியில்!'' என்று அதட்டினார் பெரிய மனிதர்.

''எசமான்! ஒரு சேதிங்க; குழந்தை என்னைத் தேடிகிட்டு வந்திருக்கு. வீட்டிலே இடுப்பு வலியாம்; பிரசவ ஆஸ்பத்திரிக்கு அழைச்சுகிட்டுப் போகப் பத்து ரூபாயாச்சும் கேட்டு வாங்கிகிட்டு வரச்சொன்னாங்களாம். இந்தச் சமயத்திலே நீங்கதான் கொடுத்து உதவணும்; சம்பளத்திலே தள்ளிடறேனுங்க!'' என்றான் அவன் கையைப் பிசைந்துகொண்டே.

''என்னை என்ன, லேவாதேவிக்காரன்னு நினைச் சுட்டியா? - சீ, ஏறு வண்டியிலே!'' என்று அவன் கழுத்தைப் பிடித்து வண்டிக்குள் தள்ளினார் அவர்.

கார் கிளம்பிற்று. ''அப்பா, அப்பா!'' என்று கதறிக் கொண்டே அதைத் தொடர்ந்து ஓடினாள் சிறுமி.

பாவம், அவளை இதயம் என்று ஒன்று படைத்திருந்த பெரிய மனிதரும் பொருட்படுத்தவில்லை; இதயம் என்று ஒன்று படைத்திராத காரும் பொருட்படுத்தவில்லை. முனிசாமி மட்டும் கலங்கிய கண்களுடன் திரும்பி, ''நீ போம்மா, நான் இதோ வந்துட்றேன்னு சொல்லு!'' என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

இந்தக் காட்சி என்னைத் தொட்டது; என் இதயத்தைச் சுட்டது. சட்டைப் பைக்குள் கையை விட்டுப் பார்த்தேன்; பாழும் பணம் என்னைக் கைவிடவில்லை; 'நானும் மனிதன்' என்று காட்டிக்கொள்ள ஒரே ஒரு ஐந்து ரூபாய் நோட்டு அதில் இருந்தது. அதை எடுத்து அந்தச் சிறுமியிடம் கொடுத்தேன்; அவள் அதைப் பெற்றுக்கொண்டு ஓடினாள், நான் திரும்பினேன்; அதற்குள் தமது காரில் ஏறி உட்கார்ந்து என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்த

பரந்தாமனார், "என்னால் உனக்கு இன்று ஐந்து ரூபாய் நஷ்டம்; அப்படித்தானே?" என்றார் வழக்கம்போல்.

"அது எப்படி நஷ்டமாகும்? தெருவிலா வீசி எறிந்து விட்டேன்?" என்றேன், நானும் ஏறி அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டே.

"சந்தேகமென்ன, தெருவில் வீசி எறிந்த மாதிரி தான்! அதனால் உனக்கு ஏதாவது லாபம் உண்டா?"

"ஐயா! எதைச் செய்தாலும் நீங்கள் லாபத்தோடு செய்துகொண்டு போங்கள்; எனக்கு லாபமும் வேண்டாம்; நஷ்டமும் வேண்டாம் - மனிதனாக மதித்து இரங்கும் மனம் இருந்தால் போதும்!" என்றேன் நான்.

"ம், நான் சொன்னால் நீ கேட்கவா போகிறாய்? சொல்பவர்கள் சொன்னால் அவசியம் கேட்பாய்!" என்றார் அவர் பெருமூச்சு விட்டுக்கொண்டே.

"ஒரு நாளுமில்லை. யார் என்ன சொன்னாலும் சரி, எனக்கு எது சரி என்று படுகிறதோ அதைத்தான் எடுத்துக் கொள்வேன்!" என்றேன் நான்.

"உண்மையாகவா!"

"ஆமாம்."

"எங்கே, இன்னொரு முறை சொல், பார்ப்போம்?"

"எத்தனை முறை வேண்டுமானாலும் சொல்வேன் - எனக்கு எது சரி என்று படுகிறதோ, அதைத்தான் எடுத்துக் கொள்வேன்!"

அவர் சிரித்துவிட்டு, "சாந்தினி சொன்னால் கூடவா கேட்கமாட்டாய்!" என்றார் விஷமத்தனத்துடன்.

ஒரு கணம் எனக்கு ஒன்றுமே புரியவில்லை; மறு கணம் என்னை நானே ஒருவாறு சமாளித்துக்கொண்டு,

''சாந்தினி சொன்னால் நான் ஏன் கேட்க வேண்டுமாம்?'' என்றேன்.

''என்ன மாப்பிள்ளை ஸார், எனக்கு ஒன்றுமே தெரியாது என்று நினைத்துக்கொண்டீரா? எல்லாம் தெரியும் ஸார், தெரியும். வேண்டுமானால் நீரே இந்த 'டயரி'களைப் பாரும்!'' என்று அவர் இரண்டு டயரிகளை எடுத்து என்னிடம் கொடுத்தார்.

வியப்பும் திகைப்பும் ஒருங்கே அடைந்தவனாய் அவற்றை நான் பிரித்துப் பார்த்தேன். பின் வரும் வரிகள் என் கண்களில் பட்டுத் தெறித்தன:

*..... காந்திஜியின் விடுதலையைக் கோரி எழுந்த கிளர்ச்சியில் அவர் பங்கெடுத்துக் கொண்டதை நினைக்க நினைக்க எனக்கு எவ்வளவோ பெருமையாயிருக்கிறது; அவரைப் பற்றிப் பிறர் பேசுவதைக் கேட்கக் கேட்க என்னை என்னவோ செய்கிறது. அதற்கு முன் அப்பா வுடன் அவர் போட்ட சண்டையைத்தான் என்னால் எப்படி மறக்க முடியும்?....*

*..... இன்று ஆஸ்பத்திரிக்குச் சென்றிருந்தேன், அப்பாவுக்குத் தெரியாமல்தான். என்ன துணிச்சல் எனக்கு, இப்பொழுதுதான் அவரை நான் முதன்முறையாகப் பார்க்கிறேனாக்கும்?*

*நான் அவரைப் பார்த்தேன்; அவர் என்னைப் பார்த்தார். முதலில் நானா பேசுவேன்? அதுதான் இல்லை; அவரே பேசினார். அதிகமாக ஒன்றும் பேசவில்லை; 'சாந்தினி, நீயா!' என்று எண்ணி ஒரே ஒரு வார்த்தைதான் பேசினார். நான் மட்டும் அதிகமாகப் பேசிவிடுவேனா? ஊஹூம்; 'என்னை மறவாதீர்!' என்று பதிலுக்கு நானும் எண்ணி ஒரே ஒரு வார்த்தை பேசிவிட்டு எடுத்தேன் ஓட்டம்!...*

... பாவம், தாயாரின் தகனக் கிரியையின் போதுகூட அருகிலிருக்கும் பாக்கியம் அவருக்குக் கிட்டவில்லை; பாழும் சர்க்கார்தான் அவரை பரோலில் விடக்கூட மறுத்து விட்டார்களாமே!....

... இந்தச் சித்ராவுக்கு அவர்மேல் ஏன்தான் இவ்வளவு ஆத்திரமோ தெரியவில்லை. ம், என்ன இருந்தாலும் பெண்; அவளுக்காக நாம் இரங்கத்தான் வேண்டும்.

சிநேகம் செய்து கொள்வதாயிருந்தாலும் சரி, சண்டை பிடித்துக் கொள்வதாயிருந்தாலும் சரி - பெண்களைத்தான் யாரும் மிஞ்ச முடியாதே!...

..... அப்பாடா! மூன்று வருடங்களுக்குப் பின் அவர் இன்றுதான் எங்கள் வீட்டைத் தேடி வந்திருக்கிறார். மனங்கனிந்து அவரை வரவேற்கச் சமூகம் என்னை அனுமதிக்க மாட்டேன் என்கிறது. என்ன செய்வேன், கழுத்தில் தாலி ஏறினால்தான் அந்த அனுமதி எனக்குக் கிடைக்கும் போலும்?...

.... அடாடா, கல்யாணமாவதற்கு முன்னால் இந்த ஆண்கள் எவ்வளவு நல்லவர்களாயிருக்கிறார்கள்! சொன்னது சொன்னபடி வந்துவிட்டாரே?

இருவரும் கடற்கரைக்குச் சென்றோம். அதுவரை என்ன வெல்லாமோ பேசவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்த நான், அவரைக் கண்டதும் என்ன பேசுவதென்றே தெரியாமல் விழித்தேன். அதனாலென்ன, எங்கள் கண்கள்தான் பேச வேண்டியவற்றை யெல்லாம் பேசி விட்டனவே!

அடுத்தாற்போல் அங்கிருந்த ஒரு படகின் மறைவில் சற்றே விலகி உட்கார்ந்தேன் நான்; சற்றே நெருங்கி உட்கார்ந்தார் அவர். நான் விலக அவர் நெருங்க, அவர் நெருங்க, நான் விலக, நான் விலக அவர் நெருங்க, அவர் நெருங்க நான் விலக, இருவரும் கடைசியாக வாய் விட்டுச்

*சிரித்து விட்டோம். நாங்கள் சிரித்தால் இந்த நீலக்கடல் அலைகளுக்கு என்ன வந்ததாம்? அவை ஏன் எங்கள் நெஞ்சின் அலைகளோடு மோதிச் சிரிக்கவேண்டுமாம்?.....*

இதற்குமேல் டயரிகளைப் பார்க்க நான் விரும்ப வில்லை; மூடி வைத்துவிட்டு முகத்தில் அசடு வழியப் பரந்தாமனாரைப் பார்த்தேன். "இப்போது சொல்லும்! சாந்தினி சொன்னபடி நீர் நடந்தது உண்மையா, இல்லையா?" என்றார் அவர். என்றைக்கும் இல்லாத 'உம்'மை அன்று நான் எதிர்பாராத விதமாகப் போட்டு.

"உண்மைதான்; என்னை மன்னியுங்கள்!" என்றேன் நான், தயங்கிய வண்ணம்.

அவர் என்னைத் தட்டிக்கொடுத்தபடி, "சரி, உம்மை நான் மன்னிக்கிறேன்; சாந்தினியை யார் மன்னிப்பது?" என்று கேட்டார்.

"நீங்கள் தான் மன்னிக்கவேண்டும்!"

"அதுதான் முடியாது! தவறுக்கேற்ற தண்டனையை இருவரும் அனுபவித்தே தீரவேண்டும்; இறங்கும் கீழே!" என்றார் அவர்.

அப்பொழுதுதான் அவருடைய வீட்டு வாயிற்படியில் கார் வந்து நின்றிருப்பது எனக்குத் தெரிந்தது; பரபரப்புடன் கீழே இறங்கினேன்.

என் கரத்தை அழுத்திப் பற்றியபடி, "சாந்தினி, சாந்தினி!" என்று அவர் இரைந்தார்.

"என்ன, அப்பா!" என்று கேட்டுக் கொண்டே அவள் வெளியே வந்தாள்.

"இப்பொழுது சொல், இவரும் நீயும் சேர்ந்து என்னைத் தாத்தாவாக்கச் சதிசெய்தது உண்மைதானே!" என்றார் அவர்.

அவ்வளவுதான். என்னை அவள் ஏறெடுத்துக் கூடப் பார்க்கவில்லை; ''போங்கள், அப்பா!'' என்று சொல்லிக் கொண்டே ஓடிவிட்டாள்.

''சரி, முடிந்தது விசாரணை! தண்டனையை ஆயுள் தண்டனையாகவே ஏற்றுக்கொள்ள நீர் தயாரா?'' என்றார் அவர் என்னை நோக்கி.

''எங்கள் சதிக்கு நீங்களும் உடைந்தையாயிருந்தால் அவசியம் ஏற்றுக்கொள்கிறேன்!'' என்றேன் நான்.

## 14. ''இவர்தான் என் அண்ணா!''

விவரிக்க முடியாத உணர்ச்சியுடனும் பொங்கி வரும் மகிழ்ச்சியுடனும் வீட்டை நெருங்கிய என்னை வேற்றுக் குரல் ஒன்று வேதனையடையச் செய்தது. காரணம், அது பெண்ணின் குரலாயில்லை; ஆணின் குரலாயிருந்தது. அது தான் போகட்டுமென்றால் அந்தக் குரல் செங்கமலத்தினி டமோ, அவளுடைய தாயாரிடமோ பேசிக்கொண்டிருக்க வில்லை; சித்ராவுடன் பேசிக்கொண்டிருந்தது.

இருக்கட்டுமே, அதனால் என்ன? அந்தக் குரல் என்னுடைய மகிழ்ச்சிக்குக் குறுக்கே நிற்பானேன்? என் கால்கள் மேலே செல்லத் தயங்குவானேன்? விசித்திரமாக வல்லவா இருக்கிறது, இது!

நான் மட்டும் கல்யாணத்துக்கு முன்னால் ஒரு பெண்ணுடன் பேசலாம்; பழகலாம்; சித்ரா பேசக்கூடாது; பழகக்கூடாதா?

இவ்வாறு எண்ணியதும் என்னை நானே எண்ணி நகையாடிக்கொண்டு உள்ளே நுழைந்தேன். என்னைக் கண்டதும், ''இதோ வந்து விட்டார், இவர்தான் என் அண்ணா!'' என்றாள் சித்ரா, தன்னுடன் பேசிக்கொண் டிருந்தவரிடம்.

''வணக்கம்'' என்றார் அந்தப் புதிய மனிதர், என்னை நோக்கி.

பதிலுக்கு ''வணக்கம்'' என்று சொல்லக்கூட எனக்கு ஏனோ வாய் வரவில்லை; பேசாமல் எதிரே உட்கார்ந்து அவரைக் கூர்ந்து நோக்கினேன்.

சித்ரா ஒரு கணம் என்னை உற்றுப் பார்த்தாள்; மறுகணம் 'கலீர்' என்று சிரித்தாள்.

எனக்குச் 'சுறுக்'கென்றது; சித்ராவின் பக்கம் பார்வையைத் திருப்பினேன்.

''அவரை ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள், அண்ணா! நீங்கள் நினைப்பதுபோல நாங்கள் நடப்பதாயிருந்தால் அதற்கு இதுவா இடம்? ஒன்று ஆஸ்பத்திரியாக இருக்க வேண்டும்; அல்லது கடற்கரையாக இருக்கவேண்டும்!'' என்றாள் அவள்!

இது எனக்கு என்னவோ போலிருந்தது. முகத்தில் அசடு வழிய, ''அது சரி; இவர் யார் என்று நீ எனக்குச் சொல்லவேயில்லையே?'' என்றேன் நான்.

''இவரா, இவர்தான் என்னைத் திருச்சியிலிருந்து சென்னைக்குக் கொண்டு வந்து சேர்த்த புண்ணியவான்!'' என்றாள் அவள்.

''அப்படியா!'' என்றேன் நான்.

''ஆமாம், அண்ணா; அன்றிரவு அந்தக் கிராதகன் வீட்டை விட்டுக் கிளம்பும்போது இருந்த தைரியம்

எனக்குக் கடைசிவரை இருக்கவில்லை; வழியிலேயே அது மறைந்துவிட்டது. அதற்கேற்றாற்போல் 'பெண்களுக்கு உதவி செய்வதற்கென்றே பிறந்திருக்கும் சில பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள்' என்னுடன் பேச முயன் றார்கள்; வலிந்து உதவி செய்யவும் முனைந்தார்கள். எதையும் பொருட்படுத்தாமல் என்பாட்டுக்கு நான் 'விறுவிறு'வென்று நடந்தேன். மனம் மட்டும் 'திக், திக்'கென்று அடித்துக்கொண்டேயிருந்தது. கடைசியாகத் துணிந்து என்னைத் தொடர்ந்து வந்த கறுத்த மீசைக்காரர் ஒருவர் பொறுமையிழந்து வழி மறித்தார்; நான் வெலவெலத்துப் போனேன். 'இங்கேயும் ஒரு சிவ குமாரனா!' என்று எண்ணி என் மனம் இடிந்தது. நல்ல வேளையாக அப்போது 'பாம், பாம்' என்று அலறிக் கொண்டே கார் ஒன்று என்னை நோக்கி வந்தது.

கடவுள்தான் கார் அவதாரம் எடுத்து வருகிறாரோ என்று ஒரு கணம் நினைத்தேன்; மறுகணம் அந்தப் பாவி சிவகுமாரனின் ஞாபகம் வந்து தொலைந்தது. ஒரு வேளை அவன்தான் காரில் நம்மைத் தேடிக்கொண்டு வருகிறானோ என்று பயந்தேன். எது எப்படியிருந்தாலும் இந்த மீசைக்காரனிடமிருந்து தப்பிப் பிழைத்தால் போதும் என்று எண்ணி, "ஐயா, ஐயா! கொஞ்சம் நிறுத்துங்கள், கொஞ்சம் நிறுத்துங்கள்!" என்று கத்திக் கொண்டே காருக்கெதிரே சென்று நின்றேன். என் வேண்டுகோள் நிராகரிக்கப் படவில்லை; கார் நின்றது. உள்ளே உட்கார்ந்திருந்த மனிதர் சட்டென்று கீழே இறங்கி, 'என்ன அம்மா, என்ன நடந்தது?' என்றார் பரபரப்புடன். 'ஒன்றுமில்லை; என்னைக் கொஞ்சம் ஸ்டேஷன் வரை கொண்டு போய் விட்டுவிடுகிறீர்களா?" என்றேன். 'இவ்வளவுதானே, ஏறிக்கொள்ளுங்கள்!' என்றார். அப்போதிருந்த நிலையில் நானும் தயங்காமல் ஏறிக் கொண்டேன். ஆயினும் என்றுமில்லாத அச்சம் என்னைக் கவ்விற்று; கடைக்

கண்ணால் அவரைக் கவனித்தேன். அவர் வாலிபரா யிருந்தார். அத்துடன் அவர் அணிந்திருந்த வேட்டி, சட்டை, அங்கவஸ்திரமெல்லாம் கதர் மயமாக இருக்கவே, என் அச்சம் அதிகரித்தது. ஏனெனில் சிவகுமாரனும் கதர் தான் அணிவது வழக்கம்! இருந்தாலும், 'மீசைக் காரனிடமிருந்து தப்பிப் பிழைத்தோமே!' என்ற ஆறுதலுடன் ஒரு பெருமூச்சு விட்டேன். 'இந்நேரத்தில் தனியாகக் கிளம்பி வரலாமா? என்றார் அவர். வேறு வழியின்றி நான் என்னுடைய கதையைச் சொன்னேன். அதைக் கேட்டு அவர் உருகினார். 'இதில் ஒன்றும் அதிசயமில்லை!' என்று நான் எண்ணிக்கொண்டேன்.

ஏனெனில் பெண் என்றால் பேயும் இரங்குமல்லவா? அப்படியிருக்கும்போது அவர் இரங்கியதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? அடுத்தாற்போல, 'நீங்கள் எங்கே போகவேண்டும்!' என்றார். 'சென்னைக்கு' என்றேன். 'நானும் அங்குதான் போகிறேன்' என்றார். 'சந்தோஷம்' என்றேன், அப்போதும் நான் அவரை நம்பாமல். அதற்கேற்றாற்போல் ஸ்டேஷனை அடைந்ததும் எனக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கிக் கொண்டு வந்தார் அவர்; நான் 'வேண்டாம்' என்று சொல்லவில்லை. காரணம், அந்தச் சமயம் என் கையில் ஒரு காலணாக்கூட இல்லாமலிருந்ததுதான். எனினும் சும்மா இருந்து விடவில்லை நான்; கையிலிருந்த வளையல்களில் ஒன்றைக் கழற்றிக் கொடுத்து, "இதை எங்கேயாவது விற்று டிக்கெட்டுக்குரிய காசை எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றேன். 'அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்' என்று சொல்லிக்கொண்டே, அவர் பத்து ரூபாய் நோட்டொன்றை எடுத்து நீட்டினார். 'அடடா! என்ன தாராளம், என்ன தாராளம்!' என்று நான் நினைத்துக் கொண்டேன். அத்துடன், நாமே ஓர் ஆண் பிள்ளையாயிருந்தால் அவர் அப்படியெல்லாம் உதவி

செய்ய முன் வருவாரா என்று வேறு எண்ணி எனக்குள் நானே சிரித்துக்கொண்டேன். அவரோ நீட்டிய நோட்டை நீட்டியபடி இருந்தார். எனக்குப் பரிதாபமாக இருந்தது. ரொம்ப வந்தனம், சென்னை போய்ச் சேருவதற்கு இந்த டிக்கெட் ஒன்றே போதும்!' என்றேன். அதற்குள் மணி அடித்து விடவே எல்லோரும் வண்டியை நோக்கி ஓடினர். இந்தச் சமயத்தில்தான் நான் கொஞ்சமும் எதிர்பாராத அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. அதாவது, என்னையும் தம்முடன் வண்டியில் ஏறிக்கொள்ளும்படி இவர் வற்புறுத்தவில்லை; பெண்கள் பெட்டியில் ஏற்றி விட்டுவிட்டு அவசர அவசரமாக நாலைந்து சாத்துக்குடி பழங்களை வாங்கி என்னிடம் கொடுத்துவிட்டு, 'எழும்பூர் ஸ்டேஷனில் உங்களைச் சந்திக்கிறேன்' என்று இரைக்க இரைக்கச் சொல்லிவிட்டு, விழுந்தடித்துக் கொண்டு போய் அடுத்த பெட்டியில் ஏறிக் கொண்டார். எனக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது; 'இப்படியும் ஓர் ஆண் பிள்ளை உண்டா!' என்று வியந்தேன். அத்துடன், அவர்மேல் அதுவரை கொண்டிருந்த தப்பபிப்பிராயத்தையும் கொஞ்சம் மாற்றிக்கொண்டேன்...''

''சரிதான்; கடைசியாக உன் உள்ளத்தில் அவருக்குக் கொஞ்சம் இடங்கொடுத்து விட்டாயாக்கும்?'' என்றேன் நான் குறுக்கிட்டு.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை, அண்ணா! பெண்கள் அவ்வளவு சீக்கிரம் இடங்கொடுத்துவிட மாட்டார்கள்; ஆண்கள்தான் பெண்களைக் கண்ட மாத்திரத்தில் இடங் கொடுத்து விடுவார்கள்!'' என்றாள் அவள்.

''சரி, அப்புறம்?''

''அப்புறம் என்ன, மறுநாள் காலை என்னை அவர் எழும்பூர் ஸ்டேஷனில் சந்தித்தார். அங்கிருந்து ஒரு டாக்ஸியில் என்னைக் கொண்டு வந்து இங்கே சேர்த்தார்.

இவ்வளவு தூரம் உதவி செய்த அவருக்கு எப்படி நன்றி செலுத்துவது என்றே எனக்கு அப்போது தெரியவில்லை. போகும்போது, 'ஒரு முறை எங்கள் வீட்டுக்கு வாருங்கள்!' என்றேன். அப்படியே ஆகட்டும்,' என்றார். அடுத்தாற் போல், யாருக்கும் தெரியாமல் வரவேண்டாம்; தெரிந்தே வாருங்கள்!' என்றேன். அன்று சிரித்துக் கொண்டே சென்றவர்தான்; இன்று வந்திருக்கிறார்!'' என்று கூறி முடித்தாள் அவள்.

''ரொம்ப சந்தோஷம்; என் தங்கையின் வார்த்தையைத் தட்டாமல் நீங்கள் இவ்வளவு தூரம் வந்ததுபற்றி ரொம்ப ரொம்ப சந்தோஷம்!'' என்றேன் நானும் சிரித்துக் கொண்டே.

''போங்கள் அண்ணா, நீங்கள் மட்டும் சாந்தினியின் வார்த்தையைத் தட்டாமல் ஆஸ்பத்திரிக்குப் போகவில்லை யாக்கும்?'' என்றாள் அவள்.

''சரி, நான் 'திருடன்' என்பதை ஒப்புக்கொள்கிறேன். நீ 'திருடி' என்பதை ஒப்புக்கொள்கிறாயா?''

''வேடிக்கைதான்; யாரை யார் திருடினார்களாம்;''

''அதுதான் எனக்கும் தெரியவேண்டும். நீ அவரைத் திருடினாயா, அவர் உன்னைத் திருடினாரா?''

''இந்த விஷயத்தில் பெண்கள் குற்றத்தை ஒப்புக் கொள்வது கடினம்!'' என்றார், அதுவரை சும்மா இருந்த அந்த ஆசாமி.

''அப்படியானால் நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று நான் திருப்பிக் கேட்டேன்.

அவ்வளவுதான்; முகத்தில் அசடு வழிய எழுந்து அவர் மெள்ள நழுவப் பார்த்தார். நான் அவருடைய கையைப் பற்றி, ''உங்கள் பெயர்?'' என்றேன்.

''கண்ணன்'' என்றார் அவர்.

''சரியான திருடன்தான்!'' என்றேன் நான்.

அதற்கு மேல் அவர் அங்கே நிற்கவில்லை; 'விட்டால் போதும்!' என்று நடையைக் கட்டிவிட்டார். நான் சிரித்துக்கொண்டே திரும்பினேன்; சித்ரா முகத்தைக் கைகளால் பொத்திக்கொண்டு உள்ளே ஓடிவிட்டாள். விடுவேனா நான்?

***''கண்ணன் மனநிலையைத் தங்கமே தங்கம்,***
***கண்டுவர வேண்டுமடி தங்கமே தங்கம்!***
***எண்ணம் உரைத்துவிடில் தங்கமே தங்கம்***
***ஏதெனிலுஞ் செய்வமடி தங்கமே தங்கம்!''***

என்ற பாரதியாரின் பாடலைத் திருப்பித் திருப்பிப் பாட ஆரம்பித்துவிட்டேன். சித்ரா வராத கோபத்தை வேண்டுமென்றே வரவழைத்துக் கொண்டு, ''ரொம்ப நன்றாய்த் தான் இருக்கிறது!'' என்றாள், அறையை விட்டு அம்பலத்துக்கு வந்து.

''ஏன், கண்ணன் பாடினால் தான் நன்றாயிருக்குமோ!'' என்றேன் நான்.

''ஆமாம், சாந்தினி பாடினால்தான் எனக்கு நன்றாயிருக்கும்!'' என்றாள் அவள், பதிலுக்குப் பதில் விட்டுக் கொடுக்காமல்.

இந்தச் சமயத்தில், ''என்ன விஷயம்?'' என்று கேட்டுக்கொண்டே சாந்தினி உள்ளே நுழைந்தாள்; நான் நடந்ததைச் சொன்னேன்.

''இவ்வளவுதானே, நாளைக்கே வேண்டுமானாலும் நானும் அப்பாவும் போய் அவருடைய மன நிலையைத் தெரிந்துகொண்டு வந்துவிடுகிறோம்!'' என்றாள் அவள்.

"இனிமேல் தெரிந்து கொள்ள என்ன இருக்கிறது? எல்லாம் முடிந்தாற்போலத்தான்!" என்றேன் நான்.

இவற்றையெல்லாம் மலர்ந்த முகத்துடன் கவனித்துக் கொண்டிருந்த செங்கமலத்தின் தாயார், "இந்த வேடிக்கை விளையாட்டெல்லாம் கல்யாணமாவதற்கு முன்னால்தான். அப்புறம் பார்க்கவேண்டுமே, என்னதான் ஆசையோடு கல்யாணம் செய்துகொண்ட அகமுடையான் பெண்டாட்டியாயிருந்தாலும் எலியும் பூனையுமாகி விடுவார்கள்!" என்றாள்.

"அதெல்லாம் 'பெரியோர் நிச்சயித்த வண்ணம்' நடக்கிறதே, அந்தக் கல்யாணத் தம்பதிகளிடந்தான் பார்க்க முடியும்!" என்றேன் நான்.

"ஏன், 'சிறியோர் நிச்சயித்த வண்ணம் நடக்கிறதே, அந்தக் கல்யாணத் தம்பதிகளிடம் மட்டும் பார்க்க முடியாதோ!" என்றாள் அவள்.

"அவசியம் பார்க்கலாம்!" என்று அவள் சொன்னதை அப்படியே ஆமோதித்தாள் சித்ரா.

"தவறு; உண்மையாகவே ஒருவரையொருவர் காதலித்துக் கல்யாணம் செய்துகொண்டவர்களாயிருந்தால் ஒருநாளும் அவர்கள் எலியும் பூனையுமாக இருக்க மாட்டார்கள்; மலரும் மணமுமாகவே இருப்பார்கள்!" என்றாள் சாந்தினி.

"கல்யாணமாவதற்கு முன்னால் அப்படித்தான் சொல்லத் தோன்றும்; அதற்குப் பிறகுதானே தெரியும் அந்தக் கஷ்டமெல்லாம்?" என்றாள் செங்கமலத்தின் தாயார், அப்பொழுதும் விடாமல்.

"கஷ்டம் இருக்கலாம்; ஆனால் அதிலும் ஓரளவு சுகம் இருக்கும். துன்பம் இருக்கலாம்; ஆனால் அதிலும் ஓரளவு இன்பம் இருக்கும்!" என்றாள் சாந்தினி.

''இருக்கும், இருக்கும். ஏன் இருக்காது? எல்லாம் கற்பனைதானே, நிச்சயம் இருக்கும்!'' என்று குறுக்கிட்டாள் சித்ரா.

''அப்படியானால் ஆக்ராவில் காட்சியளிக்கும் 'தாஜ் மஹால்' வெறுங் கற்பனைதானா?'' என்றாள் சாந்தினி.

''உண்மையாகத்தான் இருக்கட்டுமே, அந்தத் தாஜ் மஹாலைத் தன் உள்ளத்தில் அவன் கட்டியிருப்பான் என்பது என்ன நிச்சயம்?'' என்றாள் சித்ரா.

''அது முடிகிற காரியமா? அவ்வளவு பெரிய தாஜ்மஹாலை அவன் உள்ளத்தில் கட்ட முடியுமா?'' என்றேன் நான்.

''சரி; அது போகட்டும். லைலா - மஜ்னு, ரோமியோ - ஜூலியட் போன்ற காதலரின் கதைகளிலிருந்து நமக்கு என்னத் தெரிகிறது?'' என்று இன்னொரு கேள்வியைப் போட்டாள் சாந்தினி.

''காதல், வாழ்க்கையைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விடுமென்று தெரிகிறது!'' என்றாள் சித்ரா.

இதெல்லாம் சாதாரண மனிதர்களைப் பொறுத்த விஷயம். வள்ளி - தேவானை சமேதராக விளங்கும் முருகப் பெருமான், ராதா - ருக்மணி சமேதராக விளங்கும் கிருஷ்ண பரமாத்மா ஆகியவர்களைப் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று நான் குறுக்கிட்டுக் கேட்டேன்.

''என்னத்தைச் சொல்வது? அதே காரியத்தை மனிதன் செய்தால் தவறு; கடவுள் செய்தால் திருவிளையாடல்!'' என்றது வேறுக் குரல் ஒன்று. திரும்பிப் பார்த்தேன்; பாலு வந்து கொண்டிருந்தான்.

''வா பாலு, வா!'' என்று நான் அவனை வரவேற்றேன்; சித்ராவும், சாந்தினியும் உள்ளே சென்று விட்டனர்.

# 15. குப்பையிலே குருக்கத்தி!

''ஊரிலிருந்து இப்பொழுதுதான் வருகிறாயா? என்றாள் செங்கமலத்தின் தாயார்.

''இல்லை சித்தி, நேற்றே வந்துவிட்டேன்'' என்றான் பாலு.

''அம்மாவுக்கு உடம்பு எப்படியிருக்கிறது?''

''தேவலை; அவர்களைச் சேர்ந்தவர்கள் பகவான் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுப் பேசாமல் இருந்து விட்டார்கள். ஒரு பாவமும் அறியாத அவர் மீது ஒரே யடியாய்ப் பாரத்தைப் போடுவது அவ்வளவு சரியல்ல என்று நான் கொஞ்சம் சிரமம் எடுத்துக்கொண்டேன்; அதன் பயனாக அவர்களும் நோய் வாயிலிருந்து மீண்டு விட்டார்கள்.''

''அப்படிச் சொல்லாதே, அப்பா! அதுவும் அவருடைய சித்தப்படித்தான் நடந்திருக்கிறது!''

''ஒருவேளை அவர்கள் செத்துப்போயிருந்தால்?''

''நீ போடா, அப்பா! உன்னுடன் நான் பேச வர வில்லை; சின்ன வயதிலேயே நீ அதிகப்பிரசங்கியா யிற்றே!''

''அறிவுக்கு வேலை கொடுப்பவன் அதிகப்பிரசங்கி! அதுதானே உங்கள் எண்ணம்? - சரி, இருக்கட்டும் - எனக்குத் தெரியாமலே ஏன் செங்கமலத்துக்குக் கல்யாணம் செய்துவிட்டீர்கள்?''

''நான் கல்யாணம் செய்யும் வரை அவள் எங்கே காத்திருந்தாள்!''

''அப்படியானால் அவளே செய்து கொண்டு விட்டாளோ!''

''அந்த அக்கிரமத்தை ஏன் கேட்கிறாய்? எல்லா வற்றையும் இவரிடம் சொல்லியிருக்கிறேன்; கேட்டுத் தெரிந்துகொள்!'' என்று என்னைச் சுட்டிக் காட்டி விட்டு, கலங்கிய கண்களைத் துடைத்துக்கொண்டே அவள் உள்ளே சென்றுவிட்டாள்.

நடந்த கதையனைத்தையும் நான் அவனிடம் சொல்லி விட்டு, ''எப்படி உங்கள் 'இந்து' லா;'' என்றேன்.

''அதனாலென்ன, சட்டம் வழங்காத நீதியை நான் வழங்கிவிடுகிறேன்!'' என்றான் அவன்.

''அதெப்படி வழங்க முடியும்? உன் தாயார் அதற்குக் குறுக்கே நிற்க மாட்டாளா?''

''நிற்கட்டுமே, பிறரை வஞ்சிக்கும் விஷயத்தில்கூட மகன் தாயாருடன் ஒத்துழைக்க வேண்டுமா, என்ன?''

''மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது நம் தருமமாயிற்றே!''

''அதனாலென்ன, அவர்களைத் தெய்வமாக்குபவர்கள் ஆக்கட்டும்; நாம் மனிதர்களாக்குவோம். வாழ்க்கைக்காகத் தருமமா, தருமத்துக்காக வாழ்க்கையா? ஒன்று மாறும்போது இன்னொன்றும் மாறித்தானே தீர வேண்டும்?''

''அதற்கு வேண்டிய தைரியம்...''

''நிச்சயமாக இருக்கும், எனக்கு!''

''அப்படியானால்...?''

''என்னுடைய சொத்தில் பாதியை இன்றே வேண்டுமானாலும் சித்திக்கு நான் எழுதி வைத்துவிடுகிறேன்!''

''உண்மையாகவா?''

''அது மட்டுமல்ல; என்னிடமிருந்து அவர்களைப் பிரிப்பதற்குக் காரணமாயிருந்த இந்தப் பூணூலையும் இன்றே நான் அறுத்தெறிந்துவிடுகிறேன்! இனி நான் பார்ப்பனனல்ல; அவர்களும் திராவிடரல்ல - எல்லோரும் மனிதர்கள்!'' என்று முழங்கியவண்ணம், அந்த நிமிஷமே தன் சட்டையைத் தூக்கி அதற்குள்ளிருந்த பூணூலை அவன் அறுத்தெறிந்துவிட்டான்.

''ஆஹா! இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு பார்ப்பனரும் உன்னைப் பின்பற்றினால் எவ்வளவு நன்றாயிருக்கும்? திராவிடக் கழகத்தை ஒழித்துக்கட்ட இதை விடச் சிறந்த வழி வேறு ஏதாவது இருக்க முடியுமா?'' என்றேன் நான்.

அதே சமயத்தில் செங்கமலத்தின் தாயார் ஓடோடியும் வந்து ஏனோ பாலுவைக் கட்டித் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்!

இருவரும் வெளியே வந்தோம். ''செங்கமலம் என்னுடன் பிறக்கவில்லைதான்; ஆயினும் அவள் என் தங்கை!'' என்றான் அவன், அழுத்தந்திருத்தமாக.

''யார் இல்லையென்றார்கள்?'' என்றேன் நான்.

''அவளுக்குத் தீங்கிழைத்தவர்கள் யாராயிருந்தாலும் சரி, அவர்களை நான் சும்மா விடப்போவதில்லை!'' என்று சூளுரைத்தான் அவன்.

''விடக்கூடாது, விடவே கூடாது!'' என்றேன் நான்.

''இம்மாதிரி விஷயங்களில் என்னுடைய கட்சி என்ன தெரியுமா? மனிதன் உயிரைப் பணயமாக வைத்துவிட

வேண்டும் என்பதுதான்! எதிரி பணக்காரனாயிருக்கலாம்; அதற்காக ஏழை அஞ்ச வேண்டியதில்லை. அவனுக்குப் பணம் துணையாயிருந்தால் இவனுக்குப் பலம் துணையா யிருக்க வேண்டும்!''

''உண்மை; இறந்த காலப் பலாத்காரந்தானே எதிர்காலத்தில் வீரமாக வர்ணிக்கப்படுகிறது? - அதைப் புரிந்து கொள்ளாமல் அஹிம்சையைப் பற்றிப் பேசி என்ன பிரயோசனம்?''

''இருந்தாலும் முதலிலேயே நான் இந்த விஷயத்தில் என்னுடைய பலத்தைப் பிரயோகித்து விடப்போவ தில்லை; உன்னைப் போலவே நானும் நேரில் சென்று அவனுக்குச் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல் வேன். அதற்கு அவன் சம்மதிக்காவிட்டால் சட்டத்தின் துணை கொண்டு நடவடிக்கை எடுப்பேன். அதிலும் நீதி கிடைக்கவில்லையென்றால், அந்த நீதியை வழங்க நான் ஆண்டவனை நாட மாட்டேன்; நானே வழங்கிவிடுவேன்! ஆம், நானே வழங்கி விடுவேன்!'' என்று தன் முஷ்டியை உயர்த்திக் காட்டினான் அவன்.

''செய்; அப்படியே செய்! இம்மாதிரி அக்கிரமங்களை ஒழிக்க ஒரு தலைமுறை செத்தால்தான் இன்னொரு தலை முறையாவது மானத்தோடு வாழமுடியும்!'' என்று நான் அவனை உற்சாகப்படுத்தினேன்.

'''ரொம்ப சந்தோஷம் செல்வம்; இதனால் நமது நட்புரிமைக்குப் பங்கம் வராமலிருந்தால் சரி!'' என்று சொல்லிவிட்டு அவன் கிளம்பினான்.

வீறு கொண்ட அவன் நடை, 'வெற்றி அல்லது வீர மரணம் - வெற்றி அல்லது வீர மரணம்' என்று பறை சாற்றுவதுபோலிருந்தது!



மறுநாள் காலை வழக்கம்போல் நான் பத்திரிகை பார்த்துக் கொண்டிருந்தேன்; அதிலிருந்த செய்தி ஒன்று என்னைத் திடுக்கிட வைத்தது;

## செய்யாமங்கலத்தில் கோரக்கொலை

### தன்னை பலாத்காரம் செய்யவந்த பாதகனை ஒரு பெண் வெட்டி வீழ்த்தினாள்!

*- தஞ்சை, 27*

***தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த செய்யாமங்கலத்தில் நேற்று இரவு தன்னைக் கற்பழிக்க வந்த ஒரு காதகனை வீராங்கனையொருத்தி வெட்டி வீழ்த்திவிட்டாளாம். இந்தப் படுகொலைக்கு உள்ளானவன் செய்யாமங்கலம் ஜமீனைச் சேர்ந்த சிவகுமாரன் என்பவன். செய்தி கேட்டு ஓடிவந்த போலீஸாரிடம் அந்தக் கற்புக்கரசி தன் குற்றத்தைத் தீரத்தோடு ஒப்புக்கொண்டாளாம். அவளுடைய துணிச்சலைப் பற்றி ஊரெங்கும் ஒரே பேச்சாக இருக்கிறது. (ந.நி.)***

இதைப் படித்து முடித்ததும், "முந்திக்கொண்டு விட்டாள்; பாலுவை யாரோ ஒருத்தி முந்திக்கொண்டு விட்டாள்!" என்று நான் என்னையும் அறியாமல் கத்தினேன்.

"என்ன அண்ணா, என்ன விஷயம்?" என்று பரபரப்புடன் கேட்டாள் சித்ரா.

நான் விஷயத்தைச் சொன்னேன். "இப்பொழுது தான் எனக்கு நம்பிக்கை உதயமாகிறது!" என்றாள் அவள்.

"நம்பிக்கையா!"

"ஆமாம், தமிழ்நாட்டின்மேல் எனக்கு இப்பொழுது தான் நம்பிக்கை உதயமாகிறது!" என்றாள் அவள் அழுத்தந் திருத்தமாக.

''உண்மை; அவளும் உன்னைப்போல் அவனுக்குப் பயந்து ஓடி வராமல் இருந்தாளே, அதைச் சொல்!'' என்றேன் நான்.

அவள் சிரித்தாள், ''ஏன் சிரிக்கிறாய், சித்ரா?'' என்று கேட்டேன் நான்.

''ஒரு கன்னத்தில் அடித்தால் இன்னொரு கன்னத்தை அண்ணா திருப்பிக் காட்டும்போது தங்கை என்ன செய்வாள்?'' என்றாள் அவள்.

''இல்லை: உன் அண்ணனுக்கு அந்த விஷயத்தில் மட்டும் நம்பிக்கை இல்லவே இல்லை!''

''இருக்கலாம்; ஆனால் செங்கமலத்தின் விஷயத்தில் நீதி வழங்க உங்களால் முடியவில்லையே?''

''அதற்கு நீதான் குறுக்கே இருந்தாய்; அதனால் தான் அந்தப் பொறுப்பை நான் பாலுவிடம் விட்டு விட்டேன்!''

இந்தச் சமயத்தில் அங்கு வந்த செங்கமலம் ஒன்றும் புரியாமல் எங்களைப் பார்த்தாள். ''விஷயம் வேறொன்று மில்லை; நீயும் நானும் செய்ய வேண்டிய காரியத்தை இன்னொருத்தி செய்துவிட்டாள்!'' என்றாள் சித்ரா!

''ஆமாம். இதுவரை நாகரிகம் ஒழுக்கத்தைக் கொன்று வந்தது; இப்போது ஒழுக்கம் நாகரிகத்தைக் கொன்று விட்டது!'' என்றேன் நான்.

''எந்த ஒழுக்கம் எந்த நாகரிகத்தைக் கொன்று விட்டது?'' என்றாள் செங்கமலம் ஒன்றும் புரியாமல்.

பத்திரிகையில் வந்திருந்த செய்தியை நான் அவளுக்குக் காட்டினேன். அதன் பலன், மறுநாள் காலை எங்கள் வீட்டுக் கொல்லைக் கிணற்றில் அவளுடைய உயிரற்ற உடலைத்தான் எங்களால் பார்க்க முடிந்தது!

# 16. "தீனபந்து!"

சிவகுமாரனின் எதிர்பாராத மரணத்தாலும், செங் கமலத்தின் எதிர்பாராத பிரிவாலும் பாலுவின் உள்ளம் சமாதானம் அடைந்துவிடும் என்று நான் எதிர்பார்த்தேன்; அதற்குப் பதிலாக ஏற்கெனவே எரிமலைபோல் குமுறிக்கொண்டிருந்த அவன் உள்ளம் வெடித்தது. சிவகுமாரனின் மரணத்துக்கு யார் காரணமாயிருந்தாலும் செங்கமலத்தின் பிரிவுக்கு அவனே காரணம், அவனைப் பெற்றெடுத்த தந்தையே காரணம் என்று அவன் நினைத்தான். அதன் காரணமாக மேலும் மேலும் எழுச்சி யடைந்த அவன் உள்ளத்தை வீழ்ச்சியடையச் செய்யும் திருப்பணியில் நான் இறங்கவில்லை; 'நடப்பது நடக்கட்டும்' என்று பேசாமல் இருந்து விட்டேன்.

சித்ரா சொல்வதுபோல் தமிழ்நாட்டில்தான் ஏற் கெனவே வீரத்துக்குப் பஞ்சமாயிருக்கிறதே, அதை நான் ஏன் இன்னும் அதிகமாக்க வேண்டும்? பாரதந்தான் ஆன்ம ஞானம் தவிர மற்ற ஞானங்களுக்கெல்லாம் அந்நிய நாட்டானிடம் பிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறதே.

அதை நான் ஏன் இன்னும் வளர்க்க வேண்டும்?

பாலுவின் நிலை இப்படியிருக்க, அவனுடைய சித்தியின் நிலையோ அதற்கு நேர் விரோதமாயிருந்தது. ஏனெனில் செங்கமலம் இருப்பதும் ஒன்றுதான், இல்லாததும் ஒன்றுதான் என்று அவள் நினைத்தாள்.

அத்துடன், அவள் விட்டுச் சென்ற குழந்தை வேறு கொஞ்ச நஞ்சமிருந்த துக்கத்தையும் நாளடைவில் மறக்கச் செய்துவிட்டது. அதற்கேற்றாற்போல் அந்தக் குழந்தை யின் எதிர்கால வாழ்வுக்கு வேண்டியவற்றையெல்லாம் தன்னுடைய உயில் மூலம் உறுதி செய்து வைத்து விட்டான் பாலு.

இவர்களைப் பற்றிய கவலை ஒருவாறு தீர்ந்ததும் என்னைப் பற்றிய கவலையில் நான் ஆழ்ந்தேன் - விடுதலைக்குப் பிறகு எத்தனை நாட்களைத்தான் வீணாகக் கழித்துக் கொண்டிருப்பது? - ஏதாவது தொழில் செய்ய வேண்டுமென்று என் மனம் கிடந்து அடித்துக்கொண் டிருந்தது. அதற்காக ஒத்துழையாமை இயக்கத்துக்குப் பிறகு வக்கீல் தொழிலை மேற்கொள்ளவும் நான் விரும்பவில்லை; அதை விட்டு வேறு ஏதாவது ஓர் உத்தியோகத்தில் அமர்ந்து வாழ்க்கை நடத்தவும் என் மனம் இணங்கவில்லை. ஏற்கனவே எண்ணியதுபோல் பத்திரிகைத் தொழில்தான் என் மனத்துக்கு மிகவும் பிடித்திருந்தது. அதில் பல கஷ்டநஷ்டங்கள் உண்டு என்பதை நான் அறிந்துதான் இருந்தேன். ஆயினும் என் மனம் என்னவோ அந்தத் தொழிலைத்தான் விரும்பிற்று; அதை மேற்கொண்டால் தான் வயிற்றுக்குச் சேவை செய்து கொள்வதோடு, மக்களுக்கும் ஓரளாவது சேவை செய்ய முடியும் என்று நம்பிற்று. அதைக் கொல்ல என்னாலும் முடியவில்லை; பாரிஸ்டர் பரந்தாமனாலும் முடியவில்லை!

பத்திரிகைத் தொழிலுக்குப் பணமும் பக்க பலமும் அவசியம் என்று பலர் சொல்ல நான் கேட்டிருந்தேன். அவற்றில் ஒன்றைப் பற்றி எனக்குக் கவலையில்லை; அதுதான் பணம். அந்தக் கவலையை என்னுடைய வீட்டை விற்றோ, அல்லது அடமானம் வைத்தோ தீர்த்துக்

கொள்ளலாமென்று இருந்தேன். இன்னொரு கவலை பக்க பலத்தைப் பற்றியது. அதில் இரண்டு விதங்கள் இருந்தன. ஒன்று மக்களின் பலம்; இன்னொன்று ஆண்டவனுக்கு இருக்கும் அடியார்களின் பலத்தைப் போன்றது. மக்களின் பலத்தைப்பற்றி எனக்குக் கவலையில்லை; அதை எழுத்தின் சக்தியைக் கொண்டே திரட்டிவிடலாமென்ற தைரியம் எனக்கு இருந்தது. ஆனால் அடியார்களின் பலத்தை எழுத்தின் சக்தியைக் கொண்டு திரட்டிவிட முடியாது; அதற்கு எடுத்ததற்கெல்லாம் முகஸ்துதி செய்யும் அபூர்வ குணம் வாய்த்திருக்க வேண்டும். அந்தக் குணம் என்ன காரணத்தினாலோ அடியேனுக்கு வாய்த்திருக்கவில்லை.

இதனால் மேற்படி தொழிலில் நான் வெற்றி காண முடியாது என்று பாரிஸ்டர் பரந்தாமன் ஒரு முறையல்ல, பல முறை சொன்னார். அதை நான் பொருட்படுத்த வில்லை; வீட்டை அடமானம் வைத்துப் பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கினேன். அதைக் கொண்டு பத்திரிகை ஆரம்பிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்ய ஆரம்பித்தேன்.

கடைசியாக இதைக் கேள்விப்பட்ட பரந்தாமனார், ''பத்திரிகைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே ஒரு நாள் என்னைப் பார்க்க வந்தார்.

நான் அவரை வரவேற்று, ''என்ன பெயர் வைத்தால் நன்றாயிருக்கும்?'' என்று திருப்பிக் கேட்டேன்.

''அதுதானே எனக்குத் தெரியாது. பெயர் வைத்த பிறகு வேண்டுமானால், 'இது நன்றாயிருக்கிறது, அது நன்றாயில்லை' என்று சொல்வேன்.''

''அதாவது, வீட்டைக் கட்ட மாட்டீர்கள்; கட்டிய பிறகு அழகு சொல்வீர்கள் - அப்படித்தானே!''

"ஆமாம்; 'தமிழ்ப் பெருமக்களின் தனிப்பெருங் குணங்களில் அதுவும் ஒன்றல்லவா?"

"அது ஒன்றுதானா! இன்னும் எத்தனையோ இருக்கிறதே!"

"அதைப் பற்றி இப்பொழுது ஒன்றும் வேண்டாம்; உம்முடைய பத்திரிகைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறீர் என்பதை முதலில் சொல்லும்?"

"தீனபந்து!"

"பெயர் நன்றாய்த்தான் இருக்கிறது; ஆனால்...?"

"ஆனால் என்ன, ஆனால்?"

"பெயரளவில் வேண்டுமானால் பத்திரிகை 'தீன பந்துவாக இருக்கலாம்; கொள்கையில் மட்டும்..."

"பணக்காரரின் பந்துவாக இருக்க வேண்டுமோ?"

"அதைச் சொல்லித்தானா தெரிந்துகொள்ள வேண்டும்! சொல்லாமலே தெரிந்து கொண்டிருக்கலாமே!"

"பணக்காரருடைய தயவைக் கொண்டு பிழைக்க விரும்பவில்லை நான்; ஏழைகளுடைய தயவு இருந்தால் போதும் எனக்கு!"

"இப்படிச் சொன்னவன் யாரும் இதுவரை உருப்பட்ட தில்லை. அப்படி யாராவது உருப்பட்டிருந்தால் அவன் உண்மையில் 'ஏழை பங்காள'னாயிருந்திருக்க முடியாது; தலைசிறந்த 'ராஜதந்திரி'யாயிருந்திருக்க வேண்டும். அந்த ராஜதந்திரத்தோடு வேண்டுமானால் நீரும் நடந்து கொள்ளலாம். உதாரணமாக ஏழைகளுக்குப் பணக்காரர் ஏதாவது தீங்கு செய்தால் அதை எடுத்துச் சொல்லக் கூடாது. அப்படியே எடுத்துச் சொன்னாலும் அதற்குக் காரணம் பணக்காரர் என்று சொல்லிவிடக் கூடாது. நாடோ நகரமோ, அல்லது மழையோ வெய்யிலோ, அதுவும்

இல்லையென்றால் சர்க்காரோ அதிகாரிகளோ காரணம் என்று சொல்லிவிடவேண்டும். அதிலும் இப்போது வெள்ளைக்காரர் சர்க்கார் நடக்கிறதல்லவா? - எதற்கு வேண்டுட ானாலும் அவர்களைத் திட்டலாம்; தப்பித் தவறிச் சுயராஜ்யம் வந்து விட்டால்தான் கொஞ்சம் சங்கடமாயிருக்கும். அப்போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி அப்புறம் யோசித்துக் கொள்ளலாம். உம்மிடந்தான் ஏற்கெனவே நான் சொல்லியிருக்கிறேனே - இந்த ஜனநாயகம், சுதந்திரம் என்பதெல்லாம் ஒரு சிலர் பேரும் புகழும் அடைவதற்கும், பட்டமும் பதவியும் பெறுவதற்குத்தான் உபயோகமா யிருக்குமே தவிர மக்களின் நல்வாழ்வுக்கு வழிகாட்டு வனவாயிருக்காதென்று! - எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் இந்த அரசியல் என்பதே வெறும் பித்தலாட்டந்தான்.

மக்கள் உண்மையிலேயே நல்வாழ்வு பெற விரும்பினால் தங்களைத் தாங்களே நம்ப வேண்டுமே தவிர வேறு எதையுமே, எவரையுமே நம்பக் கூடாது. நாமும் அப்படித்தான்; நம்முடைய நல்வாழ்வுக்கு நம்மை நாமே நம்ப வேண்டும். அப்படி நம்பிக்கொண்டு ஏழைகளைப்பற்றி என்ன வேண்டுமானாலும் பேசலாம்; என்ன வேண்டுமானாலும் எழுதலாம் - எதைப் பற்றிப் பேசினாலும் சரி, எதைப் பற்றி எழுதினாலும் சரி - கருமத்தில் மட்டும் கண்ணாயிருக்க வேண்டும். அந்தக் கருமந்தான் பணத்தையும் பதவியையும் தேடுவது; பேரையும் புகழையும் நாடுவது. இவற்றை நேரான முறையில் அடைவது முடியாத காரியம். எனவே, பித்தலாட்டம் செய்வதில்தான் அவற்றைச் சுலபமாக அடைய முடியும். ஆனால் அதைப் பித்தலாட்டம் என்று சொன்னால் அவ்வளவு நன்றாயிராதல்லவா? அதற்காகத் தான் அதை 'ராஜதந்திரம்' என்று சொல்வது; அந்த ராஜ தந்திரத்தை நீரும் கடைப்பிடிக்கலாமே?''

''வந்தனம்; இந்த விஷயத்தில் உங்களுடைய யோசனையை ஏற்றுக் கொள்ள நான் தயாராயில்லை!''

''அப்படியானால் உம்முடைய பத்திரிகையை முழுக்க முழுக்க ஏழைகளின் ஆதரவைக் கொண்டே நடத்த முடியும் என்று நீர் நம்புகிறீரா?''

''ஆமாம்; அப்படி நம்புவதில் குற்றம் என்ன இருக்கிறது?''

''நன்றாய்ச் சொன்னீர்கள்; அப்படி நம்புவதிலா குற்றம் இல்லை? - நீர் சொல்லும் ஏழைகளுக்கு உண்ண உண வில்லை; உடுக்கக் கந்தையில்லை. இருக்க வீடில்லை; படுக்கப் பாயில்லை. இந்த நிலையில் இருந்து கொண்டு அவர்கள் உம்முடைய பத்திரிகையை எப்படி ஆதரிப்பதாம்? வேண்டுமானால் நீர் உம்முடைய காசைப் போட்டுப் பத்திரிகையை அச்சடித்து இனாமாக அவர்களுக்கு விநியோகம் செய்யலாம்; அப்படிச் செய்தாலும் ஏதாவது பலன் உண்டா என்றால் அதுவும் கிடையாது. ஏனென்றால் அவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்குமேல் எழுதப் படிக்கத் தெரியாது; அப்படியே தெரிந்தாலும் உம்முடைய பத்திரிகையைப் படிக்க அவர்களுக்கு நேரம் கிடைக்காது. பேசாமல் நான் சொல்வதைக் கேளும்: உம்முடைய லட்சியத்தை ஒரு பக்கமாக மூட்டை கட்டி வைத்துவிட்டு நடுத்தர வகுப்பினருக்காகப் பத்திரிகை நடத்தும். அதிலும் ஆண்களுக்காக நடத்தாதீர்; பெண்களுக்காக நடத்தும். மாதத்தில் மூன்று நாட்கள் வெளியே உட்கார வேண்டிய நிர்ப்பந்தம் இருப்பதால், அவர்கள் உம்முடைய பத்திரிகையை அவசியம் படிப்பார்கள், அவர்களுக்காக அவர்கள் வாழ்க்கையில் இல்லாத காதல் கதைகளை நிறையப் போடும். ஆயிரந்தடவை வந்தவையானாலும் பாதகமில்லை: ஆயிரத்தோராவது தடவையாக நீர்

போடலாம். அவற்றைத் தவிர வேறு ஏதாவது வேடிக்கையாக எழுதும்; தமிழ் நாட்டு வாசகர்கள் இன்னும் 'குழந்தைப் பிராய'த்திலிருப்பதால் வேடிக்கை காட்டினாற்தான் படிப்பார்கள். முடியுமானால் பகுத்தறிவுப் போட்டி நடத்தும்; தரித்திரம் பிடுங்கித் தின்பதால் பேராசை வளர்ந்து வரும் தமிழ் நாட்டில் அதற்குப் பேராதரவு இருக்கும்; அடிக்கும் கொள்ளையைச் சட்ட ரீதியாகவும் அடிக்கலாம்; அதை மறைக்கப் பண் பாட்டைப் பற்றியும் பேசலாம். அதற்குப்பின் அரசியல் இருக்கவே இருக்கிறது; அதையும் ஒரு கை பாரும்; எடுத்ததற்கெல்லாம் ஆமாம் போட்டு எழுதும்; நடுநடுவே உம்முடைய சொந்தப் பெருமையைப் பற்றியும் கொஞ்சம் சங்கோசத்துடன் சொல்லிக் கொள்ளும். அப்படிச் சொல்லிக் கொள்ளும்போது தயவு செய்து என்னை மட்டும் மறந்து விடாதீர்!''

''எதைச் சொன்னாலும் நீங்கள் இப்படிக் குதர்க்க வாதம் செய்தால் நான் என்னதான் செய்வது? எனக்கோ தேசத்துக்கு எந்த விதத்திலாவது சேவை செய்ய வேண்டுமென்று இருக்கிறது; அத்துடன் வயிற்றுக் கவலையையும் ஓரளவு தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று இருக்கிறது. இரண்டுக்கும் சேர்ந்தாற்போல் ஏதாவது தொழில் செய்ய வேண்டுமென்றால் அதற்குப் பத்திரிகைத் தொழிலை விட்டால் வேறு ஒன்றுமில்லையே?''

''ஏன் இல்லை? இந்தக் காலத்தில்தான் எல்லாமே தேசத் தொண்டாகப் பரிணமித்திருக்கிறதே! ஆலை முதலாளிகள் தாங்கள் செய்வது தேசத் தொண்டு என்கின்றனர்; துடைப்பம் தூக்குவோர்கள் தாங்கள் செய்வது சமூகத் தொண்டு என்கின்றனர். அவர்களைப் பின்பற்றி லேவாதேவிக்காரன், ஹோட்டல்காரன், பல சரக்குக் கடைக்காரன் எல்லோருமே தாங்கள் செய்யும்

தன்னலமற்ற சேவையைப் பற்றித் தாங்களே வானளாவப் புகழ்ந்து விளம்பரம் செய்துகொள்கின்றனர். சமீபத்தில் ஒரு விளம்பரம் வந்திருந்ததே, அதை நீர் பார்க்கவில்லையா? - முகுந்தலால் ராம்சேட் பீடிக்காரன் தன்னுடைய அறுபது வருட காலச் சேவையைப் பற்றி அதில் தம்பட்டம் அடித்துக் கொண்டிருந்தானே! அப்படியெல்லாம் இருக்கும்போது நீர் பத்திரிகைத் தொழிலை விட்டால் தொண்டு செய்ய வேறு தொழில் கிடையாது என்கிறீரே? பேசாமல் நீரும் வேண்டுமானால் ஒரு பீடிக் கம்பெனியை ஆரம்பித்துத் தேசத்திற்குத் தொண்டு செய்யுமே, ஐயா!''

இதற்கு நான் என்ன சொல்வது? சிரித்துவிட்டுப் பேசாமல் இருந்தேன்.

''சரி, உம்முடைய பத்திரிகை என்ன, வார வெளியீடா?''

''ஆமாம்.''

''என்ன விலை?''

''இரண்டணா!''

''செலவைப் பற்றித் திட்டம் போட்டிருக்கிறீரா? ஓர் இதழுக்கு என்ன செலவாகும்?''

''குறைந்தபட்சம் ரூபாய் இரு நூறாவது செலவாகும் என்று நினைக்கிறேன் - அது சரி, நீங்கள் ஏன் அதைப்பற்றிக் கேட்கிறீர்கள்?''

''ஒரு சின்ன கணக்குப் போட்டுப் பார்க்கத்தான்; உம்முடைய லட்சியத்தின்படிப் பத்திரிகை நடத்தினால் பத்தாயிரம் ரூபாயில் எத்தனை இதழ்கள் வெளியிட முடியும் என்று தெரிந்துகொள்ளத்தான்! - இப்பொழுது ஐம்பது இதழ்கள் வெளியிடலாம் என்று தெரிகிறது; எனவே ஒரு வருடத்துக்கு நான் தைரியமாகச் சந்தா கட்டலாம் - இல்லையா?''

''அதற்கு மேல் என்னால் பத்திரிகை நடத்த முடியாது என்கிறீர்கள் - அப்படித்தானே? எது எப்படியிருந்தாலும் என்னைப் பொறுத்தவரை ஆத்ம திருப்தியாவது அடைய முடியுமல்லவா?''

''அதை உம்முடைய பணத்தைக் கொண்டுதானா அடைய வேண்டும்? என்னைப்போல் ஊரார் பணத்தைக் கொண்டு அடையக் கூடாதா? நான்தான் தேசபந்து நிதியிலிருந்து உமக்கு வேண்டியப் பணம் தருகிறேன் என்று சொல்கிறேன், ஏன் வேண்டாம் என்கிறீர்? இல்லையென் றால் சில பெரிய புள்ளிகள் செய்வது போல நீரும் ஒரு நாற்பதினாயிரம் காங்கிரஸ் அங்கத்தினர் ரசீதுகளையாவது திருட்டுத்தனமாக அச்சிட்டு விற்பனை செய்யுமே! - அப்படி ஏதாவது செய்து நீர் ஆத்ம திருப்தி அடைந்தால் உம்மை நம்பி வயிற்றைத் திருப்தி செய்து கொள்ள நினைப்பவர்களுக்கு உம்மால் எந்தவிதமான தொல்லையும் இராது. அதை விட்டு விட்டு வயதுக்கு வந்த ஒரு பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டிருக்கும் நீர், அவளுக்கு ஆதரவாக இருந்த ஒரே ஒரு வீட்டையும் அடமானம் வைத்துவிட்டு ஆத்ம திருப்தி அடையப் போகிறேன் என்கிறீரே - இது தகுமா, முறையா, தருமந்தானா?'' என்று வழக்கம்போல் அடுக்கிக்கொண்டே போனார் அவர். எனக்கும் அவர் கடைசியாகச் சொன்ன விஷயம் சரியென்றே பட்டது. அதன்படிச் சித்ராவின் கல்யாணத்தை முதலில் நடத்தி முடித்துவிட்டு, அதற்குப் பின் பத்திரிகைத் தொழிலில் இறங்குவதென்று தீர்மானித்தேன்; அதற்கு வேண்டிய முயற்சிகளையும் அன்றே எடுத்துக் கொண்டேன்.

# 17. கண்ணன் வந்தான்!

நானும் பார்த்திருக்கிறேன்; நீங்களும் பார்த்திருக்கலாம் - சில சமயம் நமக்குப் படித்தவர்களைவிட, பாமரர்கள் பகுத்தறிவுள்ளவர்களாகத் தோன்றுகிறார்கள். தீர்க்க தரிசனத்துக்குப் பெரிய பெரிய ராஜதந்திரிகள்கூட அவர்களிடம் பிச்சை எடுக்க வேண்டும் போலிருக்கிறது. கண்ணனைப் பற்றி அவனுடைய தாயாரும் தந்தையும் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தபோது எனக்கு அப்படித்தான் தோன்றிற்று.

ஆம், பெற்றெடுத்த பிள்ளை அவர்களுக்குப் பிடிக்க வில்லை; அவனை மாலையிட முன்வந்த பெண்ணைத் தான் அவர்களுக்குப் பிடித்திருந்தது. இதில் ஒன்றும் ஆச்சரியமில்லை; பிடித்திராவிட்டால்தான் ஆச்சரியமா யிருந்திருக்கும் ஏனெனில் வெளி அழகோடு உள்ளழகும் சித்ராவிடம் பொருந்தியிருந்தது. ஆசைச் கனவுகள் பல கண்டு, ஆகாயத்தில் மிதந்து கொண்டிருக்க வேண்டிய அந்தச் சின்னஞ்சிறு வயதிலேயே அவள் போதுமான அளவுக்குப் பிரபஞ்ச ஞானம் பெற்றிருந்தாள். முக்கிய மாகக் காதலைப் பற்றி அவள் கொண்டிருந்த அபிப் பிராயம் இலக்கியத்துக்கு ஒத்ததாயில்லாமல் இருந்தாலும் வாழ்க்கைக்கு ஒத்ததாயிருந்தது. அனுபவமில்லாமலே அந்த விஷயத்தில் தன் அறிவைக் கொண்டு அவள் ஒரு முடிவுக்கு வந்திருந்தது எனக்கு வியப்பாயிருந்தாலும் விரும்பத்தக்கதாயிருந்தது. அதைப் பற்றி அவளைப் பார்க்க வந்திருந்தவர்களிடம் அன்று நான் வேடிக்கையாகத் தெரிவித்தேன். அவர்களும் அதை வெகுவாக அனுபவித்து அவளைப் பெரிதும் பாராட்டினார்கள்.

கல்யாண வியாபாரத்துக்கு வேண்டிய பேரமெல்லாம் ஒருவாறு பேசி முடிந்தபிறகு, "பெண்ணை எங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அத்துடன், நீங்கள் சொல்வதிலிருந்து அவள் புத்திசாலியாகவும் இருப்பாள் என்றுத் தெரிகிறது. ஆனால் பிள்ளையாண்டான் அவளுக்கு ஏற்றபடி இருக்கவேண்டுமே என்று தான் எங்களுக்குக் கவலையாயிருக்கிறது! என்றாள் கண்ணனின் தாயார்.

"ஆரம்பித்து விட்டாயா?" என்றார் அவள் கணவர்.

"அதனாலென்ன, சொல்ல வேண்டியதை நாம் சொல்லிவிடுவோம். அதற்குப் பின் அவன்பாடு; அவள்பாடு!" என்றாள் அவள்.

"ஏன், பிள்ளையாண்டானுக்கு என்ன?" என்று கேட்டார் பாரிஸ்டர் பரந்தாமன்.

"அவன் என்னமோ நல்லவன்தான்; கொஞ்ச நாட்களாக அவன் நடந்து கொள்ளும் முறைதான் எங்களுக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!"

"ஏன், ஏதாவது தவறான வழியில்..."

"ஆமாம்; அது என்னவோ எங்களுக்குத் தவறான வழியாகத்தான் படுகிறது. ஆனால் அவனோ அதுதான் நல்ல வழி என்று சாதிக்கிறான்!"

"அது என்ன, அப்படிப்பட்ட வழி?"

"அதுதான் - காங்கிரஸ் காந்தின்னு கொஞ்ச நாட்களாக எங்கே பார்த்தாலும் அடிபட்டுக் கொண்டிருக்கிறதே, அந்த வழிதான்!"

"இதுதானா, சரியாய்ப்போச்சு; நாங்கள் என்னமோ ஏதோ என்று பயந்தே போய்விட்டோம் - ஏன், அது நல்ல வழிதானே?" என்றேன் நான்.

"நல்ல வழியுமாச்சு, கெட்ட வழியுமாச்சு! யாராவது தான் சாக மருந்து தின்பார்களா? - காங்கிரஸ் கீங்கிரஸ்

எல்லாம் ஏதோ காரியார்த்தமாகத்தான் நடக்கிறது என்று தோன்றுகிறது எனக்கு!''

''காரியமில்லாமல் எதுதான் நடக்கும்? வெள்ளைக் காரனிடமிருந்து நம்முடைய தேசம் விடுதலையடைய வேண்டாமா? அந்தக் காரியத்துக்காகத்தான் காங்கிரஸ் நடக்கிறது!''

''விடுதலை அடையாவிட்டால் என்னவாம்?''

''அந்நியனுக்கு நாம் என்றும் அடிமையாயிருப்போம்!''

''விடுதலையடைந்துவிட்டால் நம் ஊரானுக்கே நாம் அடிமையாயிருப்போம்; அவ்வளவுதானே விஷயம்?''

''ஒரேயடியாக அப்படிச் சொல்லிவிட முடியுமா? இப் பொழுது நம்முடைய பணத்தையெல்லாம் வெள்ளைக் காரன் கொள்ளையடித்துக் கொண்டு போகிறான்; இதனால் எத்தனையோ கஷ்ட நஷ்டத்துக்கு நாம் உள்ளாகிறோம். தேசம் விடுதலையடைந்துவிட்டால்...''

''நம் ஊரானே நம்முடைய பணத்தைக் கொள்ளை யடிப்பான்! ரொம்ப அழகுதான், போங்கள். விடுதலை யாவது கிடுதலையாவது! ராமன் ஆண்டாலும் ராவணன் ஆண்டாலும் அரசாங்கம் அரசாங்கந்தானே? - அதற்கு ஓரளவு கட்டுப்பட்டு நாலு பேரைப்போல நாமும் நன்றாக வாழ வழி என்ன என்று பார்ப்பதை விட்டுவிட்டுத் தறுதலையாகத் திரிவதில் என்ன அர்த்தமிருக்கிறது?''

அவ்வளவுதான்: ''பேஷ்! சொல்லுங்கள்; அதையே இன்னொரு முறை அடித்துச் சொல்லுங்கள்!'' என்று கைகொட்டி ஆரவாரித்தார் பரந்தாமனார்.

அவருக்கு மட்டுமா? இந்த விஷயத்தில் சித்ராவுக்கும் பரம சந்தோஷம்; பொத்துக்கொண்டு வந்த சிரிப்பை அடக்க முடியாமல் 'களுக்'கென்று சிரித்துவிட்டாள்!

சாந்தினியோ என்னை அனுதாபத்துடன் பார்த்தாள். அந்த அம்மாளோ அத்துடன் விடுவதாயில்லை; ''இன்

னொரு முறை என்ன, எத்தனை முறை வேண்டுமானாலும் சொல்வேன். வீடு வாசலைப் பார்த்துக் கொள்ளாமல், பயிர் பச்சையைக் கவனித்துக் கொள்ளாமல் கட்சி என்ன வேண்டிக் கிடக்கிறது, கட்சி? ஒருவன் தலைவனாயிருக்க ஓராயிரம் பேரையாவது தொண்டர்களாக்குவது தானே கட்சி?'' என்று மேலே ஏதேதோ சொல்ல ஆரம்பித்து விட்டாள் அவள்.

''நன்றாய்ச் சொன்னீர்கள், நன்றாய்ச் சொன்னீர்கள்! இவர்கள் தான் சமதர்மத்தைப் பற்றிப் பேசுகிறார்களம்மா. இவர்கள் தான் சமதர்மத்தைப் பற்றிப் பேசுகிறார்கள்!'' என்றார் பரந்தாமனார்.

''அதுமட்டுமா? கொல்லைக்குத் தொல்லை கொடுக்கிறது என்பதற்காகக் குரங்கினத்தையே அழித்துவிட வேண்டும் என்று சொல்பவன் அஹிம்ஸையைப் பற்றிப் பேசுகிறான்; 'எல்லார்க்கும் நல்லவன்' என்று பெயரெடுப்பதற்காக எடுத்ததற்கெல்லாம் பொய் சொல்பவன் சத்தியத்தைப் பற்றிப் பேசுகிறான் - இதெல்லாம் வேடிக்கையாயில்லையா?''

''வேடிக்கைதான், வேடிக்கைதான்; வேண்டுமானால் அதைப் பற்றி அழகாகப் புத்தகம் எழுதி, அழகாக அச்சிட்டு, அழகாக வியாபாரம் செய்யலாமே?''

''அதையும் சொல்லிப் பார்த்தேன்; கேட்டால் தானே? சோறு, சோறு' என்று அடித்துக் கொள்பவர்களிடம் போய், 'தேசம், தேசம்' என்கிறான்; 'வேலை, வேலை, என்று அடித்துக் கொள்பவர்களிடம் போய் 'விடுதலை விடுதலை' என்கிறான்; 'கட்டத் துணி இல்லையே? என்று கதறுபவர்களிடம் போய், 'கதரை வாங்கிக் கட்டவில்லையே!' என்கிறான்; 'வாங்கக் காசில்லையே!' என்று வாடுபவர்களிடம் போய், 'வருகிறது சுதந்திரம்!' என்கிறான். இப்படிப்பட்டவனைக் கட்டிக்கொண்டு அவள் என்னதான் செய்யப்போகிறாளோ, அதுதான் எனக்குத் தெரியவில்லை!'' என்றாள் அவள்.

"அந்தக் கவலை இனிமேல் உங்களுக்கு வேண்டாம்; சித்ரா அவனைப் பார்த்துக் கொள்ளவேண்டிய விதத்தில் பார்த்துக்கொள்வாள்!" என்றார் பரந்தாமனார்.

"அதைத்தான் நாங்களும் சொல்கிறோம்; அவள் தான் அவனுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி நல்ல வழிக்குத் திருப்ப வேண்டும்!"

"ஆஹா! சொல்வாள்; சொல்வதைக் கேட்காவிட்டால் கன்னத்தில் அறைந்துகூடச் சொல்வாள்!"

"அறையட்டும்; நன்றாய் அறையட்டும். எப்படி யாவது அவர்கள் இருவரும் நன்றாயிருந்தால் சரி!" என்று சொல்லிவிட்டு அவர்கள் எழுந்தார்கள்.

நானும் பாரிஸ்டர் பரந்தாமனும் வாசல் வரை சென்று அவர்களை வழி அனுப்பிவிட்டு வந்தோம்.

"சித்ராவின் விஷயம் முடிந்தது; உம்முடைய விஷயம் என்ன?" என்றார் பரந்தாமனார்.

"எந்த விஷயத்தைப் பற்றிக் கேட்கிறீர்கள்?" என்றேன் நான்.

"கல்யாண விஷயத்தைப் பற்றித்தான்!"

"முதலில் சுதந்திரம்; பிறகுதான் கல்யாணம்!" என்றேன் நான்.

"அதுவும் சரிதான்; வெள்ளைக்காரனுக்கு அடிமையா யிருந்து கொண்டு, சாந்தினிக்கும் அடிமையாயிருக்க முடியுமா?" என்றார் அவர் சிரித்துக்கொண்டே.



சித்ராவின் கல்யாணம் நடந்து முடிந்ததும் நான் பத்திரிகாசிரியனானேன். அப்படியென்றால் அதன் கடைசிப் பக்கத்தில் என்னுடைய பெயரை அச்சிட்டுக்

கொள்வதோடு நான் நின்றுவிடவில்லை; தீனபந்து என்றால் நான், நான் என்றால் தீனபந்து என்று சொல்லும் அளவுக்கு அதற்காக அல்லும் பகலும் அனவரதமும் உழைத்தேன். வாசகர்களின் ஆரம்ப உற்சாகத்தை நம்பி, என் அறிவை நான் அவர்களிடம் அடகு வைத்தேன்.

ஒரு நாட்டின் வளத்துக்கு வாணிபம் அவசியம்; அந்த நாடு தன்னைக் காத்துக்கொள்வதற்கு ராணுவமும் அவசியம். இதை யாரும் மறுக்க மாட்டார்கள். இந்த இரண்டு விஷயங்களிலும் விசேஷமாகக் கவனம் செலுத்த வேண்டியது அரசாங்கத்தின் கடமை. அந்த அரசாங்கம் எந்தக் கட்சியின் நிர்வாகத்தில் இருந்தாலும் சரி; மேற்கூறிய இரண்டிலும் அவர்கள் கவனம் செலுத்தக் கடமைப் பட்டவர்களாகிறார்கள். அவ்வாறு கவனம் செலுத்தும் போது அவர்கள் வியாபார விஷயத்தில் சத்தியமாகச் சத்தியத்தைக் கடைப்பிடிக்க முடியாது; அப்படியே ராணுவத்தின் விஷயத்திலும் அஹிம்சையைக் கடைப் பிடிக்க முடியாது. 'முடியும்' என்றால் அது அரசியல் பித்தலாட்டமாகும்; பொதுமக்களை ஏமாற்றுவதாகும்; கேட்பவர்கள் நகைக்கக் கூடியதாகும்.

இந்த உண்மையை இன்று நான் உணர்கிறேன். ஆனால் அன்றோ? அவ்வாறு உணர்ந்து சொன்ன திரு.வ.உ.சி., வாஞ்சி போன்ற ஓரிரு தீர்க்கதரிசிகளை நான் வெறுத்தேன்; சத்தியத்திலும் அஹிம்ஸையிலும் பெரிதும் நம்பிக்கை வைத்தேன். வாழ்க்கையில் மட்டுமல்ல, அரசியலிலும் அவற்றைக் கடைப்பிடிக்கலாம் என்று மனமாரப் பொய் சொன்னேன்; அவற்றையே என்னு டைய பத்திரிகையின் தர்மமாகவும் கொண்டேன்.

அதற்குப் பின் கேட்க வேண்டுமா? 'எடு, ஜாமீன்!' என்றால், 'இதோ ஜாமீன்!' என்று எடுத்துக் கொடுத்தேன்; 'பிடி வாரண்ட்!' என்றால், 'எங்கே போலீஸ் லாரி?' என்று

விழுந்தடித்துக் கொண்டுவந்து கேட்டேன்; 'லாரி இல்லை, நடந்துதான் வரவேண்டும்!' என்றால், 'இதோ வந்து விட்டேன்!' என்று சொல்லிக்கொண்டே எழுந்து நடையைக் கட்டினேன்.

இந்த நிலையில் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த என்னால் முடியவில்லை. அதனால் ஏற்பட்ட பொருளா தார நெருக்கடியையும் என்னால் சமாளிக்க முடிய வில்லை.

விளம்பர வருவாயின் மூலம் ஒருவாறு சமாளிக்கலா மென்றால் அதற்கும் என் மனச்சாட்சி விரோதமாயிருந்தது. ஒரு பக்கம், 'அந்நிய நாட்டுப் பொருட்களைப் பகிஷ்கரி யுங்கள்!' என்று பிரசாரம் செய்துகொண்டு, இன்னொரு பக்கம், 'அந்நிய நாட்டுப் பொருட்களை அவசியம் வாங்குங்கள்!' என்று பிரசாரம் செய்யும் விளம்பரங் களைப் பத்திரிகைகளில் பிரசுரித்துக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? அது மட்டுமல்ல; இன்னொரு சங்கடமும் அதில் இருந்தது. அதாவது, சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் சங்கடந்தான் அது!

உதாரணமாக, வனஸ்பதி உடம்புக்குக் கெடுதல் என்பது மகாத்மாவின் அபிப்பிராயம்; ஆனால் தயாரிப் பாளர்களோ அதற்கு விரோதமாக விளம்பரம் செய் கிறார்கள். பணத்துக்காக அதைப் பக்கம் பக்கமாக வெளி யிடும் பத்திரிகை எப்படிக் காங்கிரஸ் பத்திரிகையாகும்? எப்படிக் காந்தி மகானைப் பின்பற்றும் பத்திரிகையாகும்?

எனவே, நான் கைவிடுவதற்கு முன்னால் தீனபந்து என்னைக் கைவிட்டு விட்டது. இருந்த வீட்டையும் கடன் கொடுத்தவன் வந்து ஆக்கிரமித்துக் கொண்டு விட்டான். வாடகைக்கு ஏதாவது ஓர் இடத்தைப் பிடிக்கவும் அந்தச் சமயம் எனக்கு வழியில்லை. இதனால் என்னுடைய நண்பர்களுக்கு நான் அடிக்கடி தொந்தரவு கொடுக்க

நேர்ந்தது; அவர்களுடைய தயவில் கிடைத்தபோது உண்பதும், நினைத்தபோது உறங்குவதுமாகக் காலத்தைக் கழிக்க வேண்டியிருந்தது.

பாரிஸ்டர் பரந்தாமனிடம் சென்று உதவி கோரவும் என்னுடைய சுயமரியாதை இடங் கொடுக்கவில்லை; சித்ராவிடமும் சாந்தினியிடமும் என்னுடைய நிலையைப் பற்றி சொல்லிக்கொள்ளவே நான் விரும்பவில்லை. 'இந்தக்' கஷ்டமெல்லாம் தேசம் விடுதலையடையும் வரைதானே? என்று சகித்துக்கொண்டு, அடுத்தடுத்து நடந்து வந்த ஜவுளிக்கடை மறியல், கள்ளுக்கடை மறியல் ஆகியவற்றிலெல்லாம் நான் கலந்துகொண்டேன். ஆயினும் எதிர்பார்த்ததற்கு விரோதமாக அரசாங்கத்தார் என் மண்டையை உடைத்து ஆஸ்பத்திரிக்குத்தான் அனுப்பினார்களே தவிர, சிறைக்கு அனுப்பவில்லை!

இதனால் என்னைப் போன்றவர்களுடைய உணர்ச்சி குன்றிவிடுமென்று எதிர்பார்த்த அதிகார வர்க்கம் கடைசியில் ஏமாற்றமடைந்தது. அதற்குப் பதிலாகத் காந்திஜியின் சரித்திரப் பிரசித்தி பெற்ற சட்ட மறுப்பு இயக்கத்தின்போது அது உச்ச நிலையை அடைந்தது. வடக்கே காந்திஜியின் தண்டியாத்திரை; தெற்கே ராஜாஜியின் வேதாரண்ய யாத்திரை, இந்த இரண்டு போராட்டங்களிலும் மக்களின் உணர்ச்சி கட்டுக்கடங்காமற் போய் விடவே, பிரிட்டிஷ் சர்க்காரின் அடக்கு முறை தலை விரித்தாடியது.

இந்த நிலையில் ஒரு நாள் சென்னை தினசரியொன்றில் நான் குற்றாலலிங்கத்தின் பெயரைக் கண்டேன். ஆச்சரியம் தாங்கவில்லை எனக்கு; விஷயம் என்னவென்று பார்த்தேன். வேதாரண்யத்திற்குச் செல்லும் தொண்டர்களுக்கு வேண்டிய வசதிகளை அவர் செய்து கொடுப்பதாக அதில் குறிப்பிட்டிருந்தது. ஒரு வேளை அவருடைய பெயரைக் கொண்ட வேறு யாராவது அவ்வாறு செய்கிறார்களோ என்று எண்ணி, அவருக்குத்

தெரிந்தவர்களையெல்லாம் விசாரித்துப் பார்த்தேன். சந்தேகமில்லை; சாட்சாத் அவரேதான்!

ஆஹா! பணத்தின் சக்தியைத்தான் என்னவென்பேன்? எவ்வளவு சீக்கிரத்தில் அது சிலரைத் தேச பக்தர்களாக மாற்றிவிடுகிறது! எவ்வளவு சீக்கிரத்தில் அது சிலரைத் தியாக சீலர்களாக, புண்ணிய புருஷர்களாகப் போற்ற வைத்து விடுகிறது!

அந்தப் பணத்துக்குப் பதிலாக உயிரைப் பணயம் வைத்துப் போராடிய எத்தனை தேசபக்தர்களை அது இருந்த இடம் தெரியாமல் மறைத்து விடுகிறது! ஊர் ஊராகத் தெருத் தெருவாக அலைய விடுகிறது!

தன்னலமற்ற அந்தத் தியாகிகளில் எத்தனை பேர் தலைவர்களின் புகழுரைக்கும் பொது மக்களின் பாராட்டுரைக்கும் இதுவரை பாத்திரமாகியிருக்கிறார்கள்?

திருப்பூர் குமரன் எங்கே; தீரன் பகத்சிங் எங்கே, எங்கே? வாஞ்சி எங்கே, வ.உ.சி. எங்கே, எங்கே?

இவ்வாறு எண்ணி நான் வியந்துகொண்டிருந்த போது, ''சிக்கவில்லை, என் கையில் அவன் இன்னும் சிக்க வில்லை!'' என்று கருவிக்கொண்டே வந்தான் பாலு.

அவனை நான் அனுதாபத்துடன் பார்த்தேன். அதற்குள், ''சிக்கட்டும், அவன் மட்டும் என் கையில் சிக்கட்டும்!'' என்று மறுபடியும் கருவிக்கொண்டே அவன் வெளியே சென்றான்.

அவனைத் தடுத்து நிறுத்தி, ''எங்கே போகிறாய்?'' என்றேன் நான்.

''அவனைத் தேடிக்கொண்டுதான் செல்வம், அவனைத் தேடிக்கொண்டுதான்!'' என்றான் அவன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை; ''அவன் எதற்கு இங்கே வரப் போகிறான்?'' என்று குழம்பினேன்.

"அதெல்லாம் உனக்கு எங்கே தெரியப் போகிறது? பாரிஸ்டர் பரந்தாமனும் அவனும்தான் இப்போது பரம நண்பர்களாயிற்றே?" என்றான் அவன்.

"நண்பர்களா!"

"ஆம், தங்களைக் காத்துக்கொள்வதற்காக அவர்கள் இருவரும் இப்போது தேசத்தைக் காக்கத் துணிந்து விட்டார்கள் செல்வம், தேசத்தைக் காக்கத் துணிந்து விட்டார்கள்!" என்று அவன் இரைந்தான்.

"அப்படியானால் இப்போது அவன் இங்கே வந்திருக்கிறானா, என்ன?"

"அப்படித்தான் சொல்கிறார்கள்!"

அதற்குமேல் அவனை நான் ஒன்றும் கேட்கவில்லை; "கலக்கட்டும், சமுத்திரத்தில் சாக்கடைகள் கலக்கட்டும்!" என்று சொல்லிவிட்டுத் திரும்பினேன்.

அவன் போய்விட்டான். அதற்குப் பின் நான் அவனைச் சந்திக்கவில்லை; அன்றே சென்னைக் கடற்கரையில் நான் கைது செய்யப்பட்டு விட்டதுதான் அதற்குக் காரணம்!

## 18. தியாக சிகரம்!

வழக்கம்போல் விசாரணை முடிந்து வேலூர் சிறை வாசலில் நான் போலீஸ் லாரியை விட்டுக் கீழே இறங்கியதும், "வாரும் ஐயா, வாரும். தீனபந்துவின் 'முடுவிழா'வுக்குப் பிறகு உம்மை நான் பார்க்கவேயில்லையே!" என்று என்னை வரவேற்றார் பாரிஸ்டர் பரந்தாமன்.

"சரியாய்ப் போச்சு; இங்கேயும் வந்துவிட்டீர்களா?" என்றேன் நான்.

அதைப் பொருட்படுத்தாமல், "என்ன இருந்தாலும் நீர் இப்படிச் செய்திருக்கக்கூடாது!" என்றார் அவர்.

"என்ன செய்திருக்கக் கூடாது என்கிறீர்கள்?"

"வேறொன்றுமில்லை; எங்கள் வீட்டுக்கு வராமல் இருந்திருக்கக் கூடாது என்கிறேன்!"

"என்னால் உங்களுக்கு எந்தவிதமான சிரமமும் ஏற்பட்டுவிடக் கூடாதல்லவா? அதனால்தான் வரவில்லை!"

"சிரமம் என்ன சிரமம்! நீர் ஒரு விதத்தில் எனக்குச் சிரமம் கொடுத்தால், இன்னொரு விதத்தில் நான் உமக்குச் சிரமம் கொடுத்துவிட்டுப் போகிறேன். ஆனால் ஒன்று; ஒருவருக்கொருவர் கொடுத்துக்கொள்ளும் சிரமம் உபயோகமுள்ளதாயிருக்கவேண்டும் - அவ்வளவுதான் விஷயம்!"

"அதாவது, முடிந்தவரை ஒருவரையொருவர் உபயோகித்துக் கொண்டு காரியவாதிகளாக வாழவேண்டும். அப்படித்தானே?"

"பேஷ்! இவ்வளவு சீக்கிரத்தில் என்னுடைய 'உலக மகா தத்துவ'த்தை நீர் எப்படியோ புரிந்து கொண்டு விட்டீரே?"

"இத்தனை நாட்களாக உங்களுடன் பழகும் நான் இதைக்கூடப் புரிந்து கொள்ள முடியாதா, என்ன?"

"ரொம்ப சந்தோஷம், இம்மாதிரி விஷயங்களில் உண்மையை ஒப்புக் கொள்பவர்கள் உலகிலேயே ஒரு சிலர்தான் இருக்கமுடியும். அவர்களில் ஒருவனே நான் என்பதை நீர் இப்பொழுதாவது உணர்ந்தீரே, அதுவே போதும் எனக்கு!"

"நான் மட்டும் உணர்ந்தால் போதுமா? மக்கள் உணர வேண்டாமா? அவர்களிடமும் நீங்கள் இந்த உண்மையை ஒப்புக்கொண்டு விடலாமே?"

"என்னைப் பொறுத்தவரை நான் அதற்குத் தயாராய்த் தான் இருக்கிறேன். ஆனால் உண்மையைச் சொன்னால் அவர்கள் என்னை நம்பமாட்டார்களே. பரம்பரை பரம்பரையாகப் பொய்யையே நம்பி அவர்களுக்குப் பழக்கமாய்ப் போய்விட்டதே!"

"அதற்காக நாமும் பொய்யே பேசவேண்டுமா, என்ன?"

"அரசியல் உலகத்தில் பொய் பேசாமல் யாரும் வெற்றியடைந்து விடமுடியாது. உதாரணத்துக்கு இந்தச் சிறை வாழ்க்கையைத்தான் எடுத்துக் கொள்வோமே! இங்குள்ள கஷ்ட நஷ்டங்களைப் பற்றி வெளியே பல தேசபக்தர்கள் கண்ணீரும் கம்பலையுமாகக் கரடி விடுவதை நான் காதாரக் கேட்டிருக்கிறேன். இங்கே வந்து பார்த்தால் அப்படியொன்றும் இது மோசமானதாகத் தெரியவில்லை. முதன்முதலாகச் சிறைக்கு வந்திருக்கும் எனக்கே இப்படித் தோன்றுகிறதென்றால், உம்மைப் போல் பலமுறை வந்தவர்களுக்கு இதில் ஒன்றும் கஷ்டமே தோன்றாது. ஏதோ ஒரு காலத்தில் சிறையில் கஷ்ட நஷ்டங்கள் இருந்திருக்கலாம்; இப்பொழுது அப்படி யொன்றையும் காணோம். இன்னும் சொல்லப்போனால் ஏழைபங்காளர்கள் என்று சொல்லிக்கொண்டு இங்கே வருபவர்கள், இந்த அற்ப சொற்பமான கஷ்டத்தைக்கூட அனுபவிக்கவில்லையென்றால் அதில் அர்த்தமேயில்லை. ஆயினும் அவர்கள் ஏன் அப்படிக் கரடி விடுகிறார்கள்? பொது மக்களின் ஆதரவைப் பெறுவதற்காக ஐயா, பெறுவதற்காக!"

''சரி, அந்தக் கரடியை நான் விடப்போவதில்லை; அப்புறம்?''

''சாட்சாத் குற்றாலலிங்கந்தான் எனக்குத் துணை!''

''கேள்விப்பட்டேன். கேள்விப்பட்டேன்!''

''ஆஹா! அவரும் நானும் சந்தித்த அந்த நாள் இருக்கிறதே - அற்புதம், அபாரம்!''

''அப்படி என்ன நடந்தது, அங்கே?''

''அதை ஏன் கேட்கிறீர், 'பி.ஏ., பி.எல்.' குவாலிபிகேஷன் இருந்தால் போதுமா? 'சிறை சென்ற தியாகி' என்ற குவாலிபிகேஷன் வேண்டாமா, ஊரை ஏமாற்ற? அதற்காகச் சென்னைக் கடற்கரைக்கு நானும் உம்மைப்போல் உப்புக் காய்ச்சச் சென்றேன். அங்கே துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது - அவ்வளவுதான்; அதைத் திரும்பிப்பார்க்காமல் எடுத்தேன் ஓட்டம், வேதாரண்யத்துக்கு! அங்கே எங்களுக்கெல்லாம் சாப்பாட்டு வசதி செய்து கொடுத்த புண்ணியாத்மா யார் என்று பார்த்தால், சாட்சாத் குற்றாலலிங்கம்!''

''ஆமாம். நான்கூடப் பத்திரிகையில் பார்த்தேன்; அதற்கென்ன?''

''அதற்கென்னவா! சாப்பாட்டு வசதி செய்து கொடுத்ததோடு அவர் நின்றிருந்தால் ஒன்றுமில்லைதான்! ஆனால் அந்த மனுஷனுக்கோ எனக்கு வேண்டியிருந்தது போல் 'சிறை சென்ற தியாகி' என்ற குவாலிபிகேஷன் வேண்டியிருந்தது. அதற்காக வேதாரண்யம் செல்லவோ அவர் விரும்பவில்லை. இத்தனைக்கும் சென்னைக் கடற்கரையில் கேட்ட துப்பாக்கி வேட்டுச் சத்தங்கூட அங்கே கேட்கவில்லைதான்! இருந்தாலும் உயிராசை விடுகிறதா? மனுஷன் தவியாய்த் தவித்தார். அதற்குமேல் வேதாராண்யத்துக்குச் செல்லாமல் அவரைத் தியாகியாக்குவது எப்படி என்று நான் தீவிரமாக யோசித்தேன்; ஒன்றும் தோன்ற

வில்லை. நல்ல வேளையாக அப்போது எனக்குத் தெரிந்த பையன் ஒருவன் அங்கே வந்து சேர்ந்தான் - அவனும் அரசியல் வாதிதான். ஏதோ ஒரு சதி வழக்கில் சம்மந்தப்பட்டிருப்பதாக அவன் குற்றஞ்சாட்டப் பட்டிருந்தான்; போலீஸார் அவனைத் 'தேடு, தேடு' என்று தேடிக்கொண்டிருந்தார்கள். இதனால் தலைமறைவாகத் திரிந்துகொண்டிருந்த அவனுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுப்பதுகூடக் குற்றம் என்று சர்க்கார் அப்போது அறிவித்திருந்தார்கள். இந்த லட்சணத்தில் அவன் எத்தனை நாட்கள் தலைமறைவாயிருக்க முடியும்? அலுத்துப் போய்ப் போலீஸாரிடம் சரணடைந்து விடப் போவதாக அவன் என்னிடம் சொன்னான். கிடைத்த சந்தர்ப்பத்தை நான் நழுவ விடுவேனா? அவனைக் கொண்டு போய்க் குற்றாலலிங்கம் வீட்டில் சேர்த்து விட்டுப் போலீஸாருக் குத் தகவல் கொடுத்தேன். அடுத்த நிமிஷமே அவர்கள் வந்தார்கள்; அவனைப் பிடித்துக்கொண்டு சென்றதோடு, குற்றாலலிங்கத்தையும் பிடித்துக்கொண்டு சென்றார்கள். அவருடைய கனவு நனவாயிற்று; என்னுடைய கவலையும் தீர்ந்தது. அன்று மாலை வெளியான பத்திரிகைகளிலெல்லாம் அப்பழுக்கற்ற அந்தத் தியாகியின் பெயர் கொட்டை எழுத்துக்களில் பிரசுரமாயிற்று!''

''அட பாவிகளா!''

''கேளப்பா, புண்ணியவானே! குற்றாலலிங்கத்தை எனக்குப் பிடித்திருந்ததற்கு இது மட்டும் காரணமல்ல; இன்னொரு காரணமும் இருந்தது!''

''அது என்ன காரணம்?''

''அவருடைய செல்வக் குமாரனான சிவகுமாரன், யாருடைய கற்பையோ அழிக்கப்போய்ச் செத்தொழிந் தான் என்றல்லவா பத்திரிகைகளில் போட்டிருந்தது? ஆனால் குற்றாலலிங்கம் தாம் பேசும் கூட்டங்களிலெல்

லாம் என்ன சொல்கிறார், தெரியுமா? தம்முடைய அருமை மகன் தேசத்துக்காக அதைச் செய்தான், இதைச் செய்தான் என்று அவன் செய்யாதவற்றையெல்லாம் ஆதியோடந்த மாகச் சொல்லிவிட்டு, கடைசியில் ஒரு பேதைப் பெண்ணின் கற்பைக் காக்கப் போய்த் தன் உயிரையே அவன் தியாகம் செய்துவிட்டான் என்கிறார்!''

''ஊரார் சிரிக்கவில்லை?''

''அவர்கள் சிரித்தார்களோ என்னவோ, ஒரே ஒருத்தி மட்டும் சிரித்ததை நான் பார்த்தேன்!''

''அந்த மட்டும் ஒரு புத்திசாலிப் பெண்ணாவது அந்த ஊரில் இருந்தாளே?''

''அவள் வேறு யாருமில்லை; தன் கற்பைக் காக்க வந்த சிவகுமாரனை அநியாயமாகக் கொன்றுவிட்டுச் சிறைக்குச் சென்று வந்தவள்தான்!''

''அப்படிச் சொல்லுங்கள்; உண்மை அவளைத் தவிர வேறு யாருக்கும் தெரியவில்லையாக்கும்?''

''அதனால்தானே அவளுக்குப் பைத்தியம் பிடித்தது''

''என்ன, அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?''

''ஆமாம், உண்மை தெரிந்தால் பைத்தியம் பிடிக்காமல் வேறு என்ன பிடிக்குமாம்?''

''ஐயோ, பாவம்!''

''பாவமாவது! சிறையிலிருந்து வெளியே வந்ததும் செய்யாமங்கலத்தில் தம்முடைய அருமைக் குமாரனுக்காக, அல்லும் பகலும் 'தேசம், தேசம்' என்று அடித்துக் கொண்டிருந்தவனுக்காக அவர் ஞாபகச் சின்னம் வேறு நிறுவப் போகிறாராம்! அவரல்லவா அரசியல் ஞானி! அவரல்லவா தியாக சிகரம்!'' என்று விஷமத்தனமான புன்னகையுடன் அடுக்கிக் கொண்டே போனார் அவர்.

நான் பொறுமையிழந்து, "போதும், நிறுத்துங்கள்!" என்று கத்தினேன்; 'கலகல'வென்று நகைத்துக்கொண்டே அவர் வெளியே போய்விட்டார்.



மறுநாள் சாந்தினி வந்தாள். "என்னைப் பார்ப்பதற்காக இல்லை; செல்வத்தைப் பார்ப்பதற்காக?" என்றார் பாரிஸ்டர் பரந்தாமன்.

"இருவரையுந்தான்!" என்றாள் அவள். அடுத்தாற்போல் அப்பா 'ஏ' வகுப்புக் கைதியாகவும், நான் 'பி' வகுப்புக் கைதியாகவும் இருந்தது அவள் கவனத்தைக் கவர்ந்தது. "எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம் என்று வெளியே பிரசாரம் செய்கிறீர்களே, அந்தப் பிரசாரத்தை இங்கு ஏன் ஆரம்பிக்கவில்லை?" என்றாள் அவள் சிரித்துக்கொண்டே.

"அது வேறு விஷயம், இது வேறு விஷயம்" என்றேன் நான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, வெளியே சமதர்மப் பிரசாரம் செய்தால் அது சொந்த விஷயத்தைப் பாதிக்காது; இங்கே செய்தால் பாதிக்கும்!" என்றார் பரந்தாமனார் குறுக்கிட்டு.

இதைக் கேட்டதும் எனக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்துவிட்டது. "அப்படியானால் உயிரைத் துச்சமாக மதித்துப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு போராடும் நம் அருமைத் தலைவர்கள்கூடவா சுயநலத்தைக் கருதிச் சிறைக்குள் சமதர்மம் பேசாமல் இருக்கிறார்கள்?" என்று கன்னத்தில் அறைந்தாற்போல் கேட்டேன்.

''சந்தேகமென்ன, நாமும் காங்கிரஸ்காரர்களாதலால் அதைப்பற்றிப் பத்திரிகைகளில் எழுத முடியாமலும் பொதுக் கூட்டங்களில் பேசமுடியாமலும் இருக்கிறோம்!'' என்றார் அவர் அப்பொழுதும் விடாமல்.

''தலைவர் களைப் பற்றி நீங்கள் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!'' என்றேன் நானும் விடாமல்.

''நீர்தான் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்! உண்மையைச் சொல்லப்போனால் நம்முடைய தலைவர்கள் பொதுஜனத் தலைவர்களே அல்ல - ஏன் தெரியுமா? - அவர்களில் பெரும்பாலோர் பிறவித் தலைவர்கள்; பரம்பரை பரம்பரையாகப் பணத்திலே ஊறித் திளைத்தவர்கள்; சுகபோகத்தின் எல்லையையும் இறுதியையும் கண்டவர்கள்; அவர்களுக்கும் ஜனங்களுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் கிடையாது - கை தட்டுவதைத் தவிர!''

''என்ன! மகாத்மா காந்தியைக் கூடவா நீங்கள் அப்படிப்பட்டவர் என்கிறீர்கள்?''

''அவரை எப்படி அரசியல் தலைவர் என்று சொல்ல முடியும்? அரசியல் சந்நியாசி என்று வேண்டுமானால் சொல்லலாம்!''

''அப்படித்தான் இருக்கட்டுமே! அரசியல் தலைவர்களால் சாதிக்க முடியாத காரியத்தை அரசியல் சந்நியாசிகளால் சாதிக்க முடியும் என்று நான் சொல்கிறேன்!''

''சொல்லும் சொல்லும். ஆனால் நான் மட்டும் சொல்லத் தயாராயில்லை; ஏனெனில் அவர் அஹிம்ஸா வாதி!''

''அஹிம்ஸை வெற்றியடைய முடியாது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? நம் கண்ணுக்கு முன்னாலேயே அது எத்தனையோ வெற்றிகளை அடைந்திருக்கிறதே!''

''ஆமாம், மகாத்மா காந்திக்கு முன்னால் இயேசுவும் புத்தருங்கூட அஹிம்ஸையில் வெற்றியடைந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய வெற்றியெல்லாம் ஆரம்ப வெற்றியாகத்தான் இருந்திருக்கிறது, என்பதை நீர் மறந்துவிடக் கூடாது!''

''ஏன், இன்றளவும் அவர்களுடைய பெயர் நிலைத்துத் தானே இருக்கிறது?''

''பெயர் நிலைத்துத்தான் இருக்கிறது; கொள்கை நிலைக்கவில்லை?''

''அதற்கு அவர்கள் என்ன செய்வார்கள்? மக்கள் அவர்களைக் கடவுள்களாக்கி விட்டதோடு நின்று விட்டார்கள்!''

''அதையேதான் நானும் சொல்கிறேன்; மகாத்மா காந்தியைக்கூட இன்னுங் கொஞ்ச நாட்களுக்கெல்லாம் மக்கள் கடவுளுடைய ஜாபிதாவில் சேர்த்துவிட்டு வழக்கம் போல் தங்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள்!''

''அதனால் அவருக்கென்ன நஷ்டம்? மக்களுக்கல்லவா நஷ்டம்?''

இந்தச் சமயத்தில் சாந்தினி இடைமறித்து, ''அந்த நஷ்டம் ஒரு பக்கம் இருக்கட்டும்; இப்போது எனக்கு நேரம் நஷ்டமாகிக்கொண்டே இருக்கிறதே, அதற்கு என்ன சொல்கிறீர்கள்?'' என்றாள்.

''இப்போதெல்லாம் என்னுடன் பேசினால் உனக்கு நேரம் நஷ்டமாவதுபோல்தான் இருக்கும்; நான் வேண்டுமானால் வெளியே போய்விடட்டுமா?'' என்றார் பாரிஸ்டர் பரந்தாமன்.

''நீங்கள் போனால் நானும் போய்விடுவேன்!'' என்றாள் சாந்தினி.

"நீ மட்டுமா, செல்வத்தையும் அழைத்துக் கொண்டா?" என்றார் அவர்.

"போங்கள், அப்பா! நான் அழுவேன்!" என்றாள் அவள்.

"இப்படித்தான் சித்ராவும் சொன்னாள்; இப்போது அவள் சிரித்துக் கொண்டிருக்கிறாள்" என்றார் அவர்.

அவ்வளவுதான்; "அவளை நீங்கள் பார்த்தீர்களா, அப்பா?" எப்போது பார்த்தீர்கள்? எப்படி இருக்கிறாள்?" என்று ஆவலுடன் கேட்க ஆரம்பித்துவிட்டாள் சாந்தினி.

"வேதாரண்யத்துக்குச் செல்லும் வழியில் பார்த்தேன். அவள் எவ்வளவு தூரம் விஷயம் தெரிந்தவள் என்பதை என்னால் அப்பொழுதுதான் புரிந்துகொள்ள முடிந்தது. அவர்கள் இருவரும் தங்கள் கிராமத்தில் அக்கம் பக்கம் தெரியாமல் தொண்டு செய்து வருகிறார்கள். ஹரி ஜனங்களுக்கு அவர்கள் கோயிலைத் திறந்துவிடவில்லை; அதற்குப் பதிலாகத் தங்கள் வீட்டைத் திறந்து விட்டு அதில் ஒரு பக்கத்தில் அவர்களைக் குடியிருக்கச் செய்திருக் கிறார்கள். தங்களுக்குச் சொந்தமாயிருந்த நிலத்தில் பெரும் பகுதியைத் தங்களிடம் வேலை செய்து வந்த விவசாயிகளுக்குப் பகிர்ந்து கொடுத்திருக்கிறார்கள். தங்களால் இயன்றவரை அங்குள்ளவர்கள் எழுத்தறிவு பெறவும் வழிகாட்டியிருக்கிறார்கள்!"

"சரிதான், காந்தி மகானின் நிர்மாணத் திட்டமே அதுதானே?" என்றேன் நான்.

"அதுதான் இல்லை; அவள் அதைக் கட்டை வண்டித் திட்டம் என்கிறாள். அது மட்டுமல்ல; மனிதன் ஆகாய விமானத்தில் பறக்கும் இந்த நாளில் அது வெறுங் கேலிக்கூத்து என்பதும் அவள் அபிப்பிராயமாகும்."

"என்ன!"

"ஆமாம். 'சுயராஜ்யம், சுயராஜ்யம்' என்று நாம் அடித்துக்கொள்கிறோமே, அந்த விஷயத்தில்கூட அவளுடைய அபிப்பிராயம் மாறுபடுகிறது. 'சுயராஜ்யம்' வெறும் அதிகார மாற்றமாய்த்தான் இருக்கும் என்று அவள் நினைக்கிறாள். ஒடுக்கப்பட்ட - ஏன், ஒதுக்கப்பட்ட மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்று விரும்புபவன் சட்டத்தை மீறவேண்டுமென்ற அவசியம் இல்லை; மீறாமலே தொண்டு செய்யலாம். புரட்சி சட்டத்தில் வேண்டியதில்லை; மனத்தில் தான் வேண்டும் என்பது அவள் கட்சி. அந்தக் கட்சியில் இப்போது அவள் கணவனான கண்ணனும் சேர்ந்துகொண்டு விட்டான்; சேர்க்கப்பட்டு விட்டான்!" என்றார் பரந்தாமனார்.

அதைக் கேட்டதும், "அப்பா, அப்பா! நானும் ஒரு மாத காலம் சித்ராவுடன் போய் இருந்துட்டு வரட்டுமா, அப்பா?" என்றாள் சாந்தினி.

"கட்டாயம் போ, அம்மா! நீ அவசியம் அவளைப் பார்க்க வேண்டும் அவளிடம் நீ தெரிந்து கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது!" என்றார் அவர்.

"தெரிந்து கொள்ளுங்கள்; யார், யாரிடம் என்ன தெரிந்து கொள்ள வேண்டுமோ, தெரிந்து கொள்ளுங்கள்!" என்றேன் நான்.

# 19. மானத்துக்கு மரியாதை

அதற்குப் பின் ஏழாவது முறையாக நான் சிறையை விட்டு வெளியே வந்தபோது காங்கிரஸ் மகாசபை தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்தது. பதவியைக் கைப்பற்ற வேண்டுமென்பதில் பலமான போட்டி இருந்தது. அதுவரை தேசத்துக்காக ஒரு சிறு துரும்பைக்கூட எடுத்துப் போடாத ஜரிகைத் தலைப்பாகைக்காரர்கள் திருடர்களைப் போலப் புழக்கடை வழியாக வந்து காங்கிரஸில் சேர்ந்தார்கள். கட்சியின் கட்டுப்பாடும் ஒழுங்கும் நாளுக்கு நாள் குலைந்து வந்தன. கட்சிக்குள் கட்சியாகப் பல கட்சிகள் முளைத்தன. காந்தி மகாத்மா மனமுடைந்து காங்கிரஸிலிருந்து விலகினார். ஆயினும், வேண்டும்போதெல்லாம் அவருடைய சேவையைக் காங்கிரஸ் மகாசபை விரும்பிப் பெற்று வந்தது.

நானும் காங்கிரஸ்காரன் என்ற முறையில் தேர்தல் பிரசாரத்தில் தீவிரமாக இறங்கினேன். என்னைப் போன்ற தொண்டர்களுக்கெல்லாம் அப்போதிருந்த ஆசை ஒன்றே ஒன்றுதான். அதாவது, காங்கிரஸ் பெருவாரியான வெற்றி யடைய வேண்டும்; அந்த வெற்றியைக் கண்டு பிரிட்டிஷ் சர்க்கார் கிலியடைய வேண்டும் - இந்த ஆசையின் காரணமாக நாங்கள் இரவு பகல் என்று பாராமல் வேலை செய்து வந்தோம். எங்களுக்கு வேண்டிய ஊக்கத்தையும் உற்சாகத்தையும் பண்டிதர் நேரு, தீரர் சத்தியமூர்த்தி போன்றவர்கள் அவ்வப்போது அளித்து வந்தார்கள்.

பாரிஸ்டர் பரந்தாமனோ எங்களைப் போன்ற தொண்டராயிருக்கவில்லை; சிறையிலிருந்து வெளியே

வந்ததும் அவர் எப்படியோ அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவராகி விட்டார். அவரைப் பின் பற்றித் தஞ்சை குற்றாலலிங்கமும் தமிழ் நாட்டுத் தலைவர்களில் ஒருவராகிவிட்டார். இருவரும் சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் வடநாட்டுத் தலைவர்களை வருந்தி வருந்தி அழைத்துத் தங்கள் வீட்டில் விழுந்து விழுந்து விருந்துவைத்தார்கள். தாங்கள் இல்லையென் றால் தமிழ் நாட்டுக் காங்கிரஸே அஸ்தமித்து விடும் என்ற தவறான அபிப்பிராயத்துக்கு அவர்களை உள்ளாக்கி னார்கள். அதன் காரணமாகத் தேர்தலில் இருவரும் அபேட்சகர்களாக நிற்பதற்கு எந்த விதமான ஆட் சேபணையும் இல்லாமல் போயிற்று. காங்கிரஸ் சார்பில் கழுதையை நிறுத்தி வைத்தாலும் வெற்றி பெறும் என்று சொல்லிக்கொண்டிருந்த அந்தக் காலத்தில் எதிர் பார்த்த வெற்றியும் அவர்களுக்கு ஏமாற்றமில்லாமல் கிடைத்தது.

அதற்குப் பிறகு கேட்க வேண்டுமா? தங்களுடைய அந்தஸ்தின் காரணமாக இருவரும் மாகாண மந்திரிகளா யினர். அவர்களுடைய அந்தஸ்துக்கு முன்னால் என்னைப் போன்றவர்களின் சேவை, தியாகம், தேசபக்தியெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன.

நானோ அந்தஸ்து என்பது அறிவையும் ஒழுக்கத்தை யும், நாணயத்தையும் யோக்கியதையையுந்தான் குறிக்குமென்று அன்றுவரை எண்ணியிருந்தேன். அது பணம் ஒன்றைத்தான் குறிக்கும் என்பதை இன்றுதான் உணர்ந்தேன்.

ஆம், உலகத்தாருக்கு முன்னால் பணம் அறிவில்லாத வனை அறிவுள்ளவனாகக் காட்டுகிறது; ஒழுக்கமில்லாத வனை ஒழுக்கமுள்ளவனாகக் காட்டுகிறது; நாணயமில் லாதவனை நாணயமுள்ளவனாகக் காட்டுகிறது; யோக்கியதை இல்லாதவனை யோக்கியதையுள்ளவனாகக்

காட்டுகிறது; இதன் காரணமாக அறிவும் ஒழுக்கமும் உள்ளவர்கள், நாணயமும் யோக்கியதையும் மிக்கவர்கள் தங்கள் காலமெல்லாம் வருந்தி வருந்தி அணுவணுவாகச் சாக வேண்டியிருக்கிறது!

இத்தகைய வருத்தத்துக்கு நாளடைவில் நானும் ஆளானேன். ஆனால் என்னை அணுவணுவாகக்கொன்று விடக்கூடிய சக்தியை அந்த வருத்தத்துக்குச் சாந்தினி அளிக்கவில்லை - ஆம், மந்திரி குமாரியான பிறகும் அவள் அளிக்கவில்லை. அவளுடைய இனிய பேச்சும் இதயத்தை மலரவைக்கும் சிரிப்பும் என்னுடைய வருத்தத் தைப் போக்கி வாழ்க்கையில் ஓரளவு மகிழ்ச்சியும் எதிர்காலத்தில் ஓரளவு நம்பிக்கையும் கொள்ள வைத்தன. அதற்கேற்றாற்போல் திரு. பரந்தாமனார் கனம் பரந்தாமனா ரான பிறகும் என்னைப் பொறுத்தவரை திரு. பரந் தாமனாராகவே இருந்தது வரவேற்கக் கூடியதாயிருந்தது.

ஆயினும், இப்பொழுதெல்லாம் அவரை வீட்டில் அடிக்கடி பார்க்க முடிவதில்லை. அவரை மட்டுமென்ன, அவருடைய இளையாளையும் பார்க்கமுடிவதில்லை. காரணம், தேசத் தொண்டு அவர்கள் இருவரையும் சேர்த்து இழுத்ததுதான்!

முக்கியமாக, நகரத்துப் பிரமுகர்கள் அடிக்கடி நடத்தும் தேநீர் விருந்துகளுக்கு அவர்கள் அவசியம் செல்ல வேண்டியிருந்தது - பார்க்கப்போனால் கனம் பரந்தாம னாரைப் போன்றவர்களுக்கு அதுதானே தேசத்தொண்டு? - அன்றும் அப்படித்தான் நடந்தது. வழக்கம் போல் பாரிஸ்டர் பரந்தாமனைக் காணாமல் 'காந்தி பவன'த்தை விட்டு நான் வெளியேறினேன். அப்போது வாசலில் கார் வந்து நின்றது. ஆனால் பரந்தாமனார் அதிலிருந்து இறங்கவில்லை; சாந்தினிதான் இறங்கினாள்.

''எங்கே அப்பாவைக் காணோம்?'' என்றேன் நான்.

''கொஞ்சம் பொறுங்கள் சொல்கிறேன்!'' என்று ஓடோடியும் சென்று காலண்டரைப் பார்த்துவிட்டு வந்து, ''இன்று ஹோட்டல் டிலக்ஸில் அவருக்குத் தேநீர் விருந்து!' என்றாள் அவள்.

''சரி, வந்தால் சொல், நான் வந்து போனதாக!'' என்று திரும்பினேன்.

''அதற்குள் என்ன அவசரம்? உட்காருங்கள்; இதோ வந்துவிடுகிறேன்!'' என்று சொல்லிவிட்டு அடுக்களைக்குச் சென்றவள், அடுத்த நிமிஷம் இரண்டு கைகளிலும் இரண்டு 'கப்' தேநீருடன் வந்து எனக்கு எதிரே உட்கார்ந்தாள்.

''இந்நேரத்தில் எனக்கு டீ எதற்காம்?'' என்றேன் நான்.

''பரவாயில்லை, சாப்பிடுங்கள்! நம்மைக் கூப்பிட்டு யார் தேநீர் விருந்து நடத்தப்போகிறார்கள்? நமக்கு நாமே நடத்திக்கொண்டால்தான் உண்டு!'' என்றாள், அவள்.

''நம்மால் அவர்களுக்கு ஆகவேண்டிய காரியமோ, அவர்களால் நமக்கு ஆகவேண்டிய காரியமோ ஒன்று மில்லையல்லவா?'' என்றேன் நான்.

இந்தச் சமயத்தில், ''பிரயோசனமில்லை; இத்தனை நாட்கள் சித்ராவிடம் சிட்சை பெற்று வந்தும் பிரயோசன மில்லை!'' என்று கைய்யை விரித்துக் கொண்டே பாரிஸ்டர் பரந்தாமன் உள்ளே நுழைந்தார்.

''நானும் கண்ணனா என்ன, சித்ராவின் சிட்சை என்னிடம் பலிப்பதற்கு?'' என்றேன் நான்.

''நீரும் கண்ணனாகாமல் சாந்தினியும் சித்ராவாகாமல் இன்னும் எத்தனை நாட்கள் தான் இருக்கப்போகிறீர்கள்? பேசாமல் ஏதாவது ஒரு வேலையையாவது பாருமே, ஐயா!''

''என்ன வேலை பார்ப்பதாம்?''

"அப்படி வாரும் வழிக்கு; எனக்கு வேண்டுமானால் காரியதரிசியாக இருக்கிறீரா?"

"வேண்டாம். எனக்கும் சிரமமாயிருக்கும்; உங்களுக்கும் சிரமமாயிருக்கும்!"

"கல்யாணமான பிறகுதானே அந்தச் சிரமமெல்லாம்? அதுவரை காரியதரிசியாக இருந்தால் என்னவாம்?"

"அதற்காகச் சொல்லவில்லை; உங்களுடன் என்னால் ஒத்துழைக்க முடியாது என்பதற்காகச் சொல்கிறேன்!"

"சரி, அரசாங்கத்தில் வேறு ஏதாவது உத்தியோகம் பார்க்கிறீரா?"

"அதற்கும் நீங்கள் தானே ஏற்பாடு செய்யவேண்டியிருக்கும்?"

"செய்கிறேன்; அதனாலென்ன?"

"பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ளவர்கள் தங்களுக்குத் தெரிந்தவர்களுக்காகச் சலுகை காட்டுவது விரும்பத் தக்கதல்லவே?"

"உண்மைதான்; வெளியே தெரிவது விரும்பத் தக்கதல்லதான்!"

"அது சாத்தியமா?"

"ஏன் சாத்தியமில்லை? கீழே கதர் வேட்டி இருக்கிறது; மேலே கதர்ச் சட்டை இருக்கிறது; நாவில் காந்தி நாமம் இருக்கிறது; தலையில் காந்திக் குல்லாய் இருக்கவே இருக்கிறது - இவற்றை மீறி என்னுடைய அயோக்கியத் தனம் எப்படி வெளியே தெரிந்துவிட முடியும்?"

"வெளியே தெரியாவிட்டாலும் உங்களுடைய மனச்சாட்சிக்காவது தெரியாதா?"

"அப்படி ஒன்று என்னுள் இருப்பதையே நான் தான் எப்பொழுதோ மறந்துவிட்டேனே, ஐயா!"

''மன்னிக்கவேண்டும்; நான் இன்னும் மறக்க வில்லை!''

''உமக்காக மறக்க வேண்டாம்; சாந்தினிக்காக மறந்துவிடுமே!''

''ஏன் சாந்தினி, உனக்காக அதை நான் மறந்துவிட வேண்டுமா?'' என்றேன் நான்.

''அதற்குப் பதிலாக என்னை வேண்டுமானால் மறந்து விடுங்கள்!'' என்றாள் அவள்.

''நாசமாய்ப் போச்சு!'' என்று நடையைக் கட்டினார் அவர்.



என்னுடைய கல்யாண விஷயத்தில் இவ்வளவு தூரம் நான் பிடிவாதமாக இருந்ததற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் நாடு விடுதலை அடையும் வரை நான் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருப்பதே நல்லதென்று எனக்குத் தோன்றிற்று. இந்தியா என்னும் பெரிய குடும்பத்தின் பிரச்னையே இன்னும் தீராமலிருக்கும் போது இன்னொரு சிறிய குடும்பத்தை நான் ஏன் ஏற்க வேண்டும்? இரண்டிலும் இன்பமும் உண்டு; துன்பமும் உண்டு. அவற்றில் ஏதாவது ஒன்றைத் தற்சமயம் கட்டிக் கொண்டு அழுதால் போதாதா?

இந்த நிலையில் நான் இருக்க, அந்தக் காலத்தில் இன்னொரு அதிசயமும் அங்கங்கே நிகழ்ந்து கொண்டிருந்தது. அதாவது, கல்யாணமான சிலர் இந்தியா சுதந்திரம் அடையும் வரை பிரம்மச்சாரிகளாக இருப்போம் என்று விரதம் பூண்டனர். இந்த விநோதமான விரதத்துக்கு ஆரம்பத்தில் காந்தி மகானின் ஆதரவும் ஓரளவு இருந்தது.

ஆனால் விரதம் பூண்டவர்களின் மனைவிமார் அதற்கு ஆதரவு காட்டவில்லை. காரணம், பெண்மைக்கு இயல்பான குழந்தை இன்பத்தை அவர்கள் விரும்பியதுதான். இந்தக் குற்றமற்ற விருப்பத்தை அறிந்த பிறகும் அவர்களுடைய கணவன்மார் தங்களுடைய விரதத்தைக் கைவிடவில்லை. ஆகவே, வேறு வழியின்றி அவர்களில் சிலர் மகாத்மாவின் மீது படையெடுத்தனர். என்ன செய்வார், காந்திஜி? உடனே அந்த அதிசயப் பிரகிருதிகளை வரவழைத்து, விரதத்தைக் கைவிடும்படி வேண்டிக் கொண்டார். அவர்களும் அதற்கு இசைந்தனர். கேலிக்கு இடமான இந்த விரத பங்கத்துக்கு ஆளாவதைக் காட்டிலும் விரதம் எடுத்துக் கொள்ளாமலிருப்பதே நல்லதல்லவா? அதைவிட விவாகம் செய்து கொள்ளாமலிருப்பதே நல்லதல்லவா?

அதிலும், என்னைப் போன்றவர்களுக்கு இன்னொரு சங்கடமும் இருந்தது. குடும்பத்துக்குத் தலைவனாயிருக்கும் ஒருவன் தேசத்துக்குத் தொண்டனாகவும் இருக்க வேண்டுமானால் அவனுக்குப் பணத்தைப் பற்றிய கவலையே இல்லாமலிருக்கவேண்டும். அந்தக் கவலை தான் எனக்கு அப்போது அல்லும் பகலும் அனவரதமும் இருந்து கொண்டிருந்ததே. இந்த லட்சணத்தில் கல்யாணம் வேறு செய்து கொண்டு என்னத்தைச் செய்ய?

ஆனால் எனக்காக ஒரு பெண் எவ்வளவு நாட்கள் காத்துக்கொண்டிருக்க முடியும்? அவள் காத்துக்கொண்டிருந்தாலும் அந்தப் பிரசித்தி பெற்ற 'நாலுபேர்' இருக்கிறார்களே, அவர்கள் காத்துக்கொண்டிருப்பார்களா? - இதுவும் ஒரு பிரச்னையாகத்தான் இருந்தது எனக்கு. எது எப்படியிருந்தாலும் முதலில் வரும்படிக்கு ஏதாவது வழி தேடிக் கொண்டால் தேவலை என்று தோன்றவே, அதைப் பற்றித் தீவிரமாக யோசித்தேன்.

சில தேசபக்தர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு நாள் இருபத்துநான்கு மணி நேரமும் தேசத்துக்காகவே உழைக்கிறார்கள். அதிலும் உள்ளூரில் இருந்து கொண்டே உழைக்கிறா..களா என்றால் அதுவும் இல்லை; அடிக்கடி வெளியூர் செல்கிறார்கள் - எப்படி? கால் நடையாகவா? - இல்லை - ரயிலில் ஏறிக்கொண்டு ஓடுகிறார்கள்; ஆகாய விமானத்தில் ஏறிக்கொண்டு பறக்கிறார்கள்; காரில் ஏறிக்கொண்டு அலைகிறார்கள் - இத்தனைக்கும் அவர்களுடைய உடம்பு கொஞ்சமாவது இளைக்கிறதா? - கிடையாது; கிடையவே கிடையாது. அதற்குப் பதிலாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பருத்துக்கொண்டே வருகிறது; அவர்களுடைய குடும்பமும் எந்தவிதமான கவலையுமின்றித் தழைத்துக் கொண்டே வருகிறது; அதற்கு வேண்டிய செல்வமும் பெருகிக் கொண்டே வருகிறது - இது எப்படி? - வரும்படியில்லாமல் இப்படியும் ஒருவன் வாழ முடியுமா? இப்படியும் ஒருவன் தேசத் தொண்டனாயிருக்க முடியுமா? - இதுதான் எனக்குப் புரியாத புதிராயிருந்தது!

தலைவர்களைக் கண்டால் விழுந்தடித்துக் கொண்டு போய் மாலை போடுவதும், அவர்கள் ஏதாவது சொல்வதற்கு முன்பே கை தட்டுவதும் தவிர நமக்கு இந்த அரசியல் உலகத்தில் வேறு என்ன தெரிந்து தொலைகிறது?

ஆகவே, வரும்படி உள்ள தேச பக்தனாக வாழ எனக்கு வழி தெரியவில்லை. காங்கிரஸின் பேரால் தேர்தலில் வேண்டுமானால் போட்டியிடலாம்; அதன் பயனாக ஏதாவது ஓர் அங்கத்தினர் பதவியையாவது கைப்பற்றலாம்; அதைக் கொண்டு காலத்தை ஒருவாறு தள்ளலாம் என்று பார்த்தாலும் அங்கே என்னைப் போன்றவர்களை நெருங்கவே விடமாட்டோம் என்று சொல்லி விட்டார்கள்!

சர்க்கார் உத்தியோகமோ எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. சுதந்திர சர்க்காரில் வேண்டுமானால் உத்தியோகம் பார்க்கலாம். அடிமை சர்க்காரில் உத்தி யோகம் பார்க்கலாமா? அப்படிப் பார்ப்பதாயிருந்தால் நானும் பரந்தாமனாரைப்போல் கொஞ்ச காலம் வக்கீலாகவே இருந்து, போதுமான பணம் சேர்ந்த பிறகு அந்தத் தொழிலை விட்டிருக்கலாமே?

சரி, தனிப்பட்டவர்களுடைய கம்பெனிகளில் ஏதாவது வேலை பார்க்கலாமென்றால் அதற்கும் ஒரு தடை இருந்தது. காந்தியத்தின் அடிப்படையில் எந்தக் கம்பெனி யாவது இயங்க முடியுமா? அப்படி இயங்கினால் அதனுடைய முதலாளி மகாத்மாவைப்போல் அரை நிர்வாணப் பக்கிரியாகத்தானே ஆக வேண்டியிருக்கும்? அத்தகைய வாழ்வை யார் விரும்புவார்கள்? விரும்பாதவர் களிடம் நான் எப்படி வேலை பார்ப்பது?

சொந்த வியாபாரம் ஏதாவது செய்யலாமென்றாலோ சத்தியத்திற்கும் அதற்கும் ரொம்ப ரொம்ப தூரம்; இல்லையா?

இப்படியெல்லாம் எண்ணிப் பார்த்த பிறகு, பிரைவேட் வாத்தியாராக இருந்து காலந் தள்ளுவதுதான் தேவலை என்று எனக்குத் தோன்றிற்று. அதற்குள் காங்கிரஸ் ஏதாவது போராட்டம் ஆரம்பித்தால் சர்க்கார் என்னை விருந்தாளியாக ஏற்று உபசரிப்பார்களல்லவா?

இந்த யோசனை பரந்தாமனாருக்குப் பிடிக்கவில்லை யென்றாலும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எந்த விதமான வரும்படியும் இல்லாமலே அவர் என்னை ஆதரிக்கத் தயாராயிருந்தாரென்றாலும் எனக்கு அது பிடிக்கவில்லை. அதே சமயத்தில் வயிற்றுக் கவலையைத் தீர்த்துக் கொள்வதற்காக அடிக்கடி நண்பர்களை நாடுவதும் எனக்கு என்னவோபோல் இருந்தது. சாந்தினியைப்போல்

எதிர்பாராமலே உதவி செய்ய வேறு யாராவது முன் வருவார்களா, என்ன?

அதற்கேற்றாற்போல் பாரிஸ்டர் பரந்தாமனை நண்பராகப் பெற்றிருந்த எனக்கு, பாடம் சொல்லிக் கொடுக்க நான்கு பெரிய மனிதர் வீடுகள் கிடைப்பதில் சிரமம் ஒன்றும் ஏற்படவில்லை. எனவே, உற்சாகத்துடன் நான் அந்தத் தொழிலில் இறங்கிக் கவலையின்றிக் காலத்தைக் கழித்து வந்தேன்.

ஒரு நாள் செங்கமலத்தின் தாயார் தன் பேரனை அழைத்துக் கொண்டு என்னைத் தேடி வந்தாள். அவளை வரவேற்று, "என்ன விஷயம்?" என்று விசாரித்தேன்.

"இந்த மாதம் பிறந்தால் இவனுக்கு வயது ஐந்தாகிறது; ஏதாவது ஒரு பள்ளிக்கூடத்தில் இவனைச் சேர்த்து விட்டால் தேவலை!" என்றாள் அவள்.

"அதற்கென்ன, சேர்த்துவிட்டால் போச்சு!" என்று சொல்லிவிட்டு," ஏண்டா, உன் பெயர் என்ன?" என்று நான் அவனைக் கேட்டேன்.

"சிவகுமார்!" என்றான் அவன்,

"அடி, சக்கை! அம்மாவின் பெயர்?"

"செங்கமலம்!"

"எங்கே உன் மாமா?"

அதற்குள் அவன் பாட்டி குறுக்கிட்டு, "அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்கள்? அவன் தான் வீணாய் போய்விட்டானே!" என்றாள் வருத்தத்துடன்.

"ஏன், அவன் வீட்டுக்கு வருவதில்லையா?"

"எங்கே வருகிறான், வந்தாலும் எங்கே நிற்கிறான்? ஏதோ முணுமுணுத்துக் கொண்டே வருகிறான், ஏதோ முணுமுணுத்துக்கொண்டே போகிறான்!"

"போகட்டும்; வீட்டுக்கு ஒருவன் அவனைப் பின் பற்றிச் சாகட்டும்!"

"செத்தவர்கள் செத்தார்கள்; இவன் ஏன் சாக வேண்டுமாம்!"

"இருப்பவர்கள் மானத்தோடு வாழ்வதற்காக, ஈனர்களுக்கு முன்னால் அந்த மானத்துக்கு மரியாதை செலுத்துவதற்காக!"

அவ்வளவுதான்; "செலுத்திவிட்டேன், செல்வம் மானத்துக்கு நான் மரியாதை செலுத்திவிட்டேன்!" என்று கத்திக்கொண்டே, கையில் ரத்தம் தோய்ந்த கத்தியுடன் உள்ளே நுழைந்தான் பாலு.

அந்தக் கோலத்தில் அவனைக் கண்டதும் ஆ! என்று அலறிவிட்டாள் செங்கமலத்தின் தாயார். அவளுடைய வாயை நான் சட்டென்று பொத்திவிட்டுத் திரும்பினேன். அதற்குள், 'இனி நான் சட்டத்துக்கு மரியாதை செலுத்த வேண்டும்; இனி நான் சட்டத்துக்கு மரியாதை செலுத்த வேண்டும்" என்று மறுபடியும் கத்திக் கொண்டே அவன் வெளியே போய்விட்டான்.

# 20. என் குருநாதர்!

காலவெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்ட எத்தனையோ துன்பங்களில் பாலுவைப் பிரிந்த துன்பமும் ஒன்றாயிற்று. இந்த நிலையில் என்னைப் போன்றவர் களின் சோர்வைப் போக்கும் திருப்பணியில் அடால்ப் ஹிட்லர் இறங்கினார். அதன் பயனாக இரண்டாவது உலக மகாயுத்தம் மூண்டது. பிரிட்டிஷ் சர்க்கார் வழக்கம் போல் இந்தியா நம்முடைய தேசம் என்பதை ஒப்புக்கொள்ள

வில்லை; தங்களுடைய தேசமாகவே கருதி அதையும் யுத்தத்தில் இழுத்து விட்டுவிட்டனர். இந்த அக்கிரமத்தைக் கண்டு காங்கிரஸ் மகாசபை வெகுண்டெழுந்தது. காந்தி மகாத்மாவின் தலைமையில் மீண்டும் போர்க் கோலம் பூண்டது. அதன் பயனாக ஆரம்பிக்கப்பட்ட தனிப் பட்டோர் சத்தியாக்கிரகத்தில் வினோபா பாவே சர்க்காரின் முதல் விருந்தாளியானார். அவரைத் தொடர்ந்து பலர் சிறைக்குச் சென்றனர். பாரிஸ்டர் பரந்தாமனுக்கும் அந்தப் பாக்கியம் கிடைத்தது. ஆனால் என்னைப் போன்றவர் களுக்கோ? - அதுவும் கிட்டவில்லை. ஏன்? நாங்கள் சத்தியாக்கிரகம் செய்யவில்லையா? செய்யத்தான் செய்தோம். ஆனால் சர்க்கார் எங்களைக் கைது செய்ய வில்லை; அதற்குப் பதிலாக லாரியில் ஏற்றிக் கொண்டு போய்ப் போக்குவரத்துக்கு வசதியில்லாத காட்டில் விட்டுவிட்டு வந்து விட்டார்கள்.

இந்த ஏமாற்றத்தால் வேறுவழியின்றி நான் மீண்டும் வாத்தியார் வேலையைக் கவனிக்கலானேன். மூன்று மாதங்களுக்குப் பிறகு விடுதலையடைந்த பாரிஸ்டர் பரந்தாமன் என்னைக் கண்டதும், ''நீர் எப்பொழுது விடுதலை அடைந்தீர்?'' என்றார் வியப்புடன்.

எனக்கோ எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போலிருந்தது. இருந்தாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''நான் தான் சிறைக்கே செல்லவில் லையே?'' என்றேன் உடைந்த உள்ளத்துடன்.

''ஏன், இம்முறை நீர் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ளவில்லையா?''

''கலந்து கொண்டதென்னவோ உண்மைதான்; கைது தான் செய்யவில்லை!''

அப்படியானால் தயவுசெய்து என்னுடைய அனுதாபத்தை ஏற்றுக் கொள்ளும்'' என்றார் பரந்தாமனார்.

"எதற்கு?"

"உம்மைக் கைது செய்யாமலிருந்ததற்குத்தான்!"

"எப்பொழுதுமே என்னைப் போன்றவர்கள் உங்களைப் போன்றவர்களுடைய அனுதாபத்துக்கு உரியவர்களாகத் தானே இருந்திருக்கிறார்கள்" என்றேன் நான்.

"அதற்குக் காரணம் நாங்களல்ல, நீங்கள் தான்!"

"அது எப்படி?"

"அசட்டுத்தனமாக உம்மைப் போன்றவர்கள் நடந்து கொள்கிறார்கள்; அதனால் என்னைப் போன்றவர்களுடைய அனுதாபத்துக்கு உரியவர்களாகிறார்கள்!"

"அப்படி நான் என்ன அசட்டுத்தனமாக நடந்து கொண்டு விட்டேன்?"

"என்னைக் கேளாமல் நீர் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்டீரே, அந்த அசட்டுத்தனம் ஒன்றே போதாதா!"

"உங்களைக் கேட்டிருந்தால் என்ன செய்திருப்பீர்கள்?"

"சத்தியாக்கிரகம் வெற்றியை நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில் உம்மையும் மூன்றுமாத காலமாவது சிறை வாசம் செய்ய வைத்துச் சத்தியத்தின் பாதுகாவலனாக நிச்சயம் ஆக்கியிருப்பேன்!"

"இது என்ன கூத்து! சிறைக்குச் செல்வதற்குக் கூடவா இன்னொருவருடைய தயவு வேண்டும்?"

"அவசியம் வேண்டும்; அதிலும் காங்கிரஸ் மகாசபை அதிகாரத்தைக் கைப்பற்றத் துணிந்திருக்கும் இந்த நாட்களில் அதில்லாமல் முடியாது. இன்னும் சொல்லப் போனால் உமக்கு மட்டும் என்ன? மாஜி மந்திரியான

எனக்கே இன்னொருவருடைய தயவு வேண்டி யிருந்ததே!''

''என்ன!''

''மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்து விடாதீர்! எனக்கு மட்டும் மாஜிஸ்ட்ரேட்டின் தயவு இல்லாமலிருந்தால் என்னையும் உம்மைப்போல்தான் போகிற போக்கில் சர்க்கார் விட்டிருப்பார்கள்!''

''நிஜமாகவா சொல்கிறீர்கள்?''

''ஆமாம் ஐயா, ஆமாம்!''

''என்னால் நம்பவே முடியவில்லையே?''

''நீர் எதைத்தான் நம்புகிறீர்? கண்ணுக்கு முன்னால் நடப்பதை நம்பும் வழக்கங்கூட உம்மைப் போன்றவர் களிடந்தான் கிடையவே கிடையாதே; பிடிக்க வேண்டிய வர்களைப் பிடித்து, பார்க்கவேண்டியவர்களைப் பார்த்து, கொடுக்க வேண்டியதைக் கொடுத்து.....''

அவர் முடிக்கவில்லை; அதற்குள் ஸ்நான அறையை நோக்கி விறுவிறுவென்று நடந்தேன். பாரிஸ்டர் பரந்தாமன் திடுக்கிட்டு, ''இந்நேரத்தில் ஸ்நானம் எதற்கு?'' என்று கேட்டார்.

''காங்கிரஸுக்கு!'' என்றேன் நான்.

''ஏன்?''

''என்னைப் போன்றவர்களுக்கு இனிமேல் அதில் இடமில்லாததால்!''

அவ்வளவுதான்; பாரிஸ்டர் பரந்தாமன் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்துவிட்டார். அவருடைய சிரிப்பைப் பொருட்படுத்தாமல் நான் ஸ்நானம் செய்து விட்டு வந்து, ''குருநாதா, எல்லா வகையிலும் தங்களைப்

பின்பற்ற துணிந்துவிட்ட என்னைத் தாங்கள் ஆசீர்வதிக்க வேண்டும்!'' என்றேன்.



மறுநாள் என்னைக் கண்டதும் நண்பர்களில் சிலர் சூழ்ந்து கொண்டார்கள்.

''வரவேணும், வரவேணும். நீங்கள் காங்கிரஸிலிருந்து விலகி விட்டீர்களாமே? இன்று காலைப் பத்திரிகையில் செய்தி வந்திருந்தது; உண்மைதானா?'' என்றான் ஒருவன்.

''இவரைப் போன்றவர்கள் காங்கிரசை விட்டு விலகி னால் தலைவர்கள் சும்மா இருப்பார்களா? 'தங்களுடைய ராஜினாமாவை உடனே ரத்துச் செய்யுங்கள் என்று தந்தி அடிப்பார்கள்'' என்றான் இன்னொருவன்.

''அடிப்பார்கள், அடிப்பார்கள்; அதைப் பொருட் படுத்தாமல் இவர், தம்முடைய ராஜினாமாவுக்குக் காரணம் இன்னதென்பதை விளக்கி அறிக்கை மேல் அறிக்கையாக விட்டுக் கொண்டே இருப்பார்; பத்திரிகைகளில் அது பத்தி பத்தியாக வெளியாகும்!'' என்றான் மற்றொருவன்.

''வெளியாகும் வெளியாகும், 'தீனபந்து' சாகாமல் இருந்திருந்தால் கட்டாயம் வெளியாகும்'' என்று சொல்லி விட்டுக் 'குபீ' ரென்று சிரித்தான் மற்றும் ஒருவன்.

''அப்படியானால் இவரைப் போன்றவர்கள் தங்களைப் பற்றி ஏதாவது எழுதிக்கொள்ள வேண்டு மானால் சொந்தப் பத்திரிகை அவசியம் இருக்க வேண்டு மென்று சொல்லுங்கள்'' என்றான் முன்னவன்.

''இல்லையென்றால் அ.பி. செய்தி ஸ்தாபனமும், யு.பி. செய்தி ஸ்தாபனமும் இவரிடம் போட்டி போட்டுக்

கொண்டா வந்து நிற்கப் போகின்றன'' என்றான் பின்னவன்.

எல்லோரும் 'கொல்' லென்று சிரித்தனர்.

நான் வாயைத் திறக்கவில்லை. ஏனெனில், இவர்கள் அனைவரும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள். இத்தகையவர்களுக்குப் பத்திரிகையே உலகம்; உலகமே பத்திரிகை. தனி மனிதனுடைய யோக்கியதை, ஒழுக்கம் இவற்றைப் பற்றி இவர்களுக்கு அக்கறையே கிடையாது. பத்திரிகையில் என்ன வருகிறதோ, அதுதான் வேதவாக்கு. வேத வாக்கில் எப்படி உண்மை கிடையாதோ, அப்படியே இன்றையப் பத்திரிகை உலகிலும் உண்மை கிடையாது என்பதை இவர்களைப் போன்றவர்கள் உணர்வதேயில்லை. அப்படி உணர்ந்தால்தான் உலகமும் உருப்படும்; இவர்களும் உருப்பட்டு விடுவார்களே!

எனவே, என்னைப் போன்றவர்கள் என்னதான் உண்மை நிலையை எடுத்துச் சொன்னாலும் இவர்களுக்குப் புரியவே புரியாது. இவர்கள் கண்டதே காட்சி; கொண்டதே கோலம்; ஒரே வார்த்தையில் சொல்லப் போனால், உலகத்தில் உண்மைக்கு இடமில்லாமல் போவதற்குக் காரணமே இவர்கள்தான். கீழ்த்தர வகுப்பார் 'படிக்காமல் கெட்டவர்கள்' என்றால், இதர வகுப்பார் படித்துக் கெட்டவர்கள் - அவ்வளவுதான் இவர்களுக்கும் அவர்களுக்குமுள்ள வித்தியாசம்!

இத்தகைய மக்கள் நிறைந்த உலகத்தைத் தன்னலமற்ற சேவையினாலோ, தியாகத்தினாலோ யாரும் வெற்றி கொள்ள முடியாது; பணத்தினாலும், பொய்யினாலுமே வெற்றி கொள்ள முடியும். இந்த உண்மையை அறிந்தவர்களுக்கு வாழ்வு; அறியாதவர்களுக்குச் சாவு!

நான் சாக விரும்பவில்லை; வாழ விரும்பினேன். என்னை நாணயத்தோடு வாழ உலகம் அனுமதிக்கவில்லை; எனவே என்னையும் என்னுடைய நாணயத்தை

யும் விழுங்கி ஏப்பம் விடுவதற்கு நான் அதை அனுமதித்தேன்.

எந்த ஸ்தாபனத்தையும் ஆரம்பத்தில் வளர்ப்பவர்கள் என்னைப் போன்ற சாதாரண மக்கள்தான். பின்னால் அதைப் பணக்காரர்கள் விலை கொடுத்து வாங்குவது போல் வாங்கி விடுகிறார்கள். அதற்குப் பிறகு என்னைப் போன்றவர்களுக்கு அதில் எங்கே இடமிருக்கிறது?

இந்த உண்மையை அறிந்து என்னிடம் அனுதாபம் கொண்ட ஜீவன் ஏதாவது ஒன்று இந்த அழகான உலகத்தில் உண்டு என்றால் அந்த ஜீவன் சாந்தினிதான். அவளைத் தவிர வேறு யாரையும் நான் பொருட்படுத்த வில்லை. ஏனெனில், எல்லாவற்றுக்கும் ஜீவாதாரமானது பணம் என்பதை இப்போது நான் உணர்ந்துகொண்டு விட்டேன். அந்தச் சர்வ வல்லமையுள்ள பணத்தைத் தேடுவதில் என்னுடைய கவனம் முழுவதையும் நான் செலுத்த ஆரம்பித்து விட்டேன்.

அதற்கேற்றாற்போல் அந்தக் காலத்தில் பணம் பண்ணுவது அவ்வளவு கடினமான காரியமாகவும் இல்லை. யுத்த காலத்தை முன்னிட்டுச் சர்க்கார் எடுத்ததற் கெல்லாம் 'காண்ட்ராக்ட்' என்றார்கள். குப்பை, கூளம் 'காண்ட்ராக்ட்' எடுத்தவர்களெல்லாம் குபேரர்களாகிக் கொண்டிருந்தார்கள். இத்தகைய 'காண்ட்ராக்ட்'களின் விஷயத்தில் பாரிஸ்டர் பரந்தாமனின் கவனமும் சென்றது. ஆனால் காங்கிரஸ்காரர்கள் யுத்தத்துக்கு எந்தவிதமான உதவியும் செய்யக் கூடாதென்று காந்தி மகானின் கட்டளை. எதிர்கால நன்மையை முன்னிட்டு அதை மீறப் பாரிஸ்டர் பரந்தாமன் விரும்பவில்லை; அதற்காக காங்கிரஸை விட்டுத் தலை முழுகவும் அவர் தயாராக யில்லை. எனவே, இந்த இரண்டுக்கும் மத்தியில் அவர் என்ன செய்வது என்று யோசித்தார். கடைசியில்

என்னுடைய உதவியை நாடினார். காங்கிரஸுக்கு முழுக்குப் போட்டிருந்ததோடு, சத்தியத்துக்கும் முழுக்குப் போட்டிருந்த நான், உடனே அவருடைய கோரிக்கைக்கு இணங்கினேன். அதன் பயனாக எந்த 'காண்ட்ராக்ட்' எடுத்தாலும் அதை என்னுடைய பெயரால் எடுப்பதென்றும், கிடைக்கும் லாபத்தை இருவரும் பங்கு போட்டுக் கொள்வதென்றும் முடிவாயிற்று.

''ஐயா, காங்கிரஸ்காரரே என்னைக் கொண்டு, நீங்கள் காண்ட்ராக்ட் எடுப்பதே பிசகு; அதில் கிடைக்கும் லாபத்தில் பங்கு பெறுவது அதைவிடப் பெரிய பிசகல்லவா?'' என்றேன் ஒருநாள் சிரித்துக் கொண்டே.

''உண்மைதான்; ஆனால் என்னுடைய வாழ்க்கையை மேலும் மேலும் உயர்த்திக் கொள்ள இன்னும் எத்தனை தவறுகள் வேண்டுமானாலும் செய்ய நான் தயாராயிருக்கிறேன். பார்க்கப்போனால் உலகத்தில் எது சரியான காரியம், எது தவறான காரியம் என்று தீர்மானிப்பது கடினம். உமக்குத் தவறாகத் தோன்றுவது எனக்குச் சரியானதாகத் தோன்றலாம்; எனக்குச் சரியாகத் தோன்றுவது உமக்குத் தவறானதாகத் தோன்றலாம் - இல்லையா?'' என்றார் அவர்.

''சொல்லுங்கள், சொல்லுங்கள். எதைச் சொன்னாலும் இப்போது நான் கேட்கத் தயாராயிருக்கிறேன். சொல்லுங்கள், சொல்லுங்கள்'' என்றேன் நான்.

''சொல்லுகிறேன், அவசியம் சொல்கிறேன். உம்மைப் போன்றவர்கள் எதிலும் சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். அதனால் அவர்கள் வெகு சீக்கிரத்தில் சாவை நெருங்கி விடுகிறார்கள. வாழ விரும்புபவன் எவனாயிருந்தாலும் சரி, எதிலும் பட்டும் படாமல் இருக்க வேண்டும். மனச் சாட்சிக்கு அவன் மறந்தும் இடங்கொடுத்துவிடக்கூடாது!''

‘‘குருநாதனின் சித்தம் எதுவானாலும் சீடனின் சித்தமும் அதுவே!’’ என்றேன் நான்.

‘‘பேஷ்! அப்படிச் சொல்லும்; அப்படிச் சொல்லும்!’’ என்று அவர் என்னைத் தட்டிக் கொடுத்தார்.

‘‘அப்புறம் கேட்க வேண்டுமா? சர்க்கார் புத்தம் புது நோட்டுகளை எங்களுக்கென்றே அச்சிட்டுத் தள்ளிக் கொண்டிருந்தார்கள். மனங் கொண்ட மட்டும் நாங்கள் வாரிக் குவித்தோம். மறு வருடமே எனக்கும் சாந்தினிக்கும் கல்யாணமாயிற்று. சித்ராவின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பாரிஸ்டர் பரந்தாமனை அவள் வாயார வாழ்த்தினாள்; அவரால்தான் அண்ணன் வாழக் கற்றுக் கொண்டதாக அவள் நம்பினாள் - உண்மையும் அதுதானே?’’

  

நண்பர் திரு. முருகு சுப்பிரமணியம் அவர்களை 'பொன்னி' வாசகர்களிடம் திண்டாட வைத்த கதையே 'கண் திறக்குமா?' கதை; அதற்காக நான் எடுத்த அவதாரமே 'நக்கீரன்' அவதாரம்!

ஏன் எடுத்தேன்? காலமெல்லாம் என்னைத் தொழுது, கடைசியில் இரணியன் கையிலோ முதலையின் வாயிலோ சிக்கிக்கொண்ட பக்தனைக் காப்பாற்றவா? இல்லை, என்னை நானே காப்பாற்றிக் கொள்ளத்தான்!

வாழ்வதற்காக வயிறு செய்யத் தூண்டும் எத்தனையோ தவறுகளில் அதையும் ஒன்றாகப் பாவித்து என்னை அன்று மன்னித்துவிட்ட ஆசிரியர் கல்கி அவர்களோ இன்று அமரராகி விட்டார்; அந்தத் தவறைத் தாம் செய்த தவறாகக் கருதி இன்னல் பலவற்றுக்கு உள்ளான திரு. முருகு சுப்பிரமணியம் அவர்களோ இன்று தமிழ்ப் பெரு மக்களால் நாடு கடத்தப்பட்டு விட்டார்! - ஆம், அவர்களுக்காக அசல் தமிழ்ப் பத்திரிகை யொன்றை நடத்தியதே அவர் செய்த குற்றம் - அதற்காகவே இன்று அவர் மலேயாவுக்கு அனுப்பப் பட்டிருக்கிறார்!

இந்நிலையில் நீண்ட நாள்களுக்குப் பின் நூல் வடிவம் பெற்று வரும் இக்கதை, என்னை இன்னும் என்ன பாடுபடுத்தப் போகிறதோ, தெரியவில்லை.

1.4.1956
சென்னை.

அன்பு,
விந்தன்

